**வரலாற்றுச் சுவடுகள் : திரைப்பட வரலாறு :**
**திரை இசையில் திருப்பம் உண்டாக்கிய இளையராஜா**
**கிராமிய இசைக்கு புத்துயிர் அளித்தார்**

தமிழ்த் திரையுலகில் 'இசை'யாகவே வாழ்ந்து கொண்டிருப்பவர் 'இசைஞானி' இளையராஜா. 1976–ம் ஆண்டு 'அன்னக்கிளி' மூலம் சினிமாவுக்குள் இசையமைப்பாளராக அடியெடுத்து வைத்த இளையராஜாவுக்கு, இசைத்துறையில் இது 31–வது ஆண்டு.

"அன்னக்கிளி" படத்தில் "அன்னக்கிளி உன்னைத்தேடுதே", "மச்சானைப் பார்த்தீங்களா" எனத் தொடங்கிய இந்த இசையருவி, நதியாக ஓடத்தொடங்கி இன்று கடல் அளவுக்கு தன் இசை எல்லையை விஸ்தரித்துக் கொண்டிருக்கிறது.

இளையராஜா பிறந்தது மதுரை மாவட்டத்தில் உள்ள பண்ணைபுரம் கிராமம். 1943–ம் ஆண்டு பெற்றோருக்கு ஐந்தாவது குழந்தையாகப் பிறந்தார். இவருக்கு அடுத்து ஆறாவதாக பிறந்தவர் அமர்சிங் என்ற கங்கை அமரன்.

தனது குடும்பம் பற்றி இளையராஜா கூறுகிறார்:

"நான் பிறந்தது மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த பண்ணைபுரம் என்னும் கிராமத்தில். இப்போது அது தேனி மாவட்டத்தில் உள்ளது.

அப்பா பெயர் ராமசாமி. அம்மா சின்னத்தாயம்மாள். ஊரில் அப்பாவை 'கங்காணி' ராமசாமி என்றால்தான் தெரியும். அப்பாவுக்கு இரண்டு மனைவிகள். இரண்டாவது மனைவிக்குப் பிறந்த குழந்தைகளில் நான் ஐந்தாவது. ஆறாவது என் தம்பி அமரன் (கங்கை அமரன்).

எங்களுக்கு மூத்த அண்ணன் பாவலர் வரதராஜன். அடுத்து அக்காள் கமலம். அடுத்து பத்மாவதி. அடுத்தவர் அண்ணன் பாஸ்கர்.

1943–ம் ஆண்டு நான் பிறந்தேன். தமிழில் வைகாசி மாதம் 20–ந்தேதி. (3–6–1943)

ஜோதிடம்

அப்பாவுக்கு ஜோதிடம் தெரியும். என் பிறந்த நேரத்தை கணித்த அப்பா, அம்மாவிடம் "இவன் நம் வீட்டிலேயே முக்கியமானவன். இவனால் சீரும் சிறப்பும் வருவதையெல்லாம் பார்த்து சந்தோஷம் அனுபவித்த பிறகுதான் நீ போவாய்" என்று கூறியிருக்கிறார்.

அப்பா சொன்னதில் உள்ள 'உள் அர்த்தம்' அம்மாவை பாதிக்கச் செய்துவிட்டது. "நீங்க என்ன சொல்றீங்க?" என்று பதட்டத்துடன் கேட்டிருக்கிறார்.

பதிலுக்கு அப்பா, "எல்லாம் இவன் ஜாதகத்தை கணித்த பிறகே சொல்கிறேன். இவனுக்கு 9 வயது வரும்போது நான் போய்விடுவேன்" என்று சொல்லியிருக்கிறார்.

அப்பா அவர் சொன்னதுபோலவே என் 9–வது வயதில் (1952–ம் வருஷம் ஏப்ரல் 10–ந்தேதி) காலமாகிவிட்டார். அப்பா இறக்கும்போது நான் நாலாவது படித்துக்

கொண்டிருந்தேன். உயிர் பிரியும் நேரத்தில் என் கையையும் அண்ணன் பாஸ்கரின் கையையும் பாவலர் அண்ணன் கையில் பிடித்துக் கொடுத்துவிட்டு, அண்ணன் தலையில் கை வைத்து ஆசீர்வதித்தார். அத்தோடு உலக வாழ்க்கையில் இருந்து விடைபெற்றுக்கொண்டார்.

ஞானதேசிகன்

எனக்கு அப்பா வைத்த பெயர் ஞானதேசிகன். ஆனால் பள்ளியில் சேர்க்கும்போது ராஜையா என்று மாற்றி விட்டார். ஆனால் 'ராசையா' என்றே எல்லோராலும் அழைக்கப்பட்டேன். பட்டிக்காடு அல்லவா! 'ராஜையா'வுக்கு பதில் ராசையாதான் அவர்களுக்கு சுலபம்.

நான் படிப்பிலும் பெரிய விசேஷம் கிடையாது. பண்ணைபுரத்தில் பெருமாள் வாத்தியார் என்பவர் ஒரு பள்ளிக்கூடம் நடத்தி வந்தார். அதில் ஐந்தாம் வகுப்பு வரைதான் இருந்தது.

பள்ளியில் மூன்றாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தபோதுதான் சினிமா பார்க்கும் வழக்கம் ஏற்பட்டது. ஊரில் ஒரு டூரிங் டாக்கீஸ் இருந்தது. அதில் நானும் பாஸ்கர் அண்ணனும் அடிக்கடி சினிமா பார்க்கச் செல்வது வழக்கமாகி விட்டது.

லைலா மஜ்னு

இப்படி பார்த்த ஒரு படம் பானுமதி, நாகேஸ்வரராவ் நடித்த "லைலா மஜ்னு." இந்தப் படத்தை பாடல்களுக்காக மூன்று நான்கு முறை பார்த்தோம். பாடல்கள் எல்லாம் எங்களுக்கு மனப்பாடமாகி விட்டது. அண்ணன் பாவலர் எப்போதுமே அந்தப் பாடல்களை பாடிக்கொண்டிருப்பார்.

அந்தப் படத்தில் வரும் ஒரு காட்சி எனக்குள் ஆழமாக பதிந்து விட்டது. ஆசிரியர் பாடம் எழுதச் சொல்ல, கயஸ் மட்டும் 'லைலா லைலா' என்று தன்னுடைய சிலேட்டில் எழுதிக்கொண்டிருப்பான். இதைப் பார்த்த ஆசிரியர் கயஸின் கையில் பிரம்பால் விளாசி விடுவார். கை புண்ணாகி விடும். எங்கள் வகுப்பிலும் ஆசிரியர் ஏதோ எழுதச் சொல்லியிருந்தார். முந்தின நாள் இரவு ஆட்டம் பார்த்த ஞாபகத்தில் சிலேட்டில் 'லைலா லைலா' என்று எழுதியிருந்தேன்.

என்ன நடந்தது தெரியுமா? படத்தில் கயஸுக்கு விழுந்த அடியை விட எனக்கு பலமாக அடி விழுந்தது. கயஸுக்கு வருத்தப்பட என் மாதிரி ரசிகர்கள் இருந்தார்கள். எனக்காக வருத்தப்படத்தான் யாருமில்லை.

இந்தப் படத்தின் பாடல்களால் – நான் வளர வளர, கயஸை விடவும் லைலா மீது எனக்கு காதல் அதிகமாகி விட்டது. அந்தப் படத்துக்கு சி.ஆர்.சுப்பராமன் இசையமைத்திருந்தார். பின்னாளில் இவரே என் மானசீக குரு ஆனார்.

அண்ணனுக்கு (பாவலர் வரதராஜன்) பாட்டு, நாடகம், கச்சேரி என்பதில் ஆர்வம் அதிகம். திருச்சி வானொலி நிலையத்தில் நிலைய வித்வானாக இருந்த மரியானந்த பாகவதரிடம் கொஞ்சம் சங்கீதம் கற்றிருந்தார். இசை எனக்கு அறிமுகமானதும், ஆர்வமானதும் அண்ணனால்தான். நான் ஓரளவுக்கு ராகங்கள் பற்றி தெரிந்து கொண்டதற்குக் காரணமும் அவர்தான். இப்படித்தான் எனக்கு ராகங்கள் கல்யாணியும், சங்கராபரணமும், கரகரப்பிரியாவும், தோடியும் அடையாளம் கண்டு கொள்ளக்கூடிய அளவுக்கு தெரிய வந்தது.

**நாடகத்தால் பறிபோன ஏலக்காய் 'எஸ்டேட்'!**

இளையராஜாவின் அப்பா இறந்த நேரத்தில் கேரளாவில்
25 ஏக்கர் ஏலக்காய் எஸ்டேட் சொந்தமாக இருந்தது. ஆனால் அதை விற்கும்படியான சூழ்நிலையும் இளையராஜாவின் தாயாருக்கு ஏற்பட்டது.

வாழ்க்கையை நாடகம் என்பார்கள். இளையராஜா வீட்டிலோ, 'நாடகம்'தான் இந்த திருவிளையாடலை செய்து முடித்து விட்டது.

அதுபற்றி இளையராஜாவே தொடருகிறார்:

"அப்பா இறந்த நேரத்தில், ஆறு குழந்தைகளோடு அம்மா ரொம்பவே சிரமப்பட்டார்.
அப்பா தானாக உருவாக்கிய
25 ஏக்கர் ஏலக்காய் எஸ்டேட் அப்போது எங்கள் குடும்பத்தின் சொத்தாக இருந்தது. அத்துடன் குடியிருந்த வீடும் சொந்தமாக இருந்தது. பண்ணைபுரத்தின் மேற்கே இருந்த குளத்தை நிலமாக மாற்றியதில், மூன்று ஏக்கர் நிலம் கைக்கு வந்தது.

நாடகம்

பாவலர் அண்ணனுக்கு கம்யூனிஸ்டு கட்சி மீது ஈடுபாடு ஏற்பட்ட நேரம் அது. கட்சிக்காக தன் சொந்த செலவில் நாடகம் எழுதி அரங்கேற்றினார். "இரு கொலைகள்", "பாட்டாளியின் குரல்" என்ற இந்த இரண்டு நாடகங்களுக்கும் அண்ணனே கதை, வசனம், பாடல்கள் எழுதினார். டைரக்ஷனும் அவரே. அதோடு நாடகத்தில் காமெடி நடிகர் வேஷத்தையும் அவரே செய்தார்.

இந்த நாடகத்தில் நடிக்க உள்ளூர், பக்கத்து ஊர் என்று சிலரை தேர்ந்தெடுத்தார். இன்னும் சில நடிகர் – நடிகைகளை, மதுரையில் இருந்தும் கேரளாவில் இருந்தும் தேர்ந்தெடுத்தார்.

நாடக ஒத்திகை எங்கள் வீட்டில்தான் நடக்கும். இந்த ஒத்திகை மட்டுமே ஒரு மாதத்துக்கு மேலாக தொடர்ந்தது. அத்தனை பேருக்கும் எங்கள் வீட்டில்தான் சாப்பாடு. அம்மாவும், அக்கா கமலமும் சமைத்துப்போட்டார்கள். தினமும் ஆடு, கோழி, மீன் என்று சமையல் அமர்க்களப்படும்.

சோதனை

நாடகம் நடக்க வேண்டிய தினத்தில்தான் சோதனை. நாடகத்தை காண்ட்ராக்ட் எடுத்திருந்த அண்ணனின் நண்பர் ஒருவர், டிக்கெட்டில் வசூலான பணத்தை எடுத்துக்கொண்டு 'எஸ்கேப்' ஆகிவிட்டார். நாடக மேடை மைக்கில், அவர் பெயரைச் சொல்லி "எங்கிருந்தாலும் உடனே மேடைக்கு வரவும்" என்று அறிவிப்பு செய்து கொண்டிருந்தார்கள்.

ஓடியவர் ஓடியவர்தான். என்றாலும் அரங்கம் முழுவதும் நிரம்பியிருந்த கூட்டத்தை ஏமாற்ற விரும்பாத அண்ணன், தனக்கே உரிய கலை ஆர்வத்தில் நாடகத்தை நடத்தி முடித்து விட்டார்.

நாடகம் முடிந்த பிறகுதான் பிரச்சினை. நாடகம் போட்ட தியேட்டருக்கு பணம், மைக்செட், மதுரையில் இருந்து வந்த சீன் செட்டிங்ஸ் மேக்கப் மேன், டிரஸ், விளம்பர

பேனர்கள், போஸ்டர்கள், டிக்கெட், நோட்டீஸ், பிரிண்டிங் சார்ஜ், விளம்பர வண்டிக்கு வாடகை, பேண்டு செட், பின்னணி இசை, ஆர்மோனியம், தபேலா, பாடகர் – பாடகி என இத்தனை பேருக்கும் பணம் பட்டுவாடா செய்தாகவேண்டிய நிர்ப்பந்தம். ஆனால், அண்ணன் தனக்கே உரிய மன உறுதியுடன் பணத்தை குறிப்பிட்ட தினத்தில் தருவதாக எல்லோரிடமும் உறுதிமொழி கொடுத்தார். அவர்கள் அண்ணனை நம்பினார்கள்.

இதில் தியேட்டர் மட்டும்தான் பண்ணைபுரம் கிராமத்துக்கு சொந்தமானது. தியேட்டர் வாடகைக்கு மட்டும் கிராமத்தினரை அழைத்து விஷயம் சொல்லி சமாளித்தார்.

ஆனால் மற்றவர்களுக்கு? அத்தோடு நாடக சம்பந்தப்பட்ட அத்தனை பேருக்கும் ஒரு மாதத்துக்கும் மேலாக சமைத்துப் போட்ட கடன்?

அண்ணனின் தர்ம சங்கடமான நிலையை அம்மா புரிந்து கொண்டார். அண்ணன், நாடகக்காரர்களுக்கு கொடுத்த வாக்குறுதியை காப்பாற்றும் நோக்கத்தில் அப்பா சுயமாக சம்பாதித்து வைத்திருந்த ஏலக்காய் தோட்டத்தை விற்கும் முடிவுக்கு வந்தார்.

அசோகவனம்

இன்று கோடிக்கணக்கான விலை மதிப்புள்ள அந்த ஏலக்காய் தோட்டத்தை அன்று அம்மா விற்றது வெறும் பத்தாயிரம் ரூபாய்க்கு. மகன் பட்ட கடனுக்காக சொத்தை விற்று பிரச்சினையை சரி செய்தார் அம்மா.

அந்த ஏலக்காய் தோட்டத்துக்கு அப்பா வைத்திருந்த பெயர் என்ன தெரியுமா? அசோகவனம்."

இவ்வாறு குறிப்பிட்ட இளையராஜா, இசையில் தனக்கு ஆர்வம் ஏற்பட்ட நிகழ்ச்சி பற்றி கூறியதாவது:–

இன்றைக்கிருக்கும் "கரோக்கி" சிஸ்டத்தை (திரை இசையுடன் சேர்ந்து பாடுவது) அந்தக் காலத்திலேயே பாவலர் அண்ணன் ஆரம்பித்து விட்டார். எனக்குத்தெரிய இந்த முறையைத் தொடங்கியவர் அண்ணனாகத்தான் இருக்கக்கூடும்.

ஒரு இசைத்தட்டை ஓடவிட்டதும் மியூசிக் தொடங்கும். அதில் பாடுகிற குரல் ஒலிக்கும் நேரத்தில் மைக்கில் அண்ணன் பாடுவார். இசைத் தட்டில் இருந்து எழுகிற வால்யூமை குறைத்து வைப்பார். இதில் என்னையும் பாட வைப்பார்.

"அமுதைப் பொழியும் நிலவே", "உலவும் தென்றல் காற்றினிலே", "திருவிளக்கு வீட்டுக்கு அலங்காரம்" – இப்படி பல பாடல்களை நானும் பாடியிருக்கிறேன்.

ஊர்த் திருவிழாக்களில், அவ்வப்போது ஆர்மோனியம் – மிருதங்கம் சகிதம் கச்சேரி செய்ய ஆரம்பித்தார், அண்ணன். இதில் ஆர்மோனியம் வாசிக்க, சாக்ராபுரம் என்ற ஊரில் இருந்து சங்கரதாஸ் என்பவர் வருவார். வீட்டில் ஒத்திகை நடக்கும்.

அவருடைய வாசிப்பில் நானும், பாஸ்கரும் அதிகமாக ஈர்க்கப்பட்டு, ஒரு கட்டத்தில் அவரது ரசிகர்களாகவே மாறிப்போனோம்.

பெருவிரல்

இப்படி இசையும், படிப்புமாக போய்க்கொண்டிருந்த நேரத்தில் எட்டாவது வகுப்பு வந்துவிட்டேன். அப்போது ஒரு நாள் அம்மா எங்கள் எல்லோருடைய ஜாதகங்களையும் பார்க்க விரும்பி, பழனிச்சாமி, சந்தானம் என்ற 2 ஜோதிடர்களை வரவழைத்திருந்தார்.

அந்த ஜோதிடர்களின் கணிப்பு தப்பியதே இல்லை. அத்தனை கச்சிதமாக இருக்கும்.

அந்த ஜோதிடர்கள் என் ஜாதகத்தை பார்க்கும்போது என்ன சொன்னார்கள் தெரியுமா? "இந்த ஜாதகன்தான் இந்த வீட்டுக்கு பெருவிரல் போல! ஆனால் இவன் எட்டாவதற்கு மேல் படிக்க முடியாது."

அதிர்ந்தே போனேன். ஆனால் அதுதான் நடந்தது.

**படிப்பைத் தொடர வேலைக்குப் போனார்**
**ஒரு நாள் சம்பளம் ஒரு ரூபாய்!**

பள்ளிக்கூடத்தில் படிப்பதற்கு பணம் திரட்டுவதற்காக இளையராஜா வேலைக்குச் சென்றார். ஒரு நாளைக்கு சம்பளம் ஒரு ரூபாய்!

எட்டாவது வகுப்புக்கு மேல் படிக்க முடியாது என்று ஊரின் பிரபல ஜோதிடர்கள் சொன்னதும், நொந்து போனார் இளையராஜா. ஆனாலும் நம்பிக்கை இழக்காமல் ஜோதிடர்களிடம் 'வார்த்தைப்போர்' செய்தார்.

அதுபற்றி இளையராஜா கூறியதாவது:—

நான் எட்டாவதை தாண்டமாட்டேன் என்று என் ஜாதகத்தை கணித்து ஜோதிடர்கள் சொன்னதும், அவர்கள் சொன்னதில் நம்பிக்கை ஏற்படாமல் "சரியாக பாருங்கள். என் ஜாதகத்தில் அப்படியா இருக்கிறது?" என்று தாஜா செய்து கேட்டேன்.

ஆனால் ஜோதிடர்களோ என்னைப் பற்றி கொஞ்சமும் கவலைப்படாமல், "உனக்கு எட்டாம் வகுப்புக்கு மேல் படிப்பே இல்லை" என்று திட்டவட்டமாகச் சொல்லிவிட்டார்கள்.

சவால்

எனக்கு கோபம் வந்துவிட்டது. அவர்களிடம் வாதம் செய்யத் தொடங்கினேன். "உங்களுக்கு சிலப்பதிகாரத்தில் வரும் இளங்கோவடிகளைத் தெரியுமா? அவர் சேரன் செங்குட்டுவனுக்கு இளையவர். 'மூத்தவன் இருக்க இளையவனுக்குத்தான் பட்டம் சூட்டப்படும்' என்று ஜோதிடம் சொன்னவர்களிடம் "உங்கள் ஜோதிடத்தை இப்போதே பொய்யாக்கிக் காட்டுகிறேன்" என்றவர், அந்த நிமிடத்திலேயே துறவி ஆகிவிட்டார். அவர் துறவி ஆனதால், சேரன் செங்குட்டுவனுக்கே பட்டம் சூட்டப்பட்டது. அதேபோல் உங்கள் ஜோதிடத்தை நானும் பொய்யாக்கிக் காட்டுகிறேன்" என்று சவால் விடுகிற தொனியில் பேசினேன்.

எட்டாம் வகுப்பில் முழுப் பரீட்சை எழுதுவதற்கு முன்னதாக ஒரு சின்ன சோதனை. பரீட்சையை உத்தமபாளையத்தில் எழுதவேண்டும் என்றார்கள். அங்கே ஒரு ஆஸ்டலில் தங்கி மூன்று நாட்கள் பரீட்சை எழுதவேண்டும். உணவிற்காக ஒரு குறிப்பிட்ட தொகை கட்டவேண்டியிருந்தது. பணம் கட்ட வேண்டிய கடைசி நாளும் வந்தது. ஆனால் அம்மாவால் பணம் புரட்ட முடியவில்லை.

இந்த இக்கட்டான நேரத்தில், அக்கா கமலம்தான் அவரது தாலியை விற்று பணம் கொடுத்தார்; அதுவும் அத்தானுக்கு (அக்காவின் கணவர்) தெரியாமல்.

அக்கா தாலியை விற்றது கூட எனக்கு அந்த நேரத்தில் பெரிதாகத் தெரியவில்லை. ஜோதிடத்தை பொய்யாக்கப் போகிறோம் என்பதுதான் பெரிதாகத் தெரிந்தது.

இப்போது நினைத்தால் அக்காவின் அன்பும், உயர்ந்த பண்பும் எனக்கு பிரமிப்பாக இருக்கிறது. உயர்ந்த பண்புகள் கல்வியால் மட்டுமே வருவதில்லை என்பதை புரிந்து கொள்ள முடிகிறது. அக்காவின் அன்றைய தியாகத்துக்கு எதை ஈடாகக் கொடுக்க முடியும்? எதைக் கொடுத்தாலும் ஈடாக முடியாத அந்த அன்பை வெறும் வார்த்தைகளில்

விவரித்து விடமுடியாதுதான்."

– இப்படியாக எட்டாம் வகுப்பு தேர்வை எழுதி முடித்த இளையராஜாவுக்கு ஒன்பதாவது வகுப்பில் சேர முடியாத சோதனை ஏற்பட்டது.

அதுபற்றி அவரே கூறுகிறார்:

"ஒன்பதாம் வகுப்பில் சேர, தேவாரத்தில் உள்ள மேல்நிலைப்பள்ளிக்கு போனேன். பள்ளியில் சேரவேண்டுமானால் 'ஸ்பெஷல் பீஸ்' 25 ரூபாய் கட்டவேண்டும் என்றார்கள். அம்மாவிடம் சொன்னேன். அம்மாவும் யார் யாரிடமோ கேட்டுப் பார்த்தும் அந்த நேரத்தில் எதுவும்

நடக்கவில்லை.பள்ளிக்கூடம் தொடங்கிவிட்டது. ஒரு மாதம் ஆனது. பணம் கிடைக்கவில்லை. இரண்டு மாதமானது. பணம் புரட்ட முடியாத அம்மாவின் முகம் எனக்குள்ளும் கவலை ஏற்படுத்தியது. இதே நிலை மூன்றாவது மாதமும் நீடித்தபோது, "சரி! இந்த வருடம் நாம் ஸ்கூலுக்குப் போக, அந்த ஸ்கூல் விரும்பவில்லை போலும்" என்று நினைத்துக் கொண்டேன். அப்படி நினைத்தபோதே, ஜோதிடர்கள் சொன்னதும் நினைவுக்கு வர, "இனி அந்த ஜோதிடர்கள் முகத்தில் எப்படி விழிப்பேன்?" என்றும் வருத்தப்படத் தொடங்கினேன்.

வேலைக்கு போக திட்டம்

இந்த நேரத்தில் அத்தானும் அக்காளும் வைகை அணையில் இருந்தார்கள். மிலிட்டரியில் இருந்த அத்தான் அங்கிருந்து வந்து வைகை அணைப் பகுதியில் டிரைவராக இருந்தார்.

அக்கா நினைப்பு வந்ததும் ஐடியா வந்து விட்டது. வைகை அணையில் மட்டும் எனக்கொரு வேலை கிடைத்தால் ஒரு வருடம் வேலை பார்த்து, ஒரு வருட சம்பளத்தை வைத்துக்கொண்டு அடுத்த வருடமாவது படிப்பைத் தொடரலாம் என்று நினைத்தேன்.

அம்மாவிடம் ஓடிவந்தேன். விஷயத்தை ரத்தினச் சுருக்கமாகச் சொல்லி, "நான் வைகை அணை போய் அத்தானைப் பார்க்கட்டுமா?" என்று கேட்டேன்.

அம்மாவுக்கும் என் ஆர்வம் புரிந்தது. படிக்க ஆசைப்படும் பிள்ளையை அதற்கொரு புதிய வழி கிடைக்கும்போது எந்தத் தாய்தான் தடுப்பார்? "போய்வா மகனே" என்றார், அம்மா.

என் வாழ்வைத்தேடி முதல் பயணம். வைகை அணை எப்படி இருக்குமோ என்ற கற்பனையுடன் புறப்பட்டேன். அத்தான் மூலமாக வேலை கிடைப்பதில் சிரமம் எதுவும் இல்லை.

என்ன வேலை தெரியுமா?

வைகை அணையின் கரையிலும், கீழே பூங்காவிற்கு மேலுள்ள புல்வெளிகளிலும் தண்ணீர்க் குழாயை பிடித்தபடி தண்ணீர் ஊற்ற வேண்டும். நாளொன்றுக்கு ஒரு ரூபாய் சம்பளம்! வாரா வாரம் சம்பளமாக ஏழு ரூபாய் கொடுத்து விடுவார்கள் என்றார்கள்.

அரை டிராயர், அரைக்கை சட்டை, குள்ளமான கறுப்பு உருவம். தண்ணீர் பாய்ச்சும்போது சும்மா இருக்க முடியாது. யாரைப் பற்றியும் கவலைப்படாமல் பாட்டுப்பாடியபடியே தண்ணீர்

பாய்ச்சுவேன்.

பொதுவாகவே சத்தம் போட்டுப் பாடுவது எனக்கும் பாஸ்கருக்கும் பழக்கம். அக்கம் பக்கம் போவோர், வருவோர் என்னை வேடிக்கை பார்த்தார்கள். நானோ விடாப்பிடியாக பாடியபடியே வேலையைத் தொடர்ந்தேன்.

இன்பம் தந்த ஒரு ரூபாய் நோட்டுகள்

ஒரு வாரம் முடிந்து ஞாயிற்றுக்கிழமை மாலை ஆபீசுக்குப் போய் சம்பளம் வாங்கினேன்.

ஏழு புத்தம் புதிய ஒரு ரூபாய் நோட்டுக்கள். மணக்க, மணக்க! அடேயப்பா, வான மண்டலத்தில் சஞ்சரித்தேன். பறந்தேன் என்று கூட சொல்லலாம்.

ஏழு ரூபாய் கையில் கிடைத்த அந்த நொடியில் ஏற்பட்ட ஆனந்தத்தை இன்றுவரை வேறு எந்தப் பணமும் எனக்குத் தரவில்லை.

இப்படி 25 நாட்கள் வேலை செய்தால் 25 ரூபாய் வந்துவிடும். அப்புறமாய் போய் ஸ்கூலில் சேர்ந்து விடலாமா என்று கூட யோசித்தேன்.

ஆனால் 4 மாத பாடம் நடந்திருக்குமே, என்ன செய்வது?

சரி! ஒரேயடியாக அடுத்த வருடம் படிப்பை தொடரலாம். எனக்குள் ஒரு முடிவுக்கு வந்து வேலையைத் தொடர்ந்தேன்.

இப்படிச் சொன்ன இளையராஜா, ஒருநாள் தண்ணீர் பாய்ச்சும் நேரத்தில் பாடிக்கொண்டே பணியைத் தொடர அப்போது அந்த வழியாக வந்த வைகை அணையின் சீப் என்ஜினீயர் காதுக்கும் அந்தப் பாட்டு எட்டியது.

**வேலை பார்க்கும்போது இளையராஜா பாட்டு அதிகாரியைக் கவர்ந்தது**

வைகை அணைக்கரை பகுதியில் செடிகளுக்கு தண்ணீர் ஊற்றும் பணியை தினமும் ஒரு ரூபாய் சம்பளத்தில் செய்து வந்த இளையராஜா, சத்தமாய் பாட்டுப்பாடியபடியே அந்த வேலையை தொடர்ந்து கொண்டிருந்தார்.

ஒருநாள் அந்தப் பாட்டு அணைக்கரை தலைமை என்ஜினீயரின் காதில் கேட்டுவிட்டது.

அதன் பிறகு நடந்தது பற்றி இளையராஜா கூறுகிறார்:

"நான் வேலை பார்த்த பகுதி எப்போதும் பரபரப்பாகவே இருக்கும். எல்லாருமே நான் வேலை செய்யும் இடத்தை கடந்துதான் போகவேண்டும். ஆனால் அன்று நான் பாடத்தொடங்கிய அந்த நேரத்தில் இருந்த கொஞ்ச சத்தமும் இல்லாமல் போயிருந்தது. என் பாட்டுக்காகத்தான் இப்படி எல்லோரும் அமைதியாகி விட்டார்களோ என்ற மகிழ்ச்சியில் பாடும் சத்தத்தை அதிகரித்தேன்.

அப்போதுதான் 'ஸ்பாட் விசிட்'டுக்காக அங்கே வந்திருந்த தலைமை என்ஜினீயர் என் பாட்டைக் கேட்டுவிட்டார். அப்போதும் கூட என் குரல் குறையவில்லை. நிற்கவும் இல்லை.

என்னை நெருங்கியவர், "ஹேய்! கம் ஹியர் மேன்' (இங்கே வா) என்றார்.

தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்த 'ஒஸ் பைப்'பை மடக்கி வைத்துவிட்டு அருகில் போனேன்.

"ஹு ஆர் யூ? வாட் இஸ் யுவர் நேம்? (யார் நீ? உன் பெயர் என்ன?) என்று கேட்டார்.

"ராஜையா" என்றேன்.

"கொஞ்சமும் தயங்காமல் நான் பதில் சொன்னதைப் பார்த்தவர், "நீ படித்திருக்கிறாயா?" என்று ஆங்கிலத்தில் கேட்டார்.

"எஸ் சார். எய்த் ஸ்டாண்டர்டு" என்றேன்.

"எய்த் ஸ்டாண்டர்டு?" என்று ஆச்சரியமாக கேட்டவர், அரை டிராயரும், குள்ளமுமாக இருந்த என்னை ஆச்சரியமாக மேலும் கீழும் பார்த்தார். அதே வேகத்தில் "ஆபீசுக்கு வந்து என்னைப்பார்" என்று ஆங்கிலத்தில் சொல்லிவிட்டுச் சென்று விட்டார்.

அதன்படி ஆபீசுக்குப் போய் அவரை பார்த்தேன். "நீ நாளையில் இருந்து 'ஒஸ் பைப்' பிடிக்க வேண்டாம். இங்கே ஆபீசுக்கு வந்துவிடு" என்றார்.

"சரி சார்" என்று சொல்லிவிட்டு சந்தோஷத்துடன் வெளியே வந்தேன். அங்கிருந்த அவரது உதவியாளரிடம், "இங்கே வந்து நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டேன்.

அவரோ, "ஏய்! உன்னை ஆபீஸ் பையனாகப் போட்டிருக்காருய்யா. போ! போ!" என்றார்.

வேலைப்பளு

அடுத்த நாள் சந்தோஷமாக ஆபீசுக்குப் போனேன். அங்கே நாலைந்து செகரட்டரி, கிளார்க், லெட்ஜர் கீப்பர், அக்கவுண்டண்ட் இவ்வளவு பேர்தான் மொத்தம். இரண்டு பகுதியாக பிரிக்கப்பட்ட ஒரே கட்டிடத்தில் தடுப்பு வைத்து அமைக்கப்பட்ட நான்கு மேஜை – நாற்காலிகள். அவ்வளவுதான்.

ஒரு பைலை கையில் கொடுத்து, "அவரிடம் கொடு" என்பார், ஒருவர். "இதை அவர்கிட்டே கொடுத்து கையெழுத்து வாங்கி வா!" என்பார், இன்னொருவர். இங்கும் அங்குமாக போய்க்கொண்டிருந்தேனே தவிர, மற்றபடி ஒரே போர். ஏனென்றால் பாட்டுப்பாடவே சான்ஸ்

இல்லையே!இதுபோக மத்தியானம் ஆபீசர் கேம்பசில் இருந்த என்ஜினீயர் முரளீதரனுக்கு கேரியரில் சாப்பாடு எடுத்துப் போய் பரிமாறி வரவேண்டும். ஒரு மைல் தூரம் நடந்துதான் போய்வரவேண்டும்.

ஒரு நாள் முன்னதாகவே போய் காத்திருப்பேன். இன்னொரு நாளோ அவர் காத்திருக்க, நான் லேட்டாகப்போய் திட்டு வாங்குவேன். சரிவரப் பரிமாறாவிட்டால், அதற்கு வேறு திட்டு.

என்னுடைய சர்வீசில் அவருக்குத் திருப்தி இல்லாததால், என்னை மறுபடியும் அணைக்கட்டுப் பகுதிக்கு மாற்றி, 'ஒஸ் பைப்' பிடிக்க அனுப்பி விட்டார்கள்."

இவ்வாறு கூறும் இளையராஜாவுக்குள் அணை தொடர்பான, ஒரு சோகமும் இருக்கிறது. அதுபற்றி கூறுகிறார்:

"அப்போது பெரும்பாலும் அணையின் வேலைகள் முடிவுக்கு வந்து கொண்டிருந்த நேரம். திடீரென ஒருநாள் அரசாங்க அறிவிப்பாக தண்டோரா ஒலித்தது.

ஊரை விட்டு மக்கள் வெளியேற்றம்

அணையின் பின்பகுதியில் நீர் தேங்கும் இடத்தில் இருந்த ஊர்களான காமக்காபட்டி உள்ளிட்ட 11 கிராமங்களில் வசிப்பவர்கள் அதைக் காலி செய்துவிட்டு வேறு ஊருக்குப் போய்விட வேண்டும். இப்படி வெளியேற கடைசிநாள்" என்று கெடு தேதியையும் அறிவித்தார்கள்.

அணை உச்சியில் செடிகளுக்கு தண்ணீர் ஊற்றும் வேலையைத் தொடர்ந்து கொண்டிருந்த என் கண்ணில் மக்கள் ஊரை காலி செய்துவிட்டுப் போகும் காட்சி கண்ணில் படும். கெடு நாள் நெருங்க நெருங்க, கூட்டம் கூட்டமாய் அங்கிருந்த மக்கள் வெளியேறுவதைக் காண மனம் சகிக்கவில்லை.

அவர்கள் வாழ்வதற்கு அரசாங்கம் வேறு நிலங்கள் கொடுக்கலாம். நிலத்தோடு அவர்களுக்கிருந்த அந்த உறவின் பிரிவுக்கு எதை ஈடாகக் கொடுக்க முடியும்?"

– இவ்வாறு மிக இளம் வயதிலேயே மற்றவர்களின் பிரச்சினைகளையும் மனதுக்குள் பதியமிட்டுக்கொண்ட இளையராஜா, ஒரு வருடம் வைகை அணையில் வேலை செய்து முடித்துவிட்டார். கையில் பணம் கொஞ்சம் சேர்ந்திருந்தது.

"இந்த வருடம் நிச்சயம் தேவாரம் ஸ்கூலில் பணம் கட்டி சேர்ந்து ஜோதிடத்தை

பொய்யாக்கி விடவேண்டும்” என்று திட்டமிட்டார்.

கேரள தேர்தல்

ஆனால், அவர் பள்ளியில் சேருவதற்கு முன்பாக கேரளாவில் நடந்த தேர்தலில் இளையராஜாவின் அண்ணன் பாவலர் வரதராஜன் தீவிர பிரசாரத்தில் ஈடுபடவேண்டி இருந்தது. அதற்காக இளையராஜாவும் கேரளா சென்றார்.

இதுபற்றி அவரே கூறுகிறார்:

“1957—ல் நடந்த பொதுத்தேர்தலில் எல்லா இடத்திலும் காங்கிரஸ் வெற்றி பெற்றிருக்க, கேரளாவில் மட்டும் கம்யூனிஸ்டு கட்சி வெற்றி பெற்றது. ஒட்டு மொத்த இந்தியாவில் ஒரேயொரு மாகாணத்தில் (கேரளா) மட்டும் காங்கிரசுக்கு எதிராக வேறு கட்சி உருவானதை காங்கிரசால் ஜீரணிக்க முடியவில்லை.

இந்த நிலையில் தேவிகுளம் பீர்மேடு தொகுதியில் நடந்த தேர்தல் செல்லாது என்று அறிவிக்கப்பட்டது. இந்த ஒரு தொகுதியில் வெற்றி பெறும் கட்சியே ஆட்சிக்கு வர முடியும் என்ற நிலை.

இதனால் அந்தத் தொகுதிக்கு நடந்த மறு தேர்தலில் காங்கிரசுக்கும் கம்யூனிஸ்டுக்கும் “வாழ்வா சாவா” நிலை. எல்லா தேசியத் தலைவர்களும் அங்கே முகாமிட்டு இருந்தனர். எந்த நேரத்தில் என்ன நடக்குமோ என்ற டென்ஷனான நிலை. இந்த தேர்தல் பிரசாரத்துக்கு கம்யூனிஸ்டு கட்சி சார்பில் பாவலர் அண்ணன் போயிருந்தார்.

ஸ்கூலில் சேருவதற்கு முன் வந்த விடுமுறை நாட்களில் நானும் பாஸ்கரும் பாவலர் அண்ணனை பார்க்க மூணாறுக்கு போனோம்.

கம்யூனிஸ்டு கட்சி ஆபீசில் ஏகப்பட்ட கூட்டம். தேர்தல் காரியதரிசி அமர்ந்திருக்க, பல எஸ்டேட் கட்சித் தலைவர்கள் வரிசையாக நின்றிருந்தார்கள். அவர்களிடம் பேசிய செயலாளர், “கம்யூனிஸ்டு தலைவர்கள் பி.ராமமூர்த்தி, பி.டி.ரணதிவே, எஸ்.ஏ.டாங்கே, ஏ.கே.கோபாலன், ஜோதிபாசு, ராஜேஸ்வரராவ், ஜீவானந்தம் என அத்தனை பேரும் உங்கள் தொகுதிகளுக்கு அடுத்தடுத்து வருவார்கள்” என்றார்.

இதைக்கேட்ட எஸ்டேட் தொழிலாளர்கள் அத்தனை பேரும் ஒரே குரலில் “தோழரே! இவர்களெல்லாம் எங்களுக்கு வேண்டாம். பாவலர் கையில் ஒரு மைக்கை கொடுத்து அவரை மட்டும் எங்களுடன் அனுப்பினீர்களென்றால், இந்தத் தொகுதியை நாங்கள் ஜெயித்துக் காட்டுகிறோம்” என்றார்கள்.

இது என் கண் முன்னே நடந்த நிகழ்ச்சி.

தொழிலாளர்கள் இப்படிச் சொன்னதும் அவர்களிடம் பேசிய செயலாளர், “பாவலர் கண்டிப்பாக வருவார். அவர் பாடியபின் கூட்டம் தலைவர்களோடு நடக்கும்” என்றார்.

உடனே மளமளவென வேலைகள் தொடர்ந்தன. பாவலர் அண்ணன் ஒரு ஜீப்பில் மைக்கை கட்டிக்கொண்டு ஒவ்வொரு எஸ்டேட்டாக பாடிச்சென்றதை கண்ணாரக் காணும் பாக்கியம் எனக்கும் பாஸ்கருக்கும் கிடைத்தது.

**இளையராஜா அண்ணனுக்கு நம்பூதிரிபாடு பாராட்டு**
**“இந்த வெற்றி, பாவலர் வரதராஜனின் வெற்றி!”**

கேரள சட்டசபை தேர்தலில், கம்யூனிஸ்டு கட்சிக்கு ஆதரவாக இளையராஜாவின் அண்ணன் பாவலர் வரதராஜன் பாட்டுப்பாடி பிரசாரம் செய்தார். கம்யூனிஸ்டு கட்சி வெற்றி பெற்று, நம்பூதிரிபாடு முதல்—மந்திரியானார். “இந்த வெற்றி பாவலர் வரதராஜனின் வெற்றி” என்று நம்பூதிரிபாடு பாராட்டினார்.

தேர்தல் பிரசாரத்தில் அண்ணனுடன் சேர்ந்து ஈடுபட்ட அனுபவம் பற்றி இளையராஜா கூறியதாவது:—

“ஒரு தேயிலைத் தோட்டத்தின் வழியாக நாங்கள் சென்றபோது, ஓரிடத்தில் ஆண்களும், பெண்களுமாக தேயிலை பறித்துக் கொண்டிருந்தார்கள். அங்கே மேட்டுப் பகுதியில் ஜீப்பை நிறுத்தச் சொன்ன பாவலர் அண்ணன் பிரசார பாட்டை பாடினார் இப்படி:

“சிக்கிக்கிட்டு முழிக்குதம்மா

வெட்கங்கெட்ட காளை ரெண்டு

முட்டி உடைஞ்ச காளை என் கண்ணம்மா — இது

மூக்குக்கயிறு அறுந்த காளை என் பொன்னம்மா”

என்று பாடினார்.

தொழிலாளர்கள் ஆரவாரம்

பாவலரின் பாட்டு தேயிலைத் தோட்டத்தில் எதிரொலிக்க, அங்கே வேலை செய்தவர்கள் தங்கள் பின்னால் கட்டியிருந்த தேயிலைக் கூடைகளை அப்படியே போட்டுவிட்டு, மேலே வேகமாக ஓடிவந்து ஜீப்பை சுற்றி நின்று கேட்டார்கள்.

இடையிடையே கரகோஷம். ஆனந்தக் கூச்சல்கள்.

‘இன்னும் ஒரு பாட்டு. இன்னும் ஒரு பாட்டு’ என்று ரசிகர்களாக மாறிப்போன தொழிலாளர்கள்!

நேரம் ஆகிவிட்டதை உணர்ந்த பாவலர் அவர்களிடம், “வேறு இடங்களுக்கும் போகவேண்டும். நேரமாகிவிட்டது” என்று சொல்லி ஜீப்பை கிளப்பச் சொல்ல,

அப்போது, “பாவலரே! கொஞ்ச நேரம் பொறுங்க” என்று சொன்ன ஒரு தொழிலாளி, ஓட்டமாய் ஒரு பர்லாங் தூரம் ஓடி கையில் சூடு பறக்கும் ‘டீ’ கிளாசுடன் வந்து நின்றார்.

அந்தக் குளிரிலும் ஆவி பறக்க டீ கொடுத்த அந்த அன்பு, எங்களை நெகிழச் செய்தது.

எதிர்பார்த்தபடியே அந்தத் தொகுதியில் மீண்டும் கம்யூனிஸ்டு கட்சி ஜெயிக்க, நம்பூதிரிபாடு தலைமையில் கம்யூனிஸ்டு கட்சி மந்திரிசபை அமைத்தது.

வெற்றி விழாவில் நம்பூதிரிபாடு

மூணாறு ரேஸ்கோர்ஸ் மைதானத்தில் வெற்றி விழா கொண்டாட்டம். லட்சக்கணக்கில் மக்கள் கூட்டம். மேடையில் நம்பூதிரிபாடு பேசவந்தபோது, "இவடே பாவலர் வரதராஜன் ஆரானு?" என்று கேட்டார்.

கூட்டத்தின் முன் வரிசையில் அமர்ந்திருந்த பாவலரை ஜனங்கள் எழுந்து நிற்க வைத்தார்கள். பாவலரை பார்த்த நம்பூதிரிபாடு, 'என்ட சகாவே! இவிட வரு" என்றார். அண்ணன் மேடையில் ஏறினார். கைதட்டல் அதிகமாகியது.

அப்போது நம்பூதிரிபாடு "ஈ வெற்றி முழுவன் பாவலர் வரதராஜன்ட வெற்றியானு" என்று மகிழ்ச்சியுடன் சொன்னார்.

அவர் இப்படிச் சொன்னதும் மொத்தக் கூட்டமும் உற்சாகமானது. கைதட்டல் ஒலி விண்ணை எட்டியது. இந்த சம்பவத்துக்குப் பிறகே தமிழ்நாடு கம்யூனிஸ்டு கட்சிக்கு பாவலர் அறிமுகமானார்."

இவ்வாறு இளையராஜா கூறினார்.

பள்ளியில் சேர்ந்தார்

பாவலர் அண்ணனின் பாட்டு மூலம் கேரளத்தில் கிடைத்த வெற்றியை பகிர்ந்து கொண்ட இளையராஜா, தேவாரம் ஸ்கூலில் ஒன்பதாம் வகுப்பில் பீஸ் கட்டி சேர்ந்து விட்டார்.

அதுபற்றி உற்சாகத்துடன் இளையராஜா சொன்னார்:

"பள்ளியில் சேர்ந்த அன்று நான் அடைந்த ஆனந்தத்துக்கு அளவேயில்லை. புதிய புத்தகங்களும், நோட்டுப் புத்தகங்களும் வாங்கினேன். அதன் மணம் மனதுக்கு ரம்மி யமாக இருந்தது. புதுப் புத்தகங்களை வாங்கிய அன்று அவற்றை தலையணைக்கு பக்கத்தில் வைத்து தூங்கினேன்.

அடுத்த நாள் காலை பள்ளிக்குக் கிளம்பினேன். போன வருடம் 9–ம் வகுப்பில் பெயிலான என் நண்பன் ஜெயகரனும் என்னுடன் 9–ம் வகுப்பில் சேர்ந்து கொண்டான். நான் படிக்காமல் ஒரு வருடம் வேஸ்ட் ஆகிவிட்டதே என வருந்தியதை, அவன் படித்தும் ஒரு வருஷம் வேஸ்ட் ஆகியிருப்பதை எண்ணி மனதை தேற்றிக்கொண்டேன்.

ஜோதிடர்களுடன் சந்திப்பு

பள்ளியில் சேர்ந்தாகிவிட்டது. அது 'நான் 9–வது படிக்க முடியாது" என்று சொன்ன ஜோதிடர்களுக்குத் தெரிய வேண்டாமா?

ஜோதிடர்களை பார்த்தேன். "நான் இளங்கோவடிகள் இல்லை என்றாலும், உங்கள் ஜோதிடத்தைப் பொய்யாக்கி விட்டேன் பார்த்தீர்களா?" என்று கேட்டேன்.

அவர்களோ என்னை ஏளனமாக பார்த்தபடிகள், "கொஞ்சம் பொறு கண்ணா. இன்னும் மூணே மாசம். இந்த கிரகம் இந்த வீட்டுக்கு வரும்போது எல்லாம் சரியாய்ப் போயிடும் (அதாவது படிக்க முடியாமல் போய்விடும்) என்றார்கள்.

“அதையும் பார்க்கலாம்” என்று சொல்லிவிட்டு, படிப்பைத் தொடர்ந்தேன். என்ன நடந்தாலும் எக்காரணம் கொண்டும் படிப்பையும், ஸ்கூலையும் விட்டு விடுவதில்லை என்று எனக்குள் ஒரு வைராக்கியமே குடிகொண்டது.

பிரார்த்தனை பாடல்

அப்போது என்னை பார்ப்பவர்கள் ஒரு பொருட்டாகவே மதிக்க மாட்டார்கள். நாலைந்து மாணவர்களோடு சேர்ந்து நானும் பேசிக்கொண்டிருக்கும்போது, நான் ஏதாவது முக்கியமாக சொன்னால்கூட, அதை ஏனோதானோவென்றே கேட்பார்கள்.

பள்ளியில் காலை பிரேயரை எனக்கு அண்ணன் முறைக்காரரான குருசாமி என்பவர் பாடுவார். இல்லையென்றால் ராமநாதன் என்ற தேவாரத்து மாணவன் பாடுவார். இவர்கள் எஸ்.எஸ்.எல்.சி. படித்தார்கள்.

அன்றைக்கென்று பார்த்தால் குருசாமி அண்ணனுக்கு நல்ல ஜுரம். குரல் வேறு கம்மிப் போயிருந்தது. அதனால் அன்றைய பிரேயர் பாடலை ‘பாட முடியாது’ என்பதை தெரிந்து கொண்டவர், பிரேயர் நேரத்தில் என்னைப் பாட அழைத்தார்.

மைதானம் முழுக்க மாணவர்கள். நான் தயங்கித் தயங்கி, படிகளில் ஏறி, மேல் படியில் வழக்கமாக பிரேயர் பாடும் இடத்தில் நின்றபடி, ‘ஆதியந்தம் இல்லா அருட்ஜோதியே’ என்று தொடங்கினேன். ஒரு அமைதி எங்கிருந்தோ வந்து கவ்வியது. பாடி முடியும்வரை அந்த அமைதி தொடர்ந்தது. பாடல் முடிந்து அவரவர் வகுப்புகளுக்குச் சென்ற மாணவர்கள் என்னை விசேஷமாக பார்த்தார்கள்.

என் வகுப்பிலோ மாணவ—மாணவிகள் என்னை தனியாக கவனித்தார்கள்.

அதுவரை என்னை பொருட்படுத்தாதவர்களுக்கு அன்று முதல் நான் முக்கியமானவன் ஆனேன். என்னை சட்டை செய்யாதவர்கள்கூட வலுவில் வந்து பேசினார்கள்.

இப்படி திடீர் கவனிப்பு தொடர்ந்தாலும் ஜோதிடத்தை பொய்யாக்க வேண்டும் என்ற உறுதியுடன் படிப்பிலும் தீவிர கவனம் செலுத்தினேன். காலாண்டுத் தேர்வில் நல்ல மார்க் எடுத்தேன்.

**பெண் குரலில் இளையராஜா பாட்டு!**
**பந்தயம் கட்டியவர்கள் ஏமாந்தனர்**

சின்ன வயதில் இளையராஜா பாடிய பாட்டு பெண் குரலில் அமைந்தது! குரலைக் கேட்டு விட்டு, "பாடுவது பெண்" என்று பந்தயம் கட்டியவர்கள் ஏமாந்தனர்.

கேரள முதல்–மந்திரி நம்பூதிரிபாடு, பாவலர் வரதராஜனை மேடைக்கு அழைத்து, "தனது மந்திரிசபை அமையக் காரணமானவர்" என்று பாராட்டியதால் அவர் ஒரே நாளில் புகழின் உச்சிக்குப் போய்விட்டார்.

"இந்த சம்பவம்தான் நான் இசை உலகில் அதிகமாக கால்பதிக்க காரணமாக அமைந்தது" என்கிறார், இளையராஜா.

அவர் கூறுகிறார்:–

கம்யூனிஸ்டு மாநாடு

"கேரளாவில் நடந்த நிகழ்ச்சி மூலமாக பாவலரை அறிந்த கம்யூனிஸ்டு கட்சியினர் அவரை தங்கள் பகுதிகளிலும் பாட அழைத்தார்கள். அதில் முதல் அழைப்பு திருச்சி அருகே உள்ள திருவெறும்பூர் கம்யூனிஸ்டு தொழிலாளர் மாநாட்டுக் குழுவிடம் இருந்து வந்தது.

அண்ணனும் பாட ஒப்புக்கொண்டார். இது தொடர்பாக விளம்பரமும் செய்தார்கள். ஆனால் பாட வேண்டிய மூன்று நாளைக்கு முன் அண்ணனுக்கு ஜுரம் வந்துவிட்டது. இரண்டொரு நாளில் ஜுரம் சரியாகி விடும் என்று பார்த்தால் அதிகமானதே தவிர, குறைந்த பாடில்லை.

இதற்கிடையே நிகழ்ச்சிக்கு வரமுடியாத சூழ்நிலையை விளக்கி அண்ணன் தந்தி கொடுத்துவிட்டார். அப்படியும் அண்ணனை அழைத்து பாட வைத்தே ஆகவேண்டும் என்று ஆசைப்பட்ட நிகழ்ச்சி அமைப்பாளர்கள், நிகழ்ச்சிக்கு முதல் நாள் திருச்சியில் இருந்து காரை எடுத்துக்கொண்டு நேராகவே வீட்டுக்கு வந்துவிட்டார்கள்.

அவர்களின் ஆர்வத்தை நேரில் பார்த்த அண்ணன், 'அடாத ஜுரத்திலும் விடாது பாட' முடிவு செய்துவிட்டார். ஆர்மோனியம் சங்கரதாஸ், தபேலாக்காரர் சகிதம் அண்ணன் புறப்படவிருந்த நேரத்தில் அம்மா அண்ணனிடம் வந்தார். "உன்னுடன் தம்பி ராஜையாவையும் அழைத்துப் போனால், அவனையும் இடையிடையே இரண்டொரு பாட்டுப்பாட வைக்கலாமே. அவன் அப்படிப் பாடும்போது உனக்கும் 'ரெஸ்ட்' கிடைத்த மாதிரி இருக்கும்" என்றார்.

ஜுரத்தில் பலவீனப்பட்ட நிலையில் அண்ணன் பாடப்போனால், அவருக்கு கொஞ்சமாவது ஓய்வு தேவை என்ற கண்ணோட்டத்தில்தான் அம்மா என்னை சிபாரிசு செய்தார். அதைப் புரிந்து கொண்ட அண்ணன், என்னைப் பார்த்தார். என்ன நினைத்தாரோ, "சரி நீயும் வா" என்றார்.

அண்ணனின் இந்த அழைப்புதான் என் கலையுலக வாழ்க்கைப் பயணத்தின் தொடக்கம் என்று அப்போது நான் அறிந்திருக்கவில்லை.

முதல் பாட்டு

திருவெறும்பூர் மாநாட்டில் சுமார் ஐம்பதாயிரம் பேர் கூடிய கூட்டத்தில் நான் முதன் முதலில் பாடியபோது கிடைத்த கைதட்டல், உயர் படிப்பு குறித்து நான் கட்டியிருந்த மனக்கோட்டையைத் தகர்க்கப்போகிறது என்பதை நான் அறிந்திருக்கவில்லை.

மூன்று நாட்கள் திருச்சியில் கச்சேரி. பாடும் நேரம் மாலைதானே. மற்ற நேரங்களில் பெரும்பாலும் திருச்சி மலைக்கோட்டை உச்சிப் பிள்ளையார் கோவில், தாயுமானவர் கோவில் என்று நேரம் ஓடியது. மலைக்கோட்டையின் உச்சியில் இருந்து, காவிரியைப் பார்ப்பது கண்கொள்ளாக்காட்சி. ஸ்ரீரங்கம், திருவானைக் காவல் கோபுர தரிசனம் என்று, கண்களில் அதிசயங்கள் கண்டேன்.

அதோடு காவிரியாற்றில் உற்சாகக் குளியல் போட்டபோது, அந்த மகிழ்ச்சி என்னை உறையூரைத் தலைநகராகக் கொண்டு சோழர்கள் ஆண்ட காலத்திற்கே கொண்டு போய்விட்டது.

மூன்று நாட்கள் கழித்து பள்ளிக்கு வந்தால், மாணவ நண்பர்கள் என்னிடம், “என்ன ஆயிற்று? ஏன் ஸ்கூலுக்கு வரவில்லை?” என்று விசாரிக்க ஆரம்பித்தார்கள். நானோ மூன்று நாளும் ஸ்கூலில் என்ன பாடம் நடந்திருக்கும் என்பதற்குப் பதிலாக, இந்த மூன்று நாளில் வெளியுலகில் என்ன பாடம் படித்தேன் என்று சிந்தித்துக் கொண்டிருந்தேன். கூரை வேய்ந்த அந்த சின்னஞ்சிறிய வகுப்பறையின் தடுப்புச் சுவர்களுக்குள் இருந்தபடி மலைக்கோட்டையின் உச்சிக்கும் மேலே திறந்த வானவெளியிலே கற்பனை சிறகடித்துப் பறந்து கொண்டிருந்தேன்.

அண்ணனுக்கு கச்சேரிகளுக்கு நிறைய அழைப்பு வந்தது. அவரோடு அவ்வப்போது கச்சேரிகளில் கலந்து கொண்டு படிப்பையும் தொடர்வது சாத்தியமாக இல்லை. அவ்வளவுதான். பள்ளிக்கூட கதவு அடைபட்டு விட்டது.

பெண் குரல்

அப்போது சிறிய வயது என்பதால் என் குரல் பெண் குரல் மாதிரி இருக்கும். அண்ணன் நான் பாடுவதற்கென்றே பாடல்களையும் எழுதிவிட்டார். அண்ணனுடன் பாட ‘டூயட்’ பாடல்களும் தயாராயின! இப்படி அண்ணனின் இசைக்குழுவில் நானும் முக்கியமான பாத்திரமாகி விட்டேன்.

இசை நிகழ்ச்சியைப் பொறுத்தவரையில், தொடக்கத்திலேயே மக்களை அண்ணன் தன் பக்கம் இழுத்து விடுவார். முதல் பாடல் முடிந்து, வந்திருக்கும் எல்லாருக்கும் ‘வணக்கம்’ சொல்லும் பாடலிலேயே பத்து இடங்களில் கை தட்டல்கள் வாங்கி விடுவார். கூட்டம் முழுவதும் அவர் சிரித்தால் சிரிக்கும்; கோபித்தால் மக்கள் முகத்திலும் கனல் தெரியும். அழும் மாதிரி பேசினாலோ முன் வரிசையில் உட்கார்ந்திருப்பவர்களின் முகங்களில் கண்ணீர் வழியும்.

இது, தினமும் நாங்கள் காணும் அன்றாட நிகழ்ச்சி.

டூயட் பாடலில் அண்ணன், “காங்கிரசில சேரப்போறேண்டி பொம்பளே! கதரைப் போட்டு பார்க்கப் போறேண்டி’ என்று பாட, பதிலுக்கு நான், “வெளிய சொல்லித் தொலைச்சுடாதீங்க மாப்பிளே! வீணா கெட்டுப் போயிடாதீங்க” என்று பாடுவேன்.

சிறு வயது என்பதால், என் குரல் பெண் குரல் போல ஒலிக்கும்.

இதில் ஆச்சரியம் என்ன தெரியுமா? என்னைப் பார்க்காமல் வெளியில் என் குரலைக் கேட்டுவிட்டு "யாரோ ஒரு பெண் பாடுகிறாள்" என்று எதிர்பார்த்து அப்புறமாய் நேரில் பார்க்க வந்து ஏமாந்து போனவர்கள் பலர்! குரலைக்கேட்டு நான் பெண்தான் என்று பந்தயம் கட்டி தோற்றவர்களும் ஏராளம்.

பாண்டிச்சேரி தேர்தல்

1962–ல் பாண்டிச்சேரி தேர்தலில் அண்ணன் பாடிய பாட்டு ரொம்பவே பரபரப்பை ஏற்படுத்தியது. அதில் அண்ணனும் நானும் இப்படிப்

பாடுவோம்:"ஒத்த ரூபா தாரேன் நான்

ஒனப்பத் தட்டும் தாரேன்

ஓட்டுப் போடுற பொண்ணே – கொஞ்சம்

மாட்டப் பாத்து குத்து"

– இது அண்ணன்.

"ஒத்த ரூபாயும் வேணாம் ஒங்க

ஒனப்பூத் தட்டும் வேணாம் – நீங்க

ஊரை அழிக்கிற கூட்டம் – ஒங்கள

ஒழிச்சிக் கட்டப் போறோம்"

– இது நான்.

இந்தப் பாட்டுக்கு எவ்வளவு கரகோஷம் தெரியுமா?

இப்படி பாடி, நானும் ரசிகர்களுக்கு தெரிய வந்த நேரத்தில், "இனி நீ பாட வரவேண்டாம்" என்று அண்ணன் சொன்னால் எப்படி இருக்கும்?

படிப்புப் போச்சு; பாட்டும் போச்சு என்றால் எனக்கு எப்படி இருக்கும்?

## ஆர்மோனியத்தை தொட்டதால் அண்ணனிடம் அடி வாங்கினார், இளையராஜா

அண்ணன் இல்லாத நேரத்தில், அவருடைய ஆர்மோனியத்தை இளையராஜா எடுத்து வாசித்தார். இதனால் ஆத்திரம் அடைந்த அண்ணன் பாவலர் வரதராஜன், பிரம்பை எடுத்து இளையராஜாவை விளாசினார்.

பாவலரின் கச்சேரிகளில் பெண் குரலில் பாடி அசத்திய இளையராஜாவை, திடீரென்று "நீ பாடவேண்டாம்" என்று பாவலர் கூறிவிட்டார். அதற்குக் காரணம் இளையராஜாவின் குரலில் ஏற்பட்ட மாற்றம்தான்.

இதுபற்றி இளையராஜா கூறுகிறார்:

"நாளொரு கச்சேரி, பொழுதொரு ஊர் என்று போய்க்கொண்டிருந்த அந்த உற்சாக நாட்களில், ஆண்களுக்கு பருவ வயதில் வரும் "மகரக்கட்டு" எனக்கு வந்துவிட்டது. அதாவது குரல் உடைந்து, ஆண் குரலாக மாறுவதை "மகரக்கட்டு" என்பார்கள். என் குரல் பெண் குரல் போல் இல்லாததால், என்னை விட்டு விட்டு தம்பி அமரனை (கங்கை அமரன்) கச்சேரியில் டூயட் பாட அழைத்துக்கொண்டு போனார், அண்ணன்.

சோதனை

"படிப்பும் போச்சு; பாட்டும் போச்சு! இதென்ன பெரிய பாடாய்ப் போச்சுதே!" என்ற வேதனையுடன் பண்ணைபுரம் கிராமத்தையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தேன். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு யுகமாக கழிந்தது.

என்னுடன் படித்த நண்பர்கள் மதுரையில் கல்லூரிகளில் சேர்ந்து படித்து லீவு நாட்களில் ஊர் வருவார்கள். ஊரில் இருக்கும் நான், அவர்களை சந்திக்க நேரும்போது படிப்பின் இழப்பைப்பற்றி நினைத்து, மனம் துன்பப்படும்.

அதே நேரம் அதிகமாக ஊர் சுற்றியதால் கிடைத்த அனுபவத்தில், அவர்களுக்குத் தெரியாத விஷயங்களை நான் தெரிந்து வைத்திருப்பதைக் கண்டு, அவர்கள் பொறாமைப் படுவதைக் காணப் பெருமையாகவும் இருக்கும்!

எப்படியோ! எப்போதும் நான் தனிதான் என்று இறைவன் எழுதி வைத்து விட்டதால், அதை என்னால் எப்படி மாற்ற முடியும்?

இந்தத் தனிமையைப் போக்க, "கல்கி"யின் சரித்திர நாவல்கள் எனக்கு உதவின. பள்ளியில் படிக்கும்போது ஏற்கனவே இந்த நாவல்களை படித்திருந்தாலும், என்றைக்குப் படித்தாலும் அன்றைக்குத்தான் எழுதியதைப் போலிருக்கும்.

ஆர்மோனியம் வாங்கித்தந்த அடி

இதற்கிடையே கோவையில் கச்சேரிக்கு சென்று வந்த அண்ணன் ஆர்மோனியம் ஒன்றை வாங்கி வந்திருந்தார். அதன் விலை 85 ரூபாய் என்றார். அதை மிகவும் பத்திரமாக பாதுகாத்து வந்தார். யாரும் தொடக்கூடாது என்று உத்தரவே போட்டிருந்தார்.

இது தெரிந்தும், அவர் வீட்டில் இல்லாத ஒரு நாள் நான் அந்த ஆர்மோனியத்தை எடுத்து சும்மா வாசிக்க முயற்சி செய்து கொண்டிருந்தேன். எதிர்பாராமல் அந்த

நேரத்தில் அண்ணன் வந்துவிட்டார். நான் ஆர்மோனியமும் கையுமாக இருந்ததை பார்த்தவருக்கு, கோபம் வந்துவிட்டது. புறங்கையை நீட்டச்சொல்லி, பிரம்பால் விளாசிவிட்டார்."

– இவ்வாறாக இளமைப் பருவத்து நினைவுகளை பகிர்ந்து கொண்டார், இளையராஜா.

இளையராஜா இப்படி பிரம்படி வாங்கியிருக்கிறாரே என்று உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். ஏற்கனவே அண்ணனிடம் அடிவாங்கிய அனுபவமும் இருக்கிறது. அதை அவரே கூறுகிறார்:

குளித்ததால் உதை

"சிறு வயதில் கிணற்றில் நீச்சலடித்துவிட்டு வீட்டுக்கு வந்தபோது, பாதுகாப்புக்கு ஆளில்லாமல் சிறுவர்களாக சேர்ந்து குளித்ததை தெரிந்து கொண்டவர், என்னை வீட்டுத்தூணில் கட்டிப்போட்டார். மீண்டும் ஒரு முறை குளித்து விட்டு வந்ததற்காக, அம்மாவே என்னையும் பாஸ்கரையும் தூணில் கட்டி வைத்திருக்கிறார்கள். அதோடு நில்லாமல் கண்ணில் மிளகாயை அரைத்து வைத்தார்கள். அப்புறம் தண்டனையைக் குறைக்க வெங்காயத்தை அரைத்து வைப்பது வழக்கமாயிற்று.

குறைந்தது மூன்று மணி நேரமாவது இப்படி தூணில் கட்டிப் போட்டிருப்பார்கள். பின்பு பரிதாபப்பட்டு அவிழ்த்து விடுவார்கள்.

இப்படி தண்டனை வாங்குகிற அன்று இரவு சாப்பாட்டின்போது, கேட்பதெல்லாம் இல்லை என்று சொல்லாமல் போட்டிருக்கிறார்கள். அதுதான் சமயம் என்று நானும் பாஸ்கரும் "இந்த வீட்டைப்போல் எந்த வீடும் இருக்க முடியாது" என்று ஆரம்பிப்போம்.

"ஏண்டா அப்படிச் சொல்றீங்க?" என்று அம்மா திருப்பிக் கேட்பார்.

"குளிக்கிறதுக்குப் போய் எந்த வீட்டிலாவது அடிப்பாங்களா?" என்று தொடங்கி "இனிமே தீபாவளி தீபாவளிக்குத்தான் 'கங்கா ஸ்நானம்' பண்ணணுமாக்கும்?" என்று சொல்லும்போதே சிரிப்பு வந்து சிரித்து விடுவோம்.

ஆர்மோனியத்துக்காகவும் அடி வாங்க நேர்ந்ததால், அதன் பிறகு அண்ணன் வீட்டில் இருக்கும் நேரங்களில் ஆர்மோனியத்தை தொடுவதில்லை. அவர் இல்லாதபோது எடுத்து வாசிப்பது, வருவது தெரிந்தால் எடுத்து மூடி வைத்து விட்டு ஒன்றும் தெரியாதது போல் இருப்பது என்பது வழக்கமாகிவிட்டது.

அம்மா, அண்ணனை கண்டிக்கவும் மாட்டார்கள்; நான் வாசிப்பதை தடுக்கவும் மாட்டார்கள். இதனால் அம்மாவின் மானசீக அனுமதி கிடைத்த மகிழ்ச்சியில், சீக்கிரமே ஓரளவுக்கு ஆர்மோனியம் வாசிக்க கற்றுக்கொண்டு விட்டேன்.

ஆர்மோனியம் வீட்டுக்கு வந்த புதிதில், அண்ணனுடன் கச்சேரிக்கு வரும் சங்கரதாசிடம், எனக்கு ஆர்மோனியம் கற்றுத்தரும்படி கேட்டிருக்கிறேன். அவரும் 'சரி' என்றார். ஆனால் வாய்ப்பு அமையாததால் அவரிடம் கற்கும் வாய்ப்பு கிடைக்காமலேயே போயிற்று. ஆனாலும் அவர் வாசிக்கிற பாணியை மனதில் கொண்டு வந்து 'இப்படி வாசிப்பாரா? இல்லை, இப்படி வாசிப்பாரா?' என்று வாசித்து வாசித்து, ஓரளவுக்கு என்னால் வாசிக்க முடியும் என்ற தெளிவுடன், அதே நேரம் திருப்தியில்லாமலும் இருந்தேன்.

இந்த நிலையில்தான் அண்ணனுக்கும், சங்கரதாசுக்கும் ஏதோ மனஸ்தாபம். கம்பத்தில்

நடக்கவிருந்த ஒரு கச்சேரிக்கு, முந்தின நாள் தன்னால் வர இயலாது என்று சொல்லியனுப்பி விட்டார், சங்கரதாஸ்.

அணணன் தவித்துப் போனார். ஒருநாள் இடைவெளியில் வேறு ஒருவரை பார்க்க வேண்டும். அதற்கு மதுரைக்குத்தான் போகவேண்டும். அப்படியே ஆள் கிடைத்தாலும் ஒத்திகை பார்க்க நேரம் வேண்டும்.

முதல் அஸ்திவாரம்

இப்போதும் அம்மாதான் கைகொடுத்தார். அம்மா அண்ணனிடம், “தம்பி ராஜையாவை கூட்டிட்டுப் போகலாமே” என்றார்.

அம்மா இப்படிச் சொன்னதும், அண்ணன் ஒருமுறை என்னை மேலும் கீழும் பார்த்தார். நான் பிராக்டீஸ் செய்து வைத்திருப்பதை அவராகத் தெரிந்து கொண்டாரோ அல்லது எனக்குத் தெரியாமல் அம்மாதான் சொல்லியிருந்தாரோ, “சரி, வா!” என்றார்.

என் இசை வாழ்வுக்கு போடப்படும் முதல் அஸ்திவாரக்கல் அது என்று தெரியாமல், ஆர்மோனியத்துடன் அண்ணன் கச்சேரிக்கு புறப்பட்டேன்.

கம்பத்தில் மெயின் ரோட்டில் மேடை போடப்பட்டிருந்தது. ஒரு சிறுவன் (இளையராஜா) அரை டிராயருடன் ஆர்மோனியம்வாசிக்க, பாஸ்கர் தபேலா வாசிக்க, அண்ணன் பாட கச்சேரி தொடங்கியது. என் கைகள் நடுக்கத்துடன் ஆர்மோனியம் வாசிக்க, நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை, என் வாசிப்புக்கும் கைதட்டல் கிடைக்குமென்று!

தப்பும் தவறுமாய் வாசித்ததற்கே இவ்வளவு கைதட்டல் கிடைக்கிறதே, இன்னும் சரியாக வாசித்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று எண்ணினேன்.

இதன் பிறகு, வீட்டில் ஆர்மோனியத்தை நான் தொட்டால், அண்ணன் அடிப்பதில்லை.

**அண்ணன் பாவலருடன்**
**கச்சேரி நடத்தியபோது சந்தித்த பிரச்சினைகள்**

அண்ணன் பாவலர் வரதராஜனுடன் சேர்ந்து கச்சேரி நடத்தியபோது, இளையராஜா சில பிரச்சினைகளை சந்திக்க நேர்ந்தது.

குரு என்று தனியாக யாரும் இல்லாமலே, ஆர்மோனியத்தை கற்றுக்கொள்ளத் தொடங்கினார், இளையராஜா. கொஞ்சம் பழகிய நிலையில் கச்சேரியில் அவர் வாசிப்புக்கு கிடைத்த கைத்தட்டல், இதை முழுமையாக கற்றே ஆகவேண்டும் என்கிற அளவுக்கு அவரை உந்தித் தள்ளியது.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

உற்சாகம்

"கச்சேரியில் கிடைத்த கரகோஷம் எனக்குள் புது உத்வேகம் ஏற்படுத்தியது. இதனால் வீட்டில் நான் ஆர்மோனியம் வாசிக்கப் பழகும் நேரம் அதிகமானது.

இதில் கூட இன்னொரு வித சிக்கல் இருந்தது. வாசித்து வாசித்துப் பழகி வந்தாலும் ராகங்களின் பெயர்கள் தெரிந்தாலும், ஸப்த ஸ்வரத்தில் எது 'ஸ, ரி, க' என்று தெரியாது. எந்த ஸ்ருதியில் வாசிக்கிறோமோ அதுதான் 'ஸ' என்று எண்ணிக் கொள்வேன். தெள்ளத் தெளிவாக தெரியாது. ஆனால் ஒரு முறைக்கு இரு முறை ஒரு பாடலைக் கேட்டால் போதும். முழுவதையும் வாசித்து விடுவேன்.

பிராக்டீசில் அதிக கவனம் இருந்ததால் சாதாரணமாகவே என் கைவிரல்கள் ஏதாவது பாடலுக்குத்தக்கபடி அசைந்து கொண்டிருக்கும். இது நாளடைவில் அதிகமாகி, ஒரு கட்டத்தில் நெஞ்சை ஆர்மோனியக் கட்டைகளாக நினைத்து, விரல்கள் அதில் மேலும் கீழும் போய்வரும் அளவுக்கு ஐக்கியமாகிவிட்டேன்.

கனவிலும் இசை!

தூங்கும்போதும் இது தொடர, ஒரு நாள் அம்மா கவனித்திருக்கிறார். காலையில் விடிந்ததும் விடியாததுமாக என்னிடம் வந்தவர், "ஏம்ப்பா! நேத்து தூங்கும்போது உன் நெஞ்சு மேலே விரலு மேலும் கீழுமா போச்சுதே! ஏதாவது ஆர்மோனியம் வாசிக்கிற மாதிரி கனவு கண்டியா?" என்று கேட்டார்.

அம்மாவை சமாளித்து அனுப்பினேன். தூக்கத்திலும் என் பிராக்டீஸ் தொடர்ந்திருக்கிறது என்பது புரிந்தது.

நாங்கள் ஒரு குழுவாக ஆரம்பித்து, எங்கள் காலடி படாத சிற்றூரே தமிழ்நாட்டில் இல்லை என்னும் அளவுக்கு, எல்லா இடங்களிலும் அண்ணனோடு எங்கள் இசை ஒலித்திருக்கிறது. அப்போது நேரடியாக மக்களை சந்தித்து அவர்களின் எண்ணப் பிரதிபலிப்பை கண்ட பிறகுதான், எந்த மாதிரியான இசை விருப்பம் அவர்களுடையது என்பதை தெரிந்து கொள்ள முடிந்தது. சினிமாவுக்கு வந்த பிறகு இசையால் மக்களைக் கவர, எது எப்படி இருக்க வேண்டும் என்ற விஷயத்தில் ஒரு பிடிமானம் கிடைத்தது.

அனுபவம்

எனக்கு கிடைத்த, அதாவது தானாக அமைந்த இந்த அனுபவங்கள், உலகின் எந்தவொரு இசைக் கலைஞனுக்கும் இதுவரை கிடைத்திராது. இனிமேல் எவருக்கும் கிடைக்காது என்று கூட சொல்வேன்.

கச்சேரியில் படிப்படியாக பக்குவப்பட்டேன். வழக்கமாக கச்சேரியில் அண்ணன் பாடும் ஒரு குறிப்பிட்ட ஸ்ருதியில்தான் நன்றாக பிராக்டீஸ் செய்து வைத்திருப்பேன். அதை வேறு ஏதாவது ஸ்ருதியில் வாசிக்கச் சொன்னால் தப்பும் தவறுமாகத்தான் வரும். ஆர்மோனியத்திலோ, பியானாவிலோ ஒரு ஸ்ருதிக்கு வந்த 'விரல்வித்தை' இன்னொரு ஸ்ருதிக்கு வராது.

ஆனால் எல்லா ஸ்ருதியிலும் என்னைப் பழக்க, இசையே எனக்கொரு பரீட்சை வைத்தது.

ஊர் ஊராக

எங்கள் கச்சேரி முதல் நாள் நாகர்கோவிலில் இருக்கும். மறுநாள் ஊட்டியில் இருக்கும். நாகர்கோவிலில் இரவு 10 மணிக்கு கச்சேரி முடிந்தால் அதற்கு மேல் ஊட்டி பஸ் இருக்காது. எப்படியோ அடித்துப் பிடித்து காலை 5 மணி பஸ்சைப் பிடித்து, திண்டுக்கல், அங்கிருந்து கோவை, அங்கிருந்து ஊட்டி என்று விழுந்தடித்து மாலை ஆறுமணிக்குள்ளாக போய்ச் சேர்ந்து விடுவோம்.

பயணத்தின்போது அண்ணனால் சரிவரத் தூங்க முடியாமல் சமயத்தில் குரல் சரியில்லாமல் போகும். இப்படி குரல் சரியில்லாத நாட்களில் 'ஒரு அரைக்கட்டை கம்மி பண்ணு' என்று ஸ்ருதியை குறைக்கச் சொல்வார்.

அவருக்கு பிரச்சினை இல்லை. தபேலா வாசிக்கும் பாஸ்கருக்கும் பிரச்சினை இல்லை. எந்த ஸ்ருதி என்றாலும், கட்டையை தட்டி சேர்த்து விட்டால், தபேலாவில் விரல் அசைவு மாறப்போவதில்லை. நான்தான் மாட்டிக்கொள்வேன். தப்பும் தவறுமாக அந்த கச்சேரியை எப்படியாவது சமாளித்து விட்டு, அடுத்த நாள் பகல் முழுவதும் அந்த மாறிய 'ஸ்ருதி'யில் பிராக்டீஸ் செய்வேன். ஓரளவு தயார் ஆகிவிடுவேன்.

இப்படியே கொஞ்ச நாள் ஓடும். பிறகு இன்னும் அரைக் கட்டை குறையும். அதிலும் இதே கதைதான்.

இதற்குள் புதிய பாடல்கள் ஏதாவது எழுதிச் சேர்த்தால், குறைந்த ஸ்ருதியிலேயே பிராக்டீஸ் செய்து கரெக்டாக ரெடியாகி இருப்பேன். அன்றைக்கென்று பார்த்து அண்ணன் "ஸ்ருதியை, பழைய ஸ்ருதிக்கு ஏற்றி வை" என்பார்.

வம்புதான். மறுபடி அவசர கதியில் பதட்டமும் பரபரப்புமாய் 'மாற்றல்' வேலையை தொடர்வேன்.

இன்றைக்கு என்னுடைய பல பாடல்களில் உருகி, கண்ணீர் விட்டு, துன்பமடைந்து, ஆறுதலடையும் ரசிகர்கள் உலகெங்கும் இருக்கிறார்கள். ஆனால் இந்த இசையால், ஸ்ருதியால், வாசிக்க இயலாமையால் நான் எவ்வளவு துன்பப்பட்டு, தூக்கம் கெட்டு நொந்திருந்தேன் என்பது உங்களில் யாருக்குமே தெரிந்திருக்க வாய்ப்பில்லை.

பெரும்பாலும் எங்கள் கச்சேரியில் சினிமா டியூன்களில்தான் அண்ணன் பாடல் எழுதிப்பாடுவார். இடையிடையே அவர் இசையமைத்த பாடல்களும் இடம் பெறும்.

படிப்பினை

என் வாழ்வில் அதிகப் படிப்பினைகள் தொடங்கிய நேரம் இதுதான் என்பேன்.

அண்ணனின் இசை நிகழ்ச்சிகளை மதுரை மாவட்ட கம்யூனிஸ்டு கட்சி அலுவலகம்தான் முடிவு செய்யும். கிரி என்பவர் அதை உறுதி செய்வார். அதன் பிறகே கச்சேரி நடக்கும். இதனால் கச்சேரி நடத்துவதில் ஒரு ஒழுங்கு ஏற்பட்டது. ஒரு மாவட்டத்தில் ஒரு வாரத்தில் ஆறேழு இடங்களில் கச்சேரி நடந்தால், அடுத்த வாரம் இன்னொரு மாவட்டம்.

தொடர்ந்து இப்படி இரண்டு மாவட்டங்களில் 15 நாட்கள் கச்சேரி செய்து விட்டு, அடுத்த கச்சேரிக்கான இடைவெளி நேரத்தில் எங்கள் ஊருக்கு (பண்ணைபுரம்) வந்து போவோம்.

செலவுக்கு பணம்

அந்த நேரத்தில் அண்ணன் தன்னிடம் இருக்கும் பணத்தை அம்மாவிடம் கொடுப்பார். அம்மா அதை வீட்டுச் செலவுக்கு வைத்துக் கொள்வார்கள்.

அண்ணனுக்கு குடிப்பழக்கம் இருந்தது. அதனால் சில நேரங்களில் அம்மாவிடம் பணம் கொடுக்க மறந்தோ அல்லது முடியாமலோ போனால் அம்மா வருந்துவார். ஒரு கட்டத்தில் இந்த வருத்தம், கோபத்தில் கொண்டு விட்டது. அண்ணன் பணம் கொடுக்காத ஒரு நாளில் அம்மாவுக்கும் அண்ணனுக்கும் வாக்குவாதம் வலுத்து, மனத்தாங்கலில் முடிந்த நேரத்தில், "இனி உன் பணத்தை என்னிடம் தரவேண்டாம். கச்சேரிக்காக நீ வாங்கும் பணத்தில் பாஸ்கருக்கும், ராஜையாவுக்கும் உள்ள பங்கை மட்டும் கொடுத்தால் போதும்" என்று சொல்லி விட்டார் அம்மா.

அண்ணனுக்கும் அது நியாயமாகப் பட்டதால், அடுத்த கச்சேரியில் இருந்து அது அமுலுக்கு வந்தது. பாஸ்கருக்கும் எனக்கும் ஒரு நிகழ்ச்சிக்கு இவ்வளவு என்று ஒதுக்கப்பட்டது. அது பாஸ்கர் கையில் கொடுக்கப்பட்டது. நாங்கள் ஊர் வரும்போது அதை அம்மாவிடம் பாஸ்கர் கொடுத்துவிடுவான்.

**பாரதிராஜாவுடன் நட்பு ஏற்பட்டது எப்படி?**
**இளையராஜா வெளியிடும் தகவல்கள்**

சினிமாவில் நுழைவதற்கு முன்பே (சிறு வயதிலேயே) டைரக்டர் பாரதிராஜாவும் இளையராஜாவும் நண்பர்கள்.

இவர்களுக்கிடையே நட்புறவு ஏற்பட்டதே சுவையான கதை. அதுபற்றி இளையராஜா கூறுகிறார்:

நண்பர்கள்

"என் இளமைக்கால தோழர்கள் என்றால் அதில் முதல் இடம் கரியணம்பட்டி சுப்பிரமணியத்துக்குத்தான். பலரும் இருந்தார்கள் என்றாலும் மிகவும் உயர்ந்த நட்பு இவருடன்தான் இருந்தது. ஜெயகரன், ரங்கசாமி, மகேஸ்வரன் என்பவர்களும் இந்த லிஸ்ட்டில் உண்டு.

சுப்பிரமணியுடன் ஆறு, ஏழு, எட்டு என ஒன்றாகப் படித்த பின்னே, அவர் பெரியகுளம் ஆஸ்டலில் தங்கிப் படித்தார். எஸ்.எஸ்.எல்.சி. முடித்தவர், அப்போதிருந்த "பி.யூ.சி" முடித்து ஊருக்கு வந்த நேரத்தில்தான் எங்கள் நட்பு வலுத்தது.

இந்த நேரத்தில்தான் இந்திய அரசு "என்.எம்.இ.பி" என்றொரு அமைப்பை தொடங்கியிருந்தது. இது மலேரியா காய்ச்சல் வரும் முன் காக்கும் அமைப்பு.

கிராமங்களுக்குப்போய் வீடு வீடாக இருப்பவர்களிடம் ரத்தம் எடுப்பார்கள். அதை பரிசோதனைக்கு வத்தலக்குண்டுக்கு அனுப்புவார்கள். இந்த சோதனையில் மலேரியா இருப்பது உறுதிப்படுத்தப்பட்டால், அதற்கு இலவசமாக மருந்து, மாத்திரைகள் கொடுப்பார்கள்.

வந்தார், பாரதிராஜா

இந்த வேலையை பார்ப்பதற்காக எங்கள் ஊர் பண்ணைபுரத்தை சென்டராக்கி 7 கிராமங்களுக்கு மூன்று பேர் இருந்தார்கள். அவர்களை கண்காணிப்பதற்காக இன்ஸ்பெக்டராக ஒரு ஆள் வந்தார்.

ஒருநாள் தற்செயலாக நானும், அண்ணன் பாஸ்கரும் பண்ணைபுரம் அத்தி மர பஸ் ஸ்டாண்ட் பக்கமாய் போய்க்கொண்டிருந்தோம். பஸ்சில் இருந்து பேண்ட் – ஷர்ட்டுடன் இறங்கிய ஒருவர், எங்களைக் கடந்து ஊருக்குள் போனார்.

"அது யார்றா பேண்ட் – ஷர்ட் போட்டுக்கிட்டு நம்ம ஊருக்கு வர்றது?" என்று எங்களுக்குள் கேட்டுக்கொண்டோம். உடனே விடை கிடைக்கவில்லை. மதிய உணவு முடிந்து சாயங்காலம் காபி சாப்பிட கடைத் தெருவுக்குப் போனால் அங்கே பாஸ்கரும், காலையில் பார்த்த பேண்ட் – ஷர்ட் ஆளும் உட்கார்ந்திருந்தார்கள்.

என்னைப் பார்த்ததும் பாஸ்கர் "இவர்தான் இந்த ஊருக்கு வந்திருக்கிற என்.எம்.இ.பி. இன்ஸ்பெக்டர். பெயர் சின்னசாமி" என்று அந்த புதியவரை அறிமுகப்படுத்தினார். நானும் உடனே கைகொடுத்து 'ஹலோ சார்' என்று அறிமுகமாகிக் கொண்டேன்.

காபி குடித்து முடித்ததும் அப்படியே பேசிக்கொண்டே நடந்தபோது ஒரு மாதிரியான

ரசனை உள்ளவராகத் தெரிந்தது.

மறுநாள் காலையில் கிணற்றடியில் குளிக்கப்போனோம். முதல் நாள் அவரை 'சார்... சார்...' என்று அழைத்த பாஸ்கர், 'ஏய், என்னப்பா' என்று மாற்றி, அதையும் தாண்டி 'அடப்போய்யா' என்ற லெவலுக்கு நெருக்கமாகி விட்டார்.

நான் சிறுவன். நானும் பாஸ்கரும் அண்ணன் – தம்பி என்றாலும் நண்பர்கள் போலத்தான் பழகுவோம். இப்போது பிரச்சினை என்னவென்றால் சின்னச்சாமியுடன் பாஸ்கர் நெருக்கம் காட்டியதில் என்னை வெட்டி விட்டார். அவர்கள் போகிற இடங்களுக்கு என்னை அழைத்துச் செல்லமாட்டார்கள். மீறி அவர்களுடன் போக முயன்றால் "டேய், நீ சின்னப்பையன்! எங்களோடு வராதே!" என்பார்கள்.

இந்த சின்னச்சாமி வேறு யாருமல்ல. பின்னாளில் சினிமா டைரக்டராக மாறி, 'மண்வாசனை'யுடன் ரசிகர்கள் மனதில் குடிகொண்டுவிட்ட பாரதிராஜாதான்.

நெருக்கமான நட்புறவு

பண்ணைபுரத்திலேயே பாரதி ஒரு சிறு அறையை வாடகைக்கு எடுத்து தங்கிவிட்டார். இன்ஸ்பெக்ஷனுக்கு போய்வரவேண்டும் என்று அவ்வப்போது புறப்பட்டுப்போவார்.

"என்னய்யா, பெரிய இன்ஸ்பெக்ஷன்? அப்புறம் போகலாம்" என்பார், பாஸ்கர்,

"டூட்டியில் கரெக்டா இருக்கணும்" என்பார், பாரதி. "நீயே இன்ஸ்பெக்டர்தானே. எப்ப வேணும்னாலும் போகலாமில்லே?" – இது பாஸ்கர்.

"மேல இருந்து யாராவது வந்து நான் மாட்டிக்கக் கூடாதில்லே?" – இது பாரதி.

பாரதி அங்கே இங்கே இன்ஸ்பெக்ஷனுக்காக சுற்றுகிற நேரம்தவிர, மற்ற நேரங்களில் எங்களோடுதான் இருப்பார். எங்களோடுதான் சுற்றுவார். நாங்கள் நல்ல நண்பர்களாகி விட்டோம்.

சீட்டாடுவது; சினிமாவுக்குப் போவது; பிடித்த நடிகர்கள் பற்றி பேசுவது; எழுத்தாளர்களின் படைப்புகள் பற்றி அலசுவது; புளியந்தோப்பில் காக்கா குஞ்சு விளையாடுவது; கிணற்றில் நீச்சலில் தலைகீழாகத் தாவுவது; கிணற்றுக்குள்ளேயே ஒளிந்து பிடித்து விளையாடுவது என இப்படி நாங்கள் சுதந்திரப் பறவைகளாகத் திரிந்தோம்.

ஆனாலும் மாலை 4 மணியில் இருந்து 5 மணி வரை என்னை ஒதுக்கிவிடுவார்கள். 'நீ சின்னப்பையன். எங்களுடன் வரக்கூடாது' என்று "தடா" போடுவார்கள். நானும் ஒதுங்கி விடுவேன்.

'ஏன் இப்படி?' கேட்பீர்கள். அந்த நேரம் ஸ்கூல் முடிந்து மாணவிகள் வீடு வரும் நேரம்! இதுதான் காரணம்.

இப்படி 'தடா' போட்டவர்கள் நாளடைவில் நான் வளர்ந்ததாக கருதினார்களோ என்னவோ, என்னையும் சேர்த்துக்கொண்டார்கள்.

ஓவியம்

பாரதி நன்றாக ஓவியம் வரைவார். நானும் கொஞ்சம் வரைவேன். எல்லாம் பென்சில்

டிராயிங்தான். சமயத்தில் எங்கள் இருவருக்கும் ஓவியம் வரைவதில் போட்டி வந்துவிடும். யார் வரைவது நன்றாக இருக்கும் என்று யாராலும் கணித்து சொல்ல முடியாது. இரண்டுமே நன்றாக இருக்கும்.

ஆனால் எனக்கு மட்டுமே தெரியும், பாரதி என்னைவிட நன்றாக ஓவியம் வரைவார் என்பது.

இப்படி எங்களுடன் தெருவில் ஆரம்பித்த நட்பு வீடு வரை வந்துவிட்டது. வீட்டுக்கும் வந்து, 'ஜோக்' அடித்து கலகலப்பு ஏற்படுத்திவிட்டுப் போவார்.

வந்தது, கோபம்

ஆனால் இப்படி நெருக்கம் காட்டி பழகிய பாரதி என்னைவிட எங்களிடம் கோபித்துக்கொள்ளும் அளவுக்கு ஒரு விஷயம் நடந்தது. அதற்கு பாஸ்கர்தான் காரணம்.

பாஸ்கர் ஒருமுறை கோம்பை டூரிங் தியேட்டரில் படம் பார்க்க பாரதியை அழைத்துப்போனார். டிக்கெட் வாங்காமல் நண்பர்கள் மூலம் பெஞ்ச் டிக்கெட்டில் ஓசியில் படம் பார்க்க ஏற்பாடு செய்தார். படம் பார்த்துக் கொண்டிருக்கும்போது, போதாத நேரம் செக்கிங் அதிகாரி வந்துவிட, பாரதிக்கு வியர்த்துக் கொட்டியது. ஒரு வழியாக செக்கிங் பார்வைக்கு போகாமல் தியேட்டரில் இருந்து வெளியே வந்தவர், பாஸ்கரை கோபத்தில் திட்டித் தீர்த்துவிட்டார்.

அடுத்த நாள் காலையில் கடை வீதியில் டிபன் சாப்பிடப் போனால் அங்கிருந்தார். ஆனால் எங்களைப் பார்த்த பிறகும் பேசாமல் இருந்தார். "சரி; கோபம் போலிருக்கிறது" என்றெண்ணி சாப்பிடும் நேரத்தில் மெள்ள பேச்சுக் கொடுத்தோம்.

அப்போதுகூட தீராத கோபத்துடன்தான் பாஸ்கரை பார்த்தபடி, "டேய் இவன் இருக்கானே..." என்று ஆரம்பித்தார்.

ஆனால் அந்தக் கோபம் நிற்கவில்லை. பாஸ்கர் முகத்தைப் பார்த்ததும் புரையேறும் அளவுக்கு சிரிக்கத் தொடங்கி விட்டார். கூடவே நாங்களும் சேர்ந்து கொள்ள, நிறுத்த முடியாத சிரிப்பாகி விட்டது.

சிரிப்பு ஓய்ந்த நேரத்தில் பாஸ்கரிடம், "எப்படிய்யா உனக்கு இந்த மாதிரி ஒரு தைரியம் வந்தது?" என்று கேட்டார்.

பாஸ்கர் அவரிடம், "இன்ஸ்பெக்டர் அய்யாவாச்சே! நல்ல படம் ஓடுது. அதைப் பார்க்கட்டுமேன்னு 'ஓசி'யில ஏற்பாடு செய்தேன். ஆனா உன்னோட நேரம் சரியில்லை" என்றார்.

பாரதியும் விடவில்லை. "ஏண்டா கூட்டிட்டுப்போனது நீ! ஆனால் என் நேரம் சரியில்லையா?" என்று மடக்கினார்.

பாஸ்கரும் விடுவதாக இல்லை.

"இத்தனை நாள் நாங்க போயிருக்கோம். யாராவது செக்கிங் வந்தார்களா? அதென்ன நீ வந்தப்போ மட்டும் செக்கிங்? அப்ப உன் நேரம் சரியில்லையா? என் நேரம் சரியில்லையா?"

பாஸ்கர் விடாப்பிடியாகக் கேட்க, பாரதி அதற்கு சிரிக்க, கோபம் காணாமல் போயிருந்தது.

இதுபோன்ற நிகழ்ச்சிகளால் எங்கள் நட்பு மேலும் வலுப்பட்டது.

**பாரதிராஜாவுடன் சுற்றித்திரிந்த அந்த நாட்கள்...**
**இளையராஜா வெளியிடும் தகவல்கள்**

சிறு வயதில், பாரதிராஜாவுடன் சுதந்திரப் பறவையாக சுற்றித்திரிந்த நாட்களை இளையராஜா நினைவு கூர்ந்தார்.

அவர் கூறினார்:–

"ஊரில் வலம் வந்தாலும் திடீர் திடீரென கச்சேரி அழைப்புகளுக்கும் போய்வர வேண்டியிருக்கும். சில சமயங்களில் பாரதியும் எங்களுடன் கலந்து கொள்வார். மதுரையைச் சுற்றி கச்சேரி இருந்தால், என்ஜினீயரிங் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்த சுப்பிரமணியன் வந்து சேர்ந்து கொள்வார்.

மதுரைக் கச்சேரி என்றால் கம்யூனிஸ்டு கட்சி ஆபீசில் தங்குவோம். கச்சேரிக்கு முன்போ, பின்போ மேட்னி, நைட்ஷோ என்று பார்ப்பதுண்டு. பார்த்த படம் பற்றி விடிய விடிய விமர்சனம் தொடரும்.

பஸ்சை நிறுத்துவோம்

மதுரை வீதிகளில் நானும் பாரதியும் அடித்த கூத்துகளுக்கு அளவே இல்லை. நானும் அவரும் எந்த திட்டமும் இல்லாமல் வீதியில் சும்மா நடந்து போய்க்கொண்டிருப்போம். அப்படியே பஸ் ஸ்டாண்ட் பக்கம் போனால் திடீரென்று ஒரு ஐடியா வரும். அப்போது தான் பஸ் ஸ்டாண்டில் இருந்து புறப்பட்டு வருகிற பஸ்சை அது எந்த ஊருக்குப் போகிற பஸ் என்றுகூட பார்க்காமல் கையைக்காட்டி நிறுத்தி ஏறிக்கொள்வோம். அப்படி ஏறும்போது, 'இது எந்த ஊருக்குப் போகிறது' என்று கேட்போம். ஏதோ ஒரு ஊரைச் சொல்வார்கள். 'அப்படியென்றால் நாம் போகவேண்டிய ஊர் வழியாகத்தானே இந்தப் பஸ் போகும். அங்கே இறங்கிக் கொள்வோமே' என்று எங்களுக்குள் பேசிக்கொள்வோம்.

அந்த பஸ் எங்கேயோ சுற்றி ஏதோ கிராமத்துக்குள் நுழையும். அங்கே திடீரென்று எந்தக் காரணமும் இல்லாமல் இறங்கி விடுவோம்.

முன்பின் அறிமுகம் இல்லாத அந்த சிறிய ஊரில் எங்களை பார்ப்பவர்கள், "இது யார்டா? புதுசா ரெண்டு பேர்?" என்கிற மாதிரி பார்ப்பார்கள். அப்படிப் பார்ப்பவர்களில் யாராவது, எங்களை யாரென்று தெரிந்து கொள்ளும் எண்ணத்தில் எங்களிடம் வந்தால், நாங்களாக முந்திக்கொண்டு பேசத்தொடங்கி விடுவோம். "ஏண்ணே! மீசைக்காரர் வேலுச்சாமி அண்ணன் வீடு எதுண்ணே?" என்று கேட்போம்.

"மீசை வேலுச்சாமியா? அப்படி யாருமே இங்கே இல்லையே?" என்பார்கள்.

இந்த இடத்தில், புதியவர்களுக்கு பதில் சொல்லும் நல்ல நோக்கத்தில் ஊரில் உள்ள வேறு சிலரும் கலந்து கொண்டு விளக்கம் சொல்ல முற்படுவார்கள். வீடுகளில் இருக்கும் தாய்மார்களும், பெண்களும்கூட எட்டிப் பார்ப்பார்கள். தங்களுக்குத் தெரிந்த எதையாவது எங்களுக்கு உதவும் நோக்கத்தில் சொல்லவும் செய்வார்கள்.

எல்லாவற்றையும் கேட்பது போல் பாவனை செய்துவிட்டு, "அப்போ இது புதுப்பட்டிதானே" என்போம்.

"ஆமாம்" என்பார்கள்.

உடனே முகத்தை குழந்தைத்தனமாக வைத்துக்கொண்டு, “வாடிப்பட்டி புதுப்பட்டிதானே” என்போம். முகத்தில், எதுவுமே தெரியாத அப்பாவித்தனம் குடிகொண்டிருக்கும்.

உடனே அவர்கள் அக்கறையுடன் “இல்லையே! வாடிப்பட்டி இங்கேயிருந்து பத்து மைல். அதுக்குப் பக்கத்துலதானே அந்தப் புதுப்பட்டி இருக்குது” என்பார்கள்.

நாங்கள் கொஞ்சம் ஏமாந்தது போல் நடித்து, “அப்ப இது அந்தப் புதுப்பட்டி இல்லையா?” என்போம்.

இப்போது அவர்களிடம் ஒரு ‘அச்சச்சோ’ அனுதாபம் தெரியும்.

“சரி! அடுத்த பஸ் எப்போ வரும்?” என்று கேட்போம்.

“அது ராத்திரி 7 மணிக்குத்தானே வரும். அதுவும் பெரிய குளம் பஸ்” என்பார்கள்.

சிரிப்பு

“அப்படியா? அப்போ ரொம்ப லேட்டாயிடுமே, என்னய்யா பண்றது?” என்று ஒருவரையொருவர் கேட்டுக்கொள்வோம். பிறகு எதுவும் பேசாமல், அந்த ஊரை விட்டு வெளியே வந்து சிரிப்போம். பாருங்கள்... அப்படியொரு சிரிப்பு!

வயலில் வேலை செய்பவர்கள் எங்கள் சிரிப்பைக் கேட்ட மாத்திரத்தில் “யாரோ வெளியூர் பசங்க போல இருக்காங்க” என்பார்கள்.

“ரோட்டுல சிரி சிரின்னு சிரிச்சிட்டுப் போறதைப் பாரேன்” என்று சில குரல்கள் ஒலிக்கும்.

சிலர் மட்டும் எங்கள் சீரியசான சிரிப்பை சிரித்த முகமாய் பார்த்து விட்டுப் போவார்கள்.

அப்புறம் எங்கேயோ போய் மெயின் ரோட்டுக்கு வந்து மறுபடியும் கிடைக்கிற ஏதாவது ஒரு பஸ்சில் ஏறி எங்காவது போவோம்.

கண்டக்டர் கேள்வி

இப்படி நாங்கள் போகிற சில பஸ்களில் எங்களுக்கு பழக்கமான சில டிரைவர், கண்டக்டர் இருப்பார்கள். பஸ்சில் நாங்கள் அடிக்கடி கச்சேரிக்காக பயணம் செய்யும்போது இவர்கள் எங்களுக்கு பழக்கப்பட்டுப் போயிருப்பார்கள். இப்படிப் போகிற போக்கில் எங்களுக்குத் தெரிந்த கண்டக்டர்கள், டிரைவர்கள் இருந்தால் தமாஷாகப் பேசுவார்கள். தெரிந்த கண்டக்டர்கள், “எங்கண்ணே டிக்கெட் கொடுக்கட்டும்?” என்று கேட்பார்கள்.

“பஸ் எங்கே போகுதோ, அங்கே கொடுங்க” என்போம், நாங்களும் தமாஷுக்கு குறைவில்லாமல்.

கண்டக்டரும் டிக்கெட் தர முயலும்போது, அது அதிகபட்சத் தொகையாக இருந்தால் கையில் இருக்கிற கொஞ்சப் பணமும் குறைந்து விடுமே. எனவே, ஒரு ஐடியா பண்ணுவோம். நான் பாரதியிடம் “ஏன்யா பர்ஸ் உங்கிட்டயா இருக்கு?” என்று கேட்பேன்.

பதிலுக்கு பாரதி, “இல்லையே! காபி சாப்பிட்டுட்டு அப்பவே உன்கிட்டத்தானே கொடுத்தேன்” என்பார்.

“ஏய் பொய் சொல்றியா? எங்கே உன் பாக்கெட்டைக்காட்டு” என்று பேண்ட் பாக்கெட்டில் கையை விட்டுத் தேடுவேன்.

பஸ்சே இப்போது எங்களை வேடிக்கை பார்க்கும். பைக்குள் கிடைத்த பணத்தை கண்டக்டரிடம் கொடுத்து, “குறையும் பணத்தை அப்புறமாகக் கொடுத்து விடுகிறோம்” என்போம்.

“அதுக்கென்னண்ணே! பரவாயில்லை” என்று சொல்லியபடி டிக்கெட் கொடுப்பார் கண்டக்டர்.

பெரியகுளம் போல ஒரு ஊரில் கடைசியாக பஸ் நிற்கும்போது எங்கள் கையில் காசில்லை என்று தெரிந்தால், கண்டக்டர் எங்களிடம் வந்து, “வாங்கண்ணே! டீ சாப்பிட்டுட்டுப் போவோம்” என்பார்.

“வேணாம்ணே! அடுத்த பஸ்சில் அல்லி நகரம் போறோம்” என்போம்.

ஸ்பெஷல் தோசை

ஓட்டலுக்கு அவர் பின்னாகவே போய் உட்கார்ந்தால், “ஒரு ஸ்பெஷல் தோசை” என்று சர்வர் சத்தமாக யாருக்காகவோ ஆர்டர் கொடுத்துக் கொண்டிருப்பார்.

உடனே பாரதி, “ஒரு ஸ்பெஷல் என்னண்ணே! மூணு ஸ்பெஷல்” என்பார். பிறகென்ன! கண்டக்டர் எங்களுக்கும் சேர்த்து பில்லுக்கு பணம் கொடுப்பார்.

அதோடு எங்களை விட்டு விடாமல், ஏதாவது ஒரு பஸ்சில் அந்த கண்டக்டரே சொல்லி எங்களை ஏற்றி விடுவார்.

அண்ணன் பாவலரும் பாஸ்கரும் அழகான கையெழுத்தைக் கொண்டவர்கள். போர்டெல்லாம் அழகாக பெயிண்டில் எழுதிக் கொடுப்பார்கள்.

ஒருமுறை பாவலர் அண்ணன் கச்சேரியில்லாத நாட்களில் பண்ணைபுரம் பஞ்சாயத்தைச் சேர்ந்த 7 கிராமங்களின் வீடுகளுக்கும் ‘டோர் நம்பர்’ எழுதும் வேலையை காண்ட்ராக்ட் எடுத்து வந்துவிட்டார்.

ஒரு மாத காலம் இப்படி வீடு வீடாக நம்பர் எழுதப்போன நேரத்தில் மனிதர்களை விட எங்களை அதிகம் வரவேற்றது நாய்கள்தான்.

பாஸ்கரும் நானும் நம்பர் எழுதப் போய் பட்ட அனுபவங்கள் சுவாரசியமானவை. கையில் கறுப்பு—வெள்ளை பெயிண்ட் டப்பாவை நான் பிடித்துக்கொள்ள, பாஸ்கர் டோர் நம்பரை எழுதுவார்.

பழைய நம்பரை பார்த்து, அதன் மேலே வெள்ளைப் பெயிண்டால் வட்டம் போட்டு மறைத்து விட்டு, புதிதாக கறுப்பு பெயிண்டால் நம்பர் எழுதவேண்டும்.

கையில், உடம்பில், சட்டையில் அங்கங்கே பெயிண்ட் கறைகளும், பிரஷ் — எக்ஸ்ட்ரா

பெயிண்ட் டப்பாக்களுடனும் நானும் பாஸ்கரும் நுழைவதை ஊர்க்காரர்கள் பார்க்கிறார்களோ இல்லையோ அந்த ஊர் நாய்கள் பார்த்து விடும்.

**பாரதிராஜாவுடன் சேர்ந்து நடத்திய நாடகம்**
**இளையராஜா வர்ணித்த "மலரும் நினைவுகள்"**

சிறு வயதில் நண்பர்களாகப் பழகிய பாரதிராஜாவும், இளையராஜாவும், நாடகம் நடத்தினார்கள். இதில் பாரதிராஜாதான் "ஹீரோ"! இசை அமைப்பு இளையராஜா.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

ஜீவானந்தம் கொடுத்த டேப்ரிக்கார்டர்

"கன்னியாகுமரி மாவட்டத்தில் இசை நிகழ்ச்சிக்காக சென்றிருந்த நேரத்தில், பாவலரை ஏற்கனவே அறிந்திருந்த கம்யூனிஸ்டு கட்சித் தலைவர் ஜீவானந்தம் ஒரு டேப் ரிக்கார்டரை கொடுத்தார்.

"இந்த டேப் ரிக்கார்டர் உங்களிடமே இருக்கட்டும்" என்று சொல்லி மகிழ்ச்சியுடன் கொடுத்தார். இது அவருக்கு கோவை விஞ்ஞானியும் தொழில் அதிபருமான ஜி.டி.நாயுடு கொடுத்தது என்பதையும் அறிந்து கொண்டோம்.

இந்த டேப் ரிக்கார்டர் வந்த பிறகு, எங்கள் உற்சாகம் இன்னும் அதிகமாகி விட்டது. தலைவர்களின் பேச்சையும், எங்களின் கச்சேரியையும் போட்டுப் போட்டுக் கேட்போம். கைதட்டல் ஒலி ஆரவாரத்துடன் எங்கள் கச்சேரிக்கு மக்கள் அளித்த வரவேற்பை 'டேப்' வாயிலாக கேட்க நேர்ந்தபோது, உற்சாகம் அதிகமானது.

வீட்டில் அந்த டேப் ரிக்கார்டர் இருந்தபோது கிடார், புல்புல்தாரா, ஆர்மோனியம், பாங்கோ சகிதம் ஏதோவொன்றை வாசிப்பேன். அதை டேப்பில் பதிவு செய்து திரும்பக் கேட்கும்போது வேறு ஏதோ மாதிரி இருக்கும்.

இது எனக்குள் ஒரு புதிய இசைப்பரிமாணத்தை கொண்டு வந்தது. அடுத்தடுத்து இதுமாதிரி முயற்சிகளை டேப்பில் தொடர்ந்தேன்.

ஆனால், இந்த சந்தோஷம் அதிக நாள் நீடிக்கவில்லை. "தலைவர் ஜீவானந்தம் கொடுத்த டேப் ரிக்கார்டரை கட்சி ஆபீசில் ஒப்படைக்கவும்" என்று கம்யூனிஸ்டு கட்சியிடம் இருந்து கடிதம் வந்தது. அதே வேகத்தில், டேப் ரிக்கார்டரையும் வாங்கிக்கொண்டு போய் விட்டார்கள்.

சிவாஜி வசனம்

அது வீட்டில் இருந்தபோது நானும் பாஸ்கரும் "மனோகரா", "வீரபாண்டிய கட்டபொம்மன்" படங்களில் சிவாஜி பேசிய வசனங்களை எங்கள் ஆக்ரோஷ குரலில் பேசி பதிவு செய்து கொள்வோம். பிறகு போட்டுக் கேட்போம். இதில் பாரதிராஜாவும் அவரது நண்பர் 'டெய்லர்' மணியுடன் வந்து சேர்ந்து கொள்வார். பாரதிராஜா எழுதிய வசனத்தை அவரும், 'டெய்லர்' மணியும் பேசி பதிவு செய்து போட்டுக் கேட்பார்கள்.

இப்படியெல்லாம் வசனம் பேசி, வசனம் பேசி கேட்டுப் பழகியதால்தான் அவருக்கு நாடகம் போட வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டிருக்கும் என்று எண்ணுகிறேன்.

இதற்குப் பின்பே பழனி செட்டிப்பட்டி கோவில் திருவிழாவிலும், அல்லி நகரம் (பாரதிராஜாவின் சொந்த ஊர்) கோவில் திருவிழாவிலும் இரண்டு நாடகங்களை

நடத்தினார், பாரதிராஜா.

நாடகத்தில் பாரதிராஜா நடிக்கவும் செய்தார். பாரதிராஜா மதுரை நடிகையுடன் பாடி நடிப்பதற்காக, சிவாஜி – பானுமதி நடித்த 'அம்பிகாபதி' படப்பாடலான "மாசிலா நிலவே நம் காதலை மகிழ்வோடு மாநிலம் கொண்டாடுதே" என்ற பாடலை தேர்ந்தெடுத்தோம். நாடகத்தில் அப்போதெல்லாம் பெரும்பாலும் சினிமாப் பாடல்களையே பயன்படுத்துவார்கள்.

அல்லி நகரத்தில் நடந்த நாடகத்தில் மதுரையில் இருந்து நடிகைகள் சீன் செட்டிங்ஸ் மேக்கப்பிற்கு அட்வான்ஸ் கொடுத்து ஒரு பள்ளிக்கூடத்திலும், அரியநாயகம் என்பவர் வீட்டிலும் ஒத்திகை பார்த்தோம். "பூட் மேக்கர் பி.ஏ" என்பது நாடகத்தின் பெயர். எனக்குத் தெரிந்து இதுதான் பாரதிராஜாவின் முதல் நாடக அரங்கேற்றம்.

பாரதிராஜா ஹீரோவாக – செருப்பு தைக்கும் "பி.ஏ" பட்டதாரி இளைஞராக நடித்தார். நாடகத்தில் அவர் ரோட்டில் ஷூ பாலீஷ் போடுவதாக ஒரு காட்சி. அந்தக் காட்சிக்கு ஏற்கனவே உள்ள சினிமா பாடல்களை தவிர்த்து புதிதாக ஒரு பாடல் கம்போஸ் செய்யச் சொன்னார்.

சட்டென பாட்டு பிறந்தது. 'பாலீஷ் பூட் பாலிஷ்' என்று தொடங்கி, "செருப்பப்பா இது செருப்பு! சுறுசுறுப்பா எனக்கிருப்பு" என்று ஒரு பாடலை கம்போஸ் செய்தேன்.

புதிய உடை

இந்த காலக்கட்டத்தில் பாவலர் அண்ணனுடன் இடைவிடாத கச்சேரி இருக்கும். இப்படிப் போகும் ஊர்களில் புதிய நவநாகரீகம் எங்கள் உடைகளில் வெளிப்படும். புதிதாக உடையிலும், ஹேர்ஸ்டைலிலும் என்ன மாற்றம் ஏற்பட்டாலும் உடனே அதற்கேற்ப நாங்கள் மாறி விடுவோம். அதாவது 'லேட்டஸ்ட் பேஷன்' எது என்பதை எங்கள் ஆடை, தலைமுடி அறிவிக்கும். கவுபாய் பேண்ட், சம்மர் கிராப் போன்றவை அப்போது ஏற்பட்ட மாற்றங்கள்.

இப்படி லேட்டஸ்ட்டாக ஒரு "டீ" சர்ட் அணிந்து நாடகத்துக்கு இசையமைத்துக் கொண்டிருந்தேன். என் 'டிசர்ட்' பாரதிராஜாவை கவர்ந்திருக்க வேண்டும். ஒரு சீனில் நடிக்கும்போது மேடையில் தோன்ற எனது 'டிசர்ட்'டை கழற்றித் தரும்படி கேட்டார்.

நான் இதற்கு உடன்படுவேனா? ஷர்ட்டை கழற்றிவிட்டு வெறும் பனியனோடு ஆர்மோனியம் வாசிப்பதாவது? அதுவும் மதுரை நடிகைகள் முன்பாக?

ஷர்ட்டை தருவதற்கில்லை என்று நான் மறுக்க, பாரதி விடாப்பிடியாக ஷர்ட் வேண்டும் என்று அடம் பிடிக்க, ஒரு கட்டத்தில் என் பிடிவாதத்தைவிட பாரதிராஜாவின் பிடிவாதம் அதிகமாக ஷர்ட்டை கழற்றிக் கொடுத்தேன். ஆசைப்பட்டபடியே ஒரு சீனில் என் டிஷர்ட்டை போட்டு நடித்து விட்டு வந்தார் பாரதிராஜா.

இப்போது, எனக்கு புதுக்கவலை. இந்த டிஷர்ட்டைப் போட்டுக்கொண்டுதானே நாளை அல்லி நகர வீதிகளில் நடக்கவேண்டும். அப்படி யாராவது பார்த்தால், 'இது பாரதிராஜாவின் ஷர்ட். அவர்தானே நாடகத்தில் இந்த ஷர்ட்டுடன் தோன்றினார்' என்று எண்ணி, என்னை "இரவல் சட்டைக்காரன்" என்று நினைத்துவிட்டால் என்னாவது?

இதோ இப்போதே இது என் ஷர்ட்தான் என்று நிரூபிக்க வேண்டும் என்று எண்ணினேன். அதற்கொரு ஐடியாவும் வந்தது.

**நாடகத்துக்காக பாட்டு எழுதி, இசை அமைத்தார்**

நாடகம் நடத்திய காலத்திலேயே, பாட்டு எழுதவும், இசை அமைக்கவும் ஆற்றல் பெற்றிருந்தார், இளையராஜா.

நாடக அனுபவங்கள் பற்றி அவர் தொடர்ந்து கூறியதாவது:—

"நாடகத்தின் ஒரு காட்சிக்காக எனது டி—ஷர்ட்டை வாங்கி பாரதிராஜா போட்டுக்கொண்டு, நாடகத்திலும் நடித்துவிட்டு வந்தார். அதுமுதலே எனக்குள் 'நான் போட்டிருப்பது பாரதிராஜாவின் ஷர்ட் என்று யாராவது நினைத்துக்கொண்டு விட்டால் என்னாவது?' என்ற கேள்வி எழுந்தபடி இருந்தது.

நாடகத்தில் திருப்பம்

இப்படி நினைத்த நான் அடுத்த கணமே யாரும் எதிர்பாராத விதமாய் ஒரு காரியம் செய்தேன். நாடகத்தில் ஒரு சீனில் சம்பந்தமே இல்லாமல் நான் போய் நின்றேன்.

என்னைப் பார்த்ததும் பாரதிராஜா திகைத்துப் போனார். 'இவன் எதற்கு சம்பந்தா சம்பந்தம் இல்லாமல்...' என்ற கேள்வி அவர் கண்களில் தெரிந்தது. அவர் பேசத்தொடங்குவதற்குள், "செருப்புக்கு பாலீஷ் போடு" என்று சொன்னேன்.

"இதெல்லாம் செருப்பா?" என்று நக்கலாக கேட்டார் பாரதிராஜா.

"ஏய் அதைவிடு! உனக்கென்ன கூலி? அதைச் சொல்" என்றேன்.

செருப்புக்கு பாலீஷ் போடுவது போல் நடித்துக்கொண்டிருந்த பாரதிராஜா, "நாலணா கொடு" என்றார். குரலில் இளக்காரம் தெரிந்தது.

நானும் விடவில்லை. "இந்தா எட்டணா" என்று பாக்கெட்டில் அடுத்த நாள் டிபன் சாப்பிட வைத்திருந்த எட்டணாவை தூக்கிப்போட்டேன். அதோடு இன்னொரு வெடிகுண்டையும் போட்டேன். "இந்தக் காலத்துல யார் டி—ஷர்ட் போடுறதுன்னே ஒரு விவஸ்தை இல்லாமல் போச்சு. கண்ட பசங்கள்லாம் போட ஆரம்பிச்சிட்டாங்க" என்று நான் பேசிக்கொண்டே புறப்பட, பாரதிராஜா முறைத்த முறைப்பு இருக்கிறதே, அப்பப்பா!

அடுத்த நாள் காலையில் அதே டி—ஷர்ட்டுடன் அல்லி நகர வீதியில் உலவினேன். கூடவே பாஸ்கர் மட்டுமல்ல, பாரதிராஜாவும் என்னுடன் வந்தார், முந்தின நாள் நாடகத்தில் நான் செய்த குறும்பை முற்றிலும் மறந்தவராய்.

கோவிலில் நாடகம்

பழனி செட்டிபட்டி சவுடாம்பிகை கோவிலில் நாடகம் போடும் வாய்ப்பு பாரதிராஜாவுக்கு கிடைத்தது. அதே நாடகத்தை அல்லி நகரத்திலும் போட முடிவு செய்தார்.

நாடகத்தில் நடிக்க மதுரை நடிகைகள் யாரும் கிடைக்கவில்லை. தேனியில் ஒரு நடிகை இருந்தார். அவரை போய்ப் பார்த்து பேசி ஒப்பந்தம் செய்தார். நாடகத்துக்கு ஒரு நாள் முன்பே நாடகக் குழுவினர் அனைவரும் பழனி செட்டிபட்டி போய்விட்டோம். ஊருக்கு ஒதுக்குப்புறத்தில் இருந்த ஒரு பள்ளிக்கூடத்தை எங்களுக்காக ஒதுக்கிக் கொடுத்தார்கள்.

ஒத்திகை, சாப்பாடு, தங்கல் எல்லாம் அங்கேதான்.

நடிகையுடன் நட்பு

இங்கே தான், தேனியில் இருந்து நடிக்க வந்த நடிகைக்கும் பாஸ்கருக்கும் நட்பாகி விட்டது.

தொழில் சார்ந்த நட்புதான். அதற்குக் காரணம், பாடத்தெரிந்த எந்த நடிகையானாலும், தபேலா, மிருதங்கம் வாசிப்பவர்களுடன் நட்பாகி விடுவார்கள். அவர்கள் பாடும்போது பக்க வாத்தியத்தை சரியாக வாசிக்காவிட்டால், அவர்கள் தாளம் தப்பிப்பாடுவது போலாகி விடுமே! இதனால், வாத்தியக்காரர்களோடு சுமூகமாகப் போவது நடிகைகளின் பழக்கம். இப்படியொரு நட்பாகி விட்டது தேனி நடிகைக்கும் பாஸ்கருக்கும்!

இசை அமைப்பு

"நாடகத்திற்கு எல்லாப் பாடல்களும் நம் சொந்தப் பாடல்களாக இருக்கவேண்டும். சினிமாப் பாடல்களை உபயோகிக்கக்கூடாது" என்று பாரதிராஜா சொன்னதால், "தாயே சவடம்மா ஒரு கை கொடம்மா! வாழ்க்கை கொடம்மா" என்ற பாடலை கம்போஸ் செய்தேன். ஏற்கனவே "பூட் பாலிஷ்" பாட்டும் இருக்கிறது. அதோடு காமெடிக்காக "தெய்வத்தாய்" படத்தில் வரும் "இந்தப் புன்னகை என்ன விலை?" என்ற டியூனில் –

"இந்த வெங்காயம் என்ன விலை? – அது
கடைக்காரன் சொன்ன விலை – இந்த
வெண்டைக்காய் என்ன விலை? – அது
மண்டையை பொளக்கிற விலை"
என்ற பாடலையும் தயார் செய்திருந்தேன். இது தவிர –

"வெண்ணிலவின் காவலிலே
கங்கை நதி ஓடும்
கங்கை நதி ஓரத்திலே

கண்ணன் மனம் பாடும்" என்றொரு பாடலும், பாரதிராஜா சோகமாகப்பாட

"இரவு முடிந்து விடும்
இயற்கை விடிந்து விடும்
கனவும் கலைவதைப்போல்

காலம் முடிந்து விட்டால்" என்ற பாடலும் (கங்கை) அமரன் எழுதி இசையமைத்திருந்தேன்.

பாடலை கற்றுக்கொள்ளும் நேரத்தில் பாஸ்கருடன் தொடங்கிய தேனி நடிகையின் நட்பு, அந்தப்பெண் நடிக்காத நேரத்தில் தபேலாவின் பக்கத்தில் – அதாவது பாஸ்கரின் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொள்ளும் அளவுக்குப் போய்விட்டது.

இதை எல்லாம் ஒத்திகையின்போது பார்க்க நேர்ந்த பாரதிராஜா, 'இதை இப்படியே விட்டு வைக்கக்கூடாது' என்ற எண்ணத்தில் பாஸ்கரை தனியே அழைத்து கண்டித்துப் பார்த்தார். பாஸ்கர் கேட்டால்தானே.

மறுநாள் நாடகம். முந்தின நாள் இரவு பள்ளிக்கூடத்தில்தான் தங்கல்.

காலையில் நானும் பாரதியும் எழுந்த நேரத்தில், பாஸ்கரையும் அந்த நடிகையையும் காணவில்லை. பாஸ்கரும் நடிகையும் பள்ளியையொட்டி இருந்த வயல் வெளியின் வரப்பிலே, வேப்பங்குச்சியால் பல் துலக்கியபடியே பேசிக்கொண்டு வந்தார்கள்.

பாரதிராஜாவுக்கும் எனக்கும் அதிர்ச்சியாக இருந்தாலும் பயங்கரச் சிரிப்பு வந்துவிட்டது. அவர்கள் எங்கள் எதிரே வந்துவிட்டார்கள். நடிகையை பாரதிராஜா கோபிக்க முடியாது. 'கம்'மென்றிருந்தார்.

முகமெல்லாம் சிரிப்பாக எங்களை பாஸ்கர் பார்த்தார். "என்னய்யா, இந்நேரம் வரைக்குமா தூங்கறது? சீக்கிரம் எழுந்து குளிச்சிட்டு 'பைனல் ரிகர்சலுக்கு' ரெடியாக வேண்டாமா?" என்று கேட்டார்.

"ம்...ம்..." என்றார் பாரதி.

அந்த நடிகை போனதும், "எமகாதகப் பயடா நீ! சினிமாவில் காதலனும் காதலியும் வர்ற மாதிரி அப்படி என்னடா பேசிக்கிட்டு வந்தீங்க?" என்று பாரதிராஜா கேட்டார்.

"அதெல்லாம் வெளியே சொல்ல முடியுமாய்யா? ஏதோ சின்னஞ்சிறுசுங்கன்னா அப்படித்தான் இருக்கும்" என்று கூறினார், பாஸ்கர்!

"என்ன காதலா?" – இது பாரதிராஜா.

"சீச்சீ" – பாஸ்கர் பதில்!

"இன்னிக்கு நாடகம் முடியற வரைக்கும் நீ அவளோட பேசக்கூடாது" – தடை உத்தரவு போட்டார், பாரதிராஜா.

"நான் பேசவில்லை. அந்த நடிகையா என்கிட்ட வந்து பேசினாங்கன்னா?" என்று பாஸ்கர் திருப்பிக் கேட்க, மூன்று பேருமே விழுந்து விழுந்து சிரித்தோம்.

தெருமுனையில் அன்றிரவு நாடகம் நடந்தது. முதன் முதலாக ஒரு நாடகத்துக்கு இசையமைத்த அனுபவம், எனக்கு மகிழ்ச்சியானதாகவே இருந்தது. பாடல்களை மக்கள் விரும்பி ரசித்தார்கள்.

இதில் ஆச்சரியம் என்ன தெரியுமா? நான் சொந்தமாக போட்ட மெட்டில் உருவான பாடல்களை விட, "இந்த புன்னகை என்ன விலை?" மெட்டில் அமைந்த "இந்த வெங்காயம் என்ன விலை?" பாடலுக்குத்தான் அதிக கைதட்டல்!

**தேர்தல் பிரசாரத்தின்போது போலீஸ் படையெடுப்பு!**
**பாவலர் வரதராஜன் பாட்டுப்பாட தடை**

1962 தேர்தல் நடந்தபோது, இளையராஜாவும், அவர் சகோதரர்களும் கம்யூனிஸ்டு கட்சிக்கு ஆதரவாக பாட்டுப்பாடி பிரசாரம் செய்தார்கள். அப்போது போலீசார் திடீரென்று வந்து, இளையராஜாவின் அண்ணன் பாவலர் வரதராஜன் பாட்டுப்பாட தடை விதித்தனர்.

அதுபற்றி இளையராஜா கூறியதாவது:—

"1962—ல் நடைபெற்ற நகரசபைத் தேர்தலில், மதுரையில் கம்யூனிஸ்டு கட்சி வேட்பாளர்களை ஆதரித்து நிறைய கூட்டங்களும், கச்சேரிகளும் நடந்தன. இதில் பாவலரின் பாடலைக் கேட்க மக்கள் அதிகம் கூடினார்கள். இதனால் எல்லா வார்டுகளிலும் பாவலரின் கச்சேரியை வைக்க ஆசைப்பட்டார்கள்.

மும்முனைப்போட்டி

தேர்தல் பிரசாரம் சூடுபிடித்தது. காங்கிரஸ், தி.மு.க, கம்யூனிஸ்டு என்று மும்முனைப்போட்டி. அது காமராஜரின் ஆட்சிக்காலம்.

ஒரே நாளில் மூன்று கச்சேரிகள் செய்யும் அளவுக்கு அண்ணனுக்கு நெருக்கடி. ஆனால் அதுபற்றியெல்லாம் கொஞ்சமும் யோசிக்காமல் மூன்று கச்சேரிகளையுமே செய்தோம்.

இதில் முதல் கச்சேரி மதுரையில் உள்ள தலைவிரிச்சான் சந்தில் இருக்கும். பாடி முடித்தவுடன் பேச்சாளர்கள் பேசத்தொடங்குவார்கள். அடுத்த கச்சேரி அரசரடியில் இருக்கும். நாங்கள் போகிற நேரத்தில் பேச்சாளர்கள் பேசிக்கொண்டிருப்பார்கள். நாங்கள் சென்றதும் பேச்சு நிற்கும். கச்சேரி தொடங்கும்.

இதில் வேடிக்கை என்னவென்றால், எங்கள் இசைக்குழுவில் இருந்தது மொத்தம் நாலு பேர் மட்டுமே. இந்தக் குழுவிற்கு சில நேரம் டாக்சி. சில நேரம் ஜட்கா (குதிரை வண்டி).

முன்பக்கம் வண்டி ஓட்டுபவரின் அருகே பாஸ்கர் உட்கார, ஆர்மோனியம், தபேலா, கிடாரை வைத்துக்கொண்டு அமர் (கங்கை அமரன்) உட் கார, பின்னே நானும் அண்ணனும் கால்களை தொங்கப்போட்டபடி உட்கார்ந்து கொள்வோம்.

முதல் கச்சேரி முடிந்ததும், ஜட்காவை கூப்பிட்டு வாத்தியங்களை எடுத்து வைத்து உட்கார்ந்து வண்டி ஓடத்தொடங்கும்போது, ஒரு கூட்டம் அப்படியே ஜட்காவை பின்தொடர்ந்தபடி ஓடிவரும்; அடுத்த கச்சேரியை கேட்பதற்காக.

அடுத்த கச்சேரியிலும் இதே நிலைதான் தொடரும்.

காங்கிரஸ் தொண்டர்களுக்கோ, அடுத்த கட்சிக்கு இவ்வளவு பெரிய கூட்டம் கூடுவது பொறுக்கவில்லை.

ஒருநாள் செல்லூரில் கைத்தறி நெசவாளர் வசிக்கும் பகுதியில் கச்சேரி. மூன்று தெருக்கள் சந்திக்கும் ஒரு இடத்தில் மேடை போட்டிருந்தார்கள். அங்கு வாழ்ந்த அத்தனை நெசவாளர்களும் கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்தவர்கள்தான். மூன்று தெருக்களிலுமே ஏகப்பட்ட கூட்டம். ஒழுங்காக அமர்ந்து கச்சேரி கேட்கத் தயாரானார்கள்.

பேச்சாளர்கள் பேசி, அடுத்து பாவலரின் இசை நிகழ்ச்சி என்று அறிவித்ததும், மக்கள் உற்சாகமாக கைதட்டினார்கள்.

நாங்கள் அமர்ந்து ‘டைட்டில் மியூசிக்’ வாசித்து இரண்டு மூன்று பாடல்களை அண்ணன் பாடியிருப்பார். அனைவருக்கும் வணக்கும் சொல்லும் பாடலில், “கடந்த தேர்தலில் காளை மாட்டுக்கு ஓட்டுப்போடாம விட்டவர்க்கும் வணக்கம்” என்றார். கைதட்டல் சத்தம் வானை எட்டியது.

கைதட்டு அடங்கும் முன் “அந்தக் காளை மாட்டுக்கு ஓட்டுப்போட்டதை எண்ணி இப்போ கவலைப் படுவோர்க்கும் வணக்கம்” என்றார். இதற்கும் பலத்த கரகோஷம்.

போலீஸ் வந்தது

இப்படி அண்ணன் இரண்டொரு பாடல்களை பாடி முடித்திருந்த வேளையில் திடீரென ஒரு போலீஸ் “வேன்” எங்கள் கச்சேரி நடக்கும் இடம் அருகே வந்து நின்றது.

போலீஸ் வேனில் இருந்து ஆயுதம் தாங்கிய போலீசார் பத்துப்பேருக்கு மேல் வரிசையாக அணிவகுத்து, மேடையை நோக்கி சரசரவென வந்தார்கள். அவர்களுக்கு முன்பாக இன்ஸ்பெக்டர் நடராஜன் என்பவர் வந்தார். எல்லாரும் வந்து மேடையை சுற்றி வளைத்து நின்றார்கள்.

போலீஸ் இன்ஸ்பெக்டர், அண்ணன் பாவலரைப் பார்த்து, “பாவலர்! நீங்கள் பாடக்கூடாது” என்றார்.

“எதுக்கு?” – பாவலர் கேட்டார்.

“நீங்க மைக் செட் வைத்துக்கொள்ள போலீஸ் பெர்மிஷன் வாங்கவில்லை” என்றார், இன்ஸ்பெக்டர்.

“அப்படியா?” என்று சாதாரணமாக கூறிய அண்ணன், ஒலிபெருக்கி வைப்பவரை பார்த்து, “மைக்கை ஆப் பண்ணுப்பா” என்றார்.

மைக்செட்காரரும் அப்படியே செய்தார்.

இப்போது அண்ணன் எங்களைப் பார்த்தார், “டேய், வாசிங்கடா!” என்றார்.

நாங்கள் ரெடியானோம். அண்ணன் ‘மைக்’ இல்லாமல் பாடத்தொடங்கி விட்டார். கூட்டம் அமைதியாக கேட்டது. நாங்களோ ‘இன்று கம்யூனிஸ்டு கட்சிக்காக உயிர் கொடுத்தவர்களின் பட்டியலில் நம் பெயரும் இடம் பெறப்போகிறது’ என்று வீராவேசத்துடன் வாத்தியங்களை அழுத்தினோம்.

இன்ஸ்பெக்டரால் ஒன்றும் செய்ய இயலவில்லை. பாவலர் அண்ணன் பேசத்தொடங்கினார். “பார்த்தீங்களா? கம்யூனிஸ்டு கட்சிக்கு மக்கள் கூடுவதைக்காண காங்கிரசுக்கு மனம் பொறுக்கவில்லை. கல்யாணத்தில், மணவறைப் பலகையை ஒளித்து வைத்துவிட்டால் கல்யாணம் நின்று விடும் என்ற சினிமாக் காமெடி போல, இங்கே மைக்செட்டை பிடுங்கி விட்டால் பாட்டு எப்படி நடக்கும் என்று காமெடி செய்கிறார்கள்” என்றார்.

இதற்கு மக்கள் சத்தம் போட்டு சிரிக்க, "இப்படிப்பட்ட கட்சிக்கா உங்கள் ஓட்டு?" என்றும் சமயம் பார்த்து ஆணியடித்தார். "இல்லை, இல்லை!" என்று கூட்டம் கைதட்டியது.

மைக் இல்லாமலே அடுத்த கச்சேரிக்கு கிளம்பியபோது, கூட்டம் முழுவதும் ஜட்கா பின்னால் ஓடிவந்தது.

எந்த ஒரு இசைக்கலைஞன் சரித்திரத்திலும் காணக்கிடைக்காதது இப்படியொரு நிகழ்ச்சி. இதில் நானும் பங்கு பெற்றிருக்கிறேன் என்பதே எனக்கு மகிழ்ச்சி.

## பாட்டுப்பாடி இளையராஜாவை அழ வைத்த நடிகை!

ஒரு நடிகை பாடிய பாட்டைக் கேட்டு, இளையராஜா கதறி அழுதார். அவரை பாரதிராஜா தேற்ற முயன்றும் முடியவில்லை.

மதுரையில் நடந்த அந்த நிகழ்ச்சி பற்றி இளையராஜா விவரிக்கிறார்:—

"மதுரையில் சித்திரைத் திருநாள் வந்தால் போதும். மதுரை நகரம் முழுக்க கூட்டம் அலைமோதும். கோவிலில் மட்டுமல்ல, தெருக்களிலும் இதே நிலைதான்.

சித்திரைப் பவுர்ணமியன்று அழகர் ஆற்றில் இறங்கும்போது சுற்றுப்புற ஊர்களில் இருந்து வரும் கூட்டத்தின் எண்ணிக்கை சொல்லி முடியாது.

இந்த வைபவம் முடிந்த பவுர்ணமி இரவுகளில், தண்ணீர் இல்லாத வைகை ஆற்று மணல் வெளியில் பாரதி, பாஸ்கர், நான், சுப்பிரமணியன், செல்வராஜ் என ஐவர் குழுவாக விடிய விடிய உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்போம்.

பொருட்காட்சி

திருவிழாவையொட்டி தமுக்கம் மைதானத்தில் பொருட்காட்சி நடைபெறும். கச்சேரி இல்லாத நாட்களில் அங்கே சென்று, பொழுதை மகிழ்ச்சியாக கழித்து விட்டு வருவோம்.

மதுரை ரீகல் தியேட்டரில், ஜெர்ரி லூயிஸ் நடித்த ஆங்கிலப் படம் பார்த்து விட்டு அவரைப் போலவே நடிக்கும் பாஸ்கரை பார்த்து ஆச்சரியப்பட்டிருக்கிறேன். சில சமயம் ஓட்டல்களில் சர்வர்களிடம் பேசும்போது அவராக வேறுவித ஸ்டைலில் நடிப்பார். அதை நாங்கள் ரசிப்போம்.

சில நேரம் பொருட்காட்சியில் பேச்சு சுவாரஸ்யத்தில் நேரம் தாண்டிப் போயிருக்கும். கடைசி பஸ்சை தவறவிட்டு நடந்தே மீனாட்சி நிலையம் ரூமிற்கு வந்ததுண்டு.

அந்த நேரத்தில் ரோட்டில் ஆள் நடமாட்டம் இருக்காது. நான், பாஸ்கர், பாரதி மூவரும் சத்தம் போட்டு பேசி சிரித்தபடி, பல சமயங்களில் உரத்த குரலில் பாடிக்கொண்டே நடந்து வருவோம்.

இதில் பாஸ்கர்தான் எங்களுக்கு ஹீரோ. அவரை வேடிக்கை பார்ப்பதுதான் எனக்கும் பாரதிக்கும் பிடித்தமான ஒன்று.

நடிகை

ஒருமுறை பஸ் ஸ்டாண்ட் தங்கும் விடுதியில் உள்ள மீனாட்சி நிலையத்தில் தங்கியிருந்தபோது ஒரு பெண்ணை சந்திக்க நேர்ந்தது. அந்தப் பெண் ஒரு நடிகை என்பது பிற்பாடுதான் தெரிந்தது.

இந்தியாவிற்கு 'டிவி' வரும்முன் "டிவி" என்பது எப்படி இருக்கும்? டிவி நிகழ்ச்சிகள் எப்படி ஒளிபரப்பப்படுகிறது என்பதை விளக்க, ஒரு வடநாட்டு கோஷ்டி மதுரை பொருட்காட்சியில் ஸ்டால் போட்டிருந்தது. அதில் ஒரு பெண் மேக்கப்புடன் ஆட, அதைக் காமிரா படம் பிடிக்க, பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த டிவி ஸ்கிரீனில் அதை எல்லாரும் காணும்படி ஒளிபரப்பினார்கள்.

இந்த டிவி நடிகைக்கு நாங்கள் தங்கியிருந்த மீனாட்சி நிலையத்தில் ரூம் கொடுத்திருந்தார்கள். அதுவும் எங்கள் ரூமுக்கு அடுத்த ரூம்.

நாங்கள் பகல் வேளையில் ரூமில் பயிற்சிக்காகவும், பொழுது போக்கிற்காகவும் வாசித்து பழகிக்கொண்டிருப்போம்.

அப்போது சிவாஜி நடித்த “பாவமன்னிப்பு” படம் ரிலீசான நேரம். ஆதலால் அந்தப் படத்தின் பாடல்களையும் பாடி வாசித்துக் கொண்டிருப்போம்.

இப்படி வாசிக்கிற நேரத்தில் அந்த டிவி பெண்ணும் அடிக்கடி எங்கள் கண்ணில் படும். ஆனால் பேச வேண்டுமென்றோ, பழகவேண்டுமென்றோ எந்தவிதமான எண்ணமும் எங்களில் யாருக்கும் கிடையாது.

கடைசி பஸ்

ஒருமுறை பொருட்காட்சியை சுற்றி விட்டு நான், பாஸ்கர், பாரதி, காமராஜ் (இன்னொரு நண்பர்) என நால்வரும் பஸ் ஸ்டாண்டுக்கு வந்தோம். அங்கே புறப்படத் தயார் நிலையில் இருந்த பஸ்தான் கடைசி பஸ் என்று யாரோ சொல்லிவிட, ஓடிப்போய் ஏறிக்கொண்டோம்.

கடைசி வரிசையில் 3 சீட் காலியாக இருந்தது. என்னைத்தவிர மற்ற மூவரும் அதில் உட்கார்ந்து கொண்டார்கள்.

எனக்காக ஒரு சீட் தேடிப் பார்த்தேன். டிரைவருக்குப் பின் இருந்த சீட்டில் அந்த டிவி பெண் உட்கார்ந்திருக்க, காலியாக இருந்த ஒரேயொரு எதிர் சீட்டில் நான் உட்கார்ந்தேன்.

என்னைப் பார்த்ததும் அந்தப் பெண் அடையாளம் கண்டு கொண்டாள். உடனே பாவமன்னிப்பு படப்பாடலான “அத்தான் என்னத்தான்” பாடலை மெதுவான குரலில் பாடத் தொடங்கினாள். அந்தப்பெண் பாடகி அல்ல; எனவே, குரல் சாதாரணமாக கீழ் ஸ்தாயியில் ஒலித்தது.

அழுகை

அதைக் கேட்ட மாத்திரத்தில் நான் “ஓ” என்று கதறி அழ ஆரம்பித்தேன். அத்துடன் நில்லாமல், பாஸ்கர், பாரதி இருந்த கடைசி சீட்டுக்கு, அழுதபடி வேகமாக ஓடினேன்.

பஸ்சில் இருந்த எல்லாரும் “என்னவோ ஏதோ” என்று பார்த்தார்கள். நான் எதற்காக அழுகிறேன் என்பது அந்தப் பெண்ணுக்கும்

புரியவில்லை.கேவிக்கேவி அழுதவாறு வந்த என்னை, “ஏய்! என்ன? என்னாச்சு?” என்று அவர்களும் புரியாமல் கேட்டார்கள்.

இப்போதும் நான் அழுகையை மட்டும் தொடர, “சொல்லித் தொலையடா” என்றார் பாஸ்கர், ஆத்திரமாய்.

நான் அந்தப் பெண்ணை சுட்டிக் காட்டினேன். “அதோ அந்த அம்மா பாடுறாங்க” என்றபடி அழுகையை தொடர்ந்தேன்.

இப்போது, என் குசும்பு பாரதி, பாஸ்கர் ஆகியோருக்குப் புரிந்து விட்டது. அடக்க முடியாமல் சிரித்தார்கள்.

“என் டென்ஷன் உங்களுக்கெல்லாம் சிரிப்பாய் போச்சுதா?” என்று நான் அழுவதற்கு மறுபடியுமாய் குரலை உயர்த்தியபோது, கண்டக்டர் அருகில் வந்தார். என் தோளில் கைபோட்டவர். “அண்ணே! விடுண்ணே” என்றார்.

என்னுடைய இந்த கிண்டலுக்கு ஆளான அந்தப் பெண்ணுக்கு அப்போது எப்படி இருந்ததோ தெரியாது...

திடீரென ஒருநாள் அந்தப் பெண்ணின் ப டம் நகர வீதிகளில் ஒட்டப்பட்டிருந்த சினிமா போஸ்டர்களில் காணப்பட்டது.

படத்தில் அவர் பெயரைப்போட்டு ‘கதாநாயகியாக நடிக்கும்’ என்று விளம்பரப்படுத்தியிருந்தார்கள்.

“ஏய்! இது அந்த டெலிவிஷன் பொண்ணுல்ல?” என்று அதிசயித்தோம்.

அந்தப்படம் வெளிவந்து அதன் மூலம் பெரிய கதாநாயகியாகிவிட்ட அந்த நடிகையை யாரென்று சொல்ல நான் விரும்பவில்லை.

**ரெயிலில் காணாமல் போன இளையராஜாவின் ஆர்மோனியம்!**

கச்சேரிக்கு ரெயிலில் கோவில்பட்டி சென்றபோது, இளையராஜா மிகவும் நேசித்த ஆர்மோனியப்பெட்டி காணாமல் போய்விட்டது.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

"மதுரை சித்திரைத் திருவிழா முடிந்த நேரத்தில் மறுநாளே கோவில்பட்டியில் கச்சேரிக்காக புறப்பட்டோம். மதுரையில் இரவு 12–30 மணிக்கு ரெயில் வந்தது. நெல்லை எக்ஸ்பிரசோ, செங்கோட்டையோ ஞாபகம் இல்லை.

எங்களை ரெயிலேற்றிவிட பாரதியும் வந்திருந்தார். ரெயில் புறப்படும் முன்பாக அவர் விடை பெற்றுச்சென்று விட்டார்.

முந்தின நாட்களில் சரிவர தூங்காத அலுப்பு கண்களை செருக வைக்க, பெட்டி, படுக்கைகளை கீழே வைத்த நாங்கள் மேலே காலியாக இருந்த "பெர்த்"தில் ஏறி படுத்துவிட்டோம். சாதாரணமாக படுத்தவுடன் தூக்கம் வராத எங்களுக்கு முந்தின நாள் பொருட்காட்சியில் அலைந்த களைப்பில் படுத்ததும் தூக்கம் தூக்கிக்கொண்டு போனது.

ரெயில் மதுரையில் அரை மணிக்கும் மேலாக நின்றது போலும். அதுதான் பிரச்சினையாகிவிட்டது.

பெட்டி மாறாட்டம்

நாங்கள் ஏறிய ரெயிலில் கொடைக்கானல் போகவேண்டிய வெளி நாட்டுக்காரர் ஒருவர் அவரது மரப்பெட்டி ஒன்றை 'கொடைக்கானல் ரோடு' ஸ்டேஷனில் இறங்கும்போது எடுக்க மறந்துவிட்டிருக்கிறார். இதனால் உடனடியாக மதுரை ஸ்டேஷன் மாஸ்டருக்கு போன் செய்து தெரியப்படுத்தி இருக்கிறார்.

இதனால் அந்த மரப்பெட்டியைத் தேடிய ரெயில்வே ஊழி யர்கள் நாங்கள் படுத்திருந்த பெட்டிக்கும் வந்திருக்கிறார்கள். எங்கள் கம்பார்ட்மென்டில் நான் ஆர்மோனியத்தை பூட்டி வைத்திருந்த மரப்பெட்டியை பார்த்து, அது அந்த வெள்ளைக்காரர் தவறவிட்ட பெட்டி என்று

எண்ணிக்கொண்டார்கள்.இருந்தும் சிறு சந்தேகம். வேறு யாருடைய பெட்டி யாகவும் இருந்தால்?

சந்தேகத்தை சரி செய்ய, உரத்த குரலில் "இந்த மரப்பெட்டி யாருது?" என்று கேட்டிருக்கிறார்கள். நாங்கள்தான் அதற்குள் தூங்கிவிட்டோமே. அந்தக் குரல், எங்கள் தூக்கத்தை தாண்டி காதுகளை எட்டவே இல்லை.

அவர்களும் பெட்டியில் பூட்டு இருந்ததால், திறந்து பார்க்க முற்படவில்லை. பெட்டியை இறக்கிவிட்டு, பெட்டி கிடைத்து விட்டது என்ற தகவலை ஸ்டேஷன் மாஸ்டரிடம் தெரிவித்து இருக்கிறார்கள்.

மறுநாள் காலை 6 மணிக்கு ரெயில் கோவில்பட்டி வந்தபோதுதான் அரக்கப் பறக்க விழித்தோம். வாத்தியங்களை இறக்கி வைக்க முற்பட்டபோதுதான், ஆர்மோனியம் காணாமல் போய்விட்டது தெரிந்தது.

எங்களுக்குத் தூக்கி வாரிப்போட்டது. அடிவயிற்றை ஏதோ கவ்வியது போன்ற உணர்வு.

இப்போது ஆர்மோனியம் பற்றி கொஞ்சம் விளக்கவேண்டும். ஒவ்வொரு ஆர்மோனியமும் வெவ்வேறு அமைப்பில் இருக்கும்.

பெட்டிக் கட்டைகளில் ஆக்ஷனுக்காக வைக்கப்பட்டிருக்கும் கம்பிகளின் டென்ஷன், 'கட்டை'யை அழுத்தியவுடன் அது கீழே இறங்கும் அளவு, அதிலிருந்து புறப்பட்டு வரும் நாதம் எல்லாமே பெட்டிக்கு பெட்டி மாறுபடும்.

இங்கே கச்சேரிக்கென எனக்குத்தரப்பட்ட ஆர்மோனியத்தை வாசித்துப் பார்த்தேன். திருப்தியில்லை. இருந்தாலும் வேறு வழி? ஒரு வழியாக மனதை தேற்றிக்கொண்டேன்.

ஆனால் என்னுடைய ஆர்மோனியம், 'இந்தக்கால கட்டத்தில் இவன் என்னை வாசிக்கக்கூடாது' என்று முடிவு செய்து பிரிந்துபோய் விட்டபிறகு, நான் என்ன செய்ய முடியும்? இந்த சோகத்துடன் இன்னொரு சோகமும் சேர்ந்தே வந்தது.

கோவில்பட்டியில் ஒரு வார கச்சேரிக்கு அண்ணன் ஒத்துக்கொண்டார்கள். நாங்கள் ரெயிலில் கோவில்பட்டி போய்ச்சேர, பண்ணைபுரத்தில் இருந்து அண்ணன் பஸ் ரூட்டில் வந்து எங்களுடன் கோவில்பட்டி கச்சேரியில் கலந்து கொள்வதாக ஏற்பாடு.

நாங்கள் கோவில்பட்டிக்கு வந்துவிட்டோம். இப்போது கிளைமாக்ஸ் நெருங்கிவிட்டது. மாலையில் கச்சேரி. பாவலரோ வரவில்லை.

சரி, மாலையில் எப்படியும் அண்ணன் வந்து விடுவார் என்று உள்ளூர் கம்யூனிஸ்டு தோழர்களை சமாதானப்படுத்தினோம்.

கட்சியின் செயலாளருக்கு விஷயம் போயிற்று. அவர் யதார்த்தவாதி. பாவலர் வரவில்லை என்பதை கூட்டத்தில் சொல்ல முடியாது. அதே நேரம் பாவலரை அதுவரை அந்த ஊர் மக்கள் பார்த்ததில்லை.

பாவலராக பாஸ்கர்

இந்த விஷயத்தை மனதில் கணநேரம் கூட்டிக்கழித்தவர், பாஸ்கரை அழைத்தார். "பாவலர் என்று சொல்லி நீங்களே கச்சேரியை நடத்திவிட முடியுமா?" என்று கேட்டார்.

எங்களுக்கு அதிர்ச்சி. நாங்களாக கச்சேரியை நடத்திவிட முயன்று பார்க்கலாம். ஆனால் பாவலராக நடிப்பதாவது? சினிமாவை விடத் தமாஷாக இருக்கிறதே?

சரி, பாவலராக பாஸ்கர் நடிக்கட்டும். அப்படியானால் பாஸ்க ராக நடிப்பது யார், நானா?

அண்ணன் பாவலரோடு பாட்டுக்கு இடையே காமெடியாக பாஸ்கர் சில கேள்விகள் கேட்பது வழக்கம். அதற்கு அண் ணனின் பதில்கள் மக்களி டம் கைதட்டல் பெறும்.

இப்போது பாஸ்கர் இடத்தில் நான் இருந்து கொண்டு, பாவலராக பாஸ்கரை கருதிக்கொண்டு கேள்விகள் கேட்கவேண் டும்.

கச்சேரியில் அத் தனை பாடல்களும், உரையாடல்களும் எங்க ளுக்கு மனப்பாடம். எதை, எப்படி ஏற்றி, இறக்கிப் பேசவேண்டும் என்பதும் அத்துப்படியான பாடம்.

என்றாலும் மாலை வரையில் அண் ணன் பாவலர் வந்து விடமாட்டாரா என்ற ஒரு கவலை ஓடிக்கொண்டிருந்தது. எப்படியும் வந்துவிடுவார் என்ற நம்பிக்கையும் இருந்தது.

மாறுவேடம் புனைந்து நாங்கள் நடித்தாக வேண்டும் என்றிருக்கும்போது, அண்ணன் எப்படி வருவார்? வரவேயில்லை.

கோவில்பட்டியில் இருந்து ஒரு வாடகைக்காரில் நானும் பாஸ்கரும் சென்றோம். கூடவே கட்சித்தோழர் ஒருவரும் வந்தார்.

சூரங்குடி என்ற கிராமத்தில் முதல் நாள் நிகழ்ச்சி.

அன்றைக்கென்று பார்த்து எந்த ஊரிலும் நாங்கள் எதிர்பார்த்திராத ஒரு நிகழ்ச்சி நடந்தது.

அந்த ஊரிக்கு வெளியே மக்கள் கூடியிருந்தார்கள். அங்கிருந்து பாவலருக்கு வரவேற்பு அளித்து மேடை அமைக்கப்பட்ட மைதானம் வரை கிராமத்தெருக்களில் ஊர்வலமாகப் போய் கூட்டம். அதைத்தொடர்ந்து கச்சேரி.

மைதானம் வந்ததும் காரைவிட்டு இறங்கினோம். எங்களைப் பார்த்ததும் "பாவலர் வரதராஜன்" என்று ஒருவர் உரத்த குரலாய் ஒலிக்க, மக்கள் "வாழ்க" என்று கோஷம் போட்டார்கள்.

**இசை நிகழ்ச்சியில் இளையராஜா போட்ட மாறுவேடம்!**
**பாஸ்கராக நடித்தார்**

இசை நிகழ்ச்சிக்கு பாவலர் வரதராஜன் வராமல் போனதால், வரதராஜனாக பாஸ்கரும், பாஸ்கராக இளையராஜாவும் நடிக்க நேரிட்டது.

இதுபற்றி இளையராஜா கூறுகிறார்:

“மேடையில் கடைசியாகப் பேசிய கம்யூனிஸ்ட்டு கட்சித் தோழர், தனது முடிவுரையில் பாவலரை பற்றி ஒரு அறிமுக உரையாற்றினார். அப்போதைக்கப்போது மக்கள் கைதட்டினார்கள். ‘இப்படியாகப்பட்ட பாவலர் சகோதரர்களின் இசை இப்போது தொடங்கும்’ என்று அறிவித்தார்.

எத்தனை சாமர்த்தியம் பாருங்கள்! இவர்தான் பாவலர் என்று அறிமுகப்படுத்தாமல் ‘பாவலர் சகோதரர்கள்’ என்று பொத்தாம் பொதுவாக சொல்லிவிட்டார். கச்சேரியின்போதோ, முடிந்த பிறகோ ‘எப்படி நீங்கள் பாஸ்கரை பாவலர் என்று சொல்லி ஜனங்களை ஏமாற்றலாம்?’ என்று யாரும் கேள்வி கேட்க முடியாதல்லவா!

பாஸ்கர் துண்டோடு மேடையேறினார். மேடையில் ஏற போடப்பட்டிருந்த மரப்படிகளில் கால் வைக்கும்போது கால் இடறியது. நல்ல வேளையாகக் கீழே விழாமல் மேலே ஏறிவிட்டார்.

அவரைத் தொடர்ந்து நான் ஏறினேன்.

டைட்டில் மியூசிக் முடிந்தது. செங்கொடிப் பாடல் முடிந்தது. அடுத்து ‘வணக்கம்’ பாடலைத் தொடங்கினோம்.

கைதட்டல் இல்லை

‘வணக்கம்’ பாடலில் குறைந்தது நாலு இடங்களிலாவது எல்லா ஊரிலும் கைதட்டல் கிடைக்கும். அன்றைக்கோ, இதோ இப்போது கிடைக்கும், இல்லை இப்போது கிடைக்கும் என்று முழுப்பாடலும் முடியும்வரை எதிர்பார்த்தோம்.

ஊஹூம். ஒரு இடத்தில்கூட கைதட்டல் கிடைக்கவில்லை.

அப்போதே நன்றாக ஊதிவைத்த பலூனில் ‘புஷ்’ என்று காற்றுப்போனது போலாயிற்று.

பாவலர் போல பேச பாஸ்கர் ஆயத்தமானார். பாஸ்கர் போல பேச நான் தயாரானேன்.

பாவலர் மாதிரி பாஸ்கர் பேசத்தொடங்கினார்.

சிவாஜியின் வசனத்தை ஆயிரம் நடிகர்கள், பத்தாயிரம் ரசிகர்கள் மனப்பாடம் செய்து வைத்திருக்கிறார்கள். அவர் வசனங்களை எப்படி ஏற்றி இறக்கிப் பேசுவார் என்பது எல்லாருக்கும் அத்துப்படி.

ஆனால் அவர் மாதிரி நமக்கும் வரும் என்று பேசிப் பார்க்கும்போதுதான், அடடா! இது அல்ல அது. அவர் பேசுவது வேறு. நாம் பேசிக்கொண்டிருப்பது வேறு’ என்பது புரியும்.

பாவலர் பேசியதையெல்லாம் பாஸ்கர் பேசினார். பாஸ்கர் பேசியதை நான் பேசினேன்.

இருந்தாலும் இருவருக்கும் 'ஏதோ ஒன்று' குறைந்திருப்பது புரிகிறது. நூற்றுக்கு நூறு தெரியும் என்ற நம்பிக்கையோடு தொடங்க, பூஜ்யம் அளவு கூட அது இல்லை என்பது தெரிய வந்ததும், அந்த இரண்டு மணி நேரக் கச்சேரி ஒரு ஜென்மம் முழுக்க நீண்டு போவதைப் போலிருந்தது.

காமெடி

அண்ணனுடன் பாஸ்கர் பேசும்போது இடையிடையே ஏதாவது 'காமெடி' பண்ணி மக்களை சிரிக்க வைத்து விடுவார்.

நானும் பாஸ்கர் மாதிரி கைதட்டல் வாங்கி விடுவேன் என்று நம்பி, அதையே செய்தால், எனக்கு வரவேயில்லை. சரியாகச் சொல்ல வேண்டுமானால் அது காமெடியாகவும் இல்லை; வேறு விதமாகவும் இல்லை.

உதாரணத்துக்கு மேடையில் அண்ணன் பாவலர் ஏதோ சொல்ல, "ஆமாண்ணே" என்று சொல்லி விட்டு அப்படியே பக்கத்தில் இருக்கும் சோடாவை எடுத்து 'மடக்... மடக்' என்று குடிப்பார் பாஸ்கர். மக்கள் சிரிப்பார்கள்.

இந்தப் பாணி எனக்கு வரவில்லை. கைதட்டும் கிடைக்கவில்லை. அதனால் சோடாவும் உள்ளே போக மறுத்து 'தும்மலை'

வரவைத்துவிட்டது.இதெல்லாம் எனக்குத்தான் காமெடியாக இருந்ததே தவிர, ஜனங்கள் கண்டுகொள்ளவில்லை.

ஊருக்குள் நுழையும்போது, உற்சாகமாக 'பாவலர் வாழ்க' என்று கோஷம் போட்ட இந்த ஜனங்களுக்கு என்னதான் ஆயிற்று?

இப்போது எனக்கு புரியத்தொடங்கியது. இயல்பான தன்மை குறையும்போது, அது உள்ளங்களைத் தொடுவதும் இல்லை; கவருவதும் இல்லை.

கைதட்டல் இல்லாமலே அன்றைய கச்சேரி முடிந்தது. இன்னும் 6 நாட்கள் இதே போல் இருந்தால் என்னாவது? அண்ணன் வந்துவிடமாட்டார்களா என மனசு ஏங்கியது.

வந்தார், பாஸ்கர்

இப்படியே மூன்று நாட்கள் நாங்கள் கச்சேரி முடித்தோம். நாலாம் நாள் ஒருவழியாக அண்ணன் வந்துவிட்டார். 'அப்பாடா' என்று உயிர்

வந்தது.ஆனால் இன்னு் என் ஆர்மோனியப் பெட்டி வரவில்லையே? உயிர் வந்ததும், வராத மாதிரியல்லவா இருக்கிறது?

இன்னொரு ஆர்மோனியத்தை அதிக விலை கொடுத்துக்கூட வாங்கி விடலாம். ஆனால் அதெல்லாம் அந்த ஆர்மோனியம் போல வருமா?

ஆர்மோனியம் கிடைத்தது

அடுத்த மூன்று நாட்கள் கச்சேரியையும் அண்ணனுடன் முடித்துவிட்டு மதுரை வந்து

கட்சி ஆபீசுக்கு சென்றால், என் ‘உயிர்’ அங்கே இருந்தது. நான் ரெயிலில் தவறவிட்ட அதே என் ஆர்மோனியம்.

போன உயிர் திரும்ப வந்தது போல் எனக்குள் அப்படியொரு சந்தோஷம்!

மதுரையில் இந்தப் பெட்டியை வாங்கிக்கொள்ள வந்த வெள்ளைக்காரர், அது தன்னுடையது இல்லை என்று சொல்லியிருக்கிறார். அதனால் இந்தப்பெட்டி யாருடையது என்று தெரிந்து கொள்வதற்காக பெட்டியை உடைத்திருக்கிறார்கள். ஆர்மோனியத்தின் மேல் மூடியில் அரிவாள் சுத்தியல் படத்துடன் பாவலர் வரதராஜன் என்றும் எழுதியிருந்ததைப் பார்த்து நேராக கம்யூனிஸ்டு கட்சி ஆபீசில் கொண்டு சேர்த்து விட்டார்கள்.

நான் ஆர்மோனியப் பெட்டியைப் பார்த்தேன். “என்னடா பசங்களா? நான் இல்லாம கச்சேரியா பண்ணிட்டு வர்றீங்க?” என்று கேட்பது போல் இருந்தது.

ஆர்மோனியப் பெட்டியின் பூட்டை உடைத்திருந்தார்கள். பரவாயில்லை. வேறு பூட்டு கிடைக்கும்.

ஆனால் அது தொலைந்ததால் உடைந்து போன என் மனம், இப்போது உடைந்த அடையாளமே தெரியாமல் நன்றாகிவிட்டதே!

தொடர்ந்து கச்சேரிகள், கலகலப்பு என்று போய்க்கொண்டிருந்த இந்த மாதிரியான ஒரு நாளில் பாரதிக்கு நாடக ஆர்வம் இருப்பதை அண்ணன் தெரிந்து கொண்டு விசாரித்திருக்கிறார். பாரதியுடன் நாங்களும் நாடகம் போட்டதை தெரிந்து கொண்டவர், மதுரையில் நடந்த கம்யூனிஸ்டு கட்சி மாநாட்டில் நாடகம் நடத்த பாரதிக்கு ஒரு சந்தர்ப்பம் வாங்கிக் கொடுத்தார். தொடர்ந்து கிடைத்த நாடக அனுபவங்கள் பாரதிக்கு புது உத்வேகம் கொடுத்தது உண்மை.

**சினிமாவில் சேர பாவலர் முயற்சி**
**படக்கம்பெனி தொடங்கினார்**

இளையராஜாவின் அண்ணன் பாவலர் வரதராஜன், சினிமாத்துறையில் அடியெடுத்து வைக்க ஒரு படக்கம்பெனியைத் தொடங்கினார்.

ஆனால், அவருடைய முயற்சி வெற்றி பெறவில்லை.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

"வில்லுப்பாட்டுக்கு ஒரு அந்தஸ்தை ஏற்படுத்தியவர் கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன்தான். அந்தக் கலையின் சிறு வடிவத்திற்குள் ஆழ்ந்து சிந்திக்க வைக்கும் கருத்துக்கள் ஒளிவிடும். இது அவருடைய தனிச்சிறப்பு.

அண்ணன் பாவலரும் அப்படித்தான். கலைவாணருக்கு சமமாக அவர் கருத்துக்கள் சிறப்பானவையாக இருக்கும். அவர் சினிமாவுக்குள் வராமல் போனது, சினிமாவின் துரதிர்ஷ்டமே தவிர, அவருடைய தகுதி இன்மை அன்று.

சினிமா கம்பெனி

சினிமா உலகில் நுழைய அவர் முயற்சியும் செய்தார். நண்பர்களுடன் சேலத்தில் ஒரு ரூம் எடுத்து, "ஜே.ஏ.கே.எஸ். புரொடக்ஷன்ஸ்" என்ற பெயரில் சினிமா கம்பெனியும் தொடங்கி விட்டார்! சென்னையில் படக்கம்பெனி தொடங்கினால் நிறைய செலவாகும் என்று கருதி, சேலத்தில் படக்கம்பெனியை தொடங்கினார்.

தபால் கார்டுகளில் விலாசம் எழுதும் பகுதிக்குப் பக்கத்தில் காலி இடம் இருக்கிறது அல்லவா? அங்கு "ஜே.ஏ.கே.எஸ். புரொடக்ஷன்ஸ்" என்று அச்சடித்திருந்தார் – "ஏவி.எம். புரொடக்ஷன்ஸ்" என்பது மாதிரி! அந்தக் கார்டில்தான் வீட்டுக்குக் கடிதம் எழுதுவார்.

'அண்ணன் சினிமாவில் பெரிய ஆளாக வரப்போகிறார்' என்று நான் நினைத்தேன். அம்மா, பாஸ்கர், அமர் அனைவரும் அப்படித்தான் எதிர்பார்த்தார்கள்.

ஆனால், அப்படி நடக்கவில்லை. அண்ணன் மறுபடியும் ஊருக்குத் திரும்பிவிட்டார்.

இவ்வாறு இளையராஜா குறிப்பிட்டார்.

பாரதிராஜா குடும்பப்பாசம்

பாரதிராஜாவுக்கும், இளையராஜாவுக்கும் ஏற்பட்ட நட்பு, இரண்டு குடும்பத்தினர் இடையேயும் பாசத்தை வளர்த்தது.

இதுபற்றி இளையராஜா கூறுகிறார்:

"வேலை பார்ப்பதற்காக, பண்ணைபுரத்துக்கு பாரதி வந்தது 1961–ம் வருடம். அவருக்கு சனி, ஞாயிறு விடுமுறை. அதனால், அந்த நாட்களில் சொந்த ஊரான அல்லிநகரத்துக்குப் போய் விடுவார். ஒரு முறை, என்னையும், பாஸ்கரையும் கூட அழைத்துப்போனார்.

பாரதியின் அம்மா, சகோதரிகள் பாலாமணி, பாரதி, சகோதரர் செல்லக்கண்ணு, ஜெயராஜ், இன்னும் மூத்த சகோதரர், அப்பா பெரிய மாயத்தேவர் எல்லோரும் நன்றாகப் பழக்கமாகிவிட்டார்கள்.

முதல் சந்திப்பிலேயே, பாரதியின் அம்மா, "வாங்கப்பா! நீங்கதானா அது?" என்று மி கவும் அன்புடன் பேசினார்கள்.

என் அம்மாவும் இப்படித்தான். யாரையாவது அழைத்துப்போய், அம்மாவிடம் அறிமுகப்படுத்தினால், "வாப்பா! சவுக்கியமா? ஏம்பா இவ்வளவு நாள் இந்தப் பக்கம் வரலே?" என்று கேட்பார்கள்!

இரண்டு தாய்களும், எங்களுக்கு ஒரே தாய்தான்.

தீபாவளித் திருநாள்

ஒருமுறை தீபாவளிக்கு நானும், பாரதியும் அல்லிநகரம் போய்விட்டோம். இரவெல்லாம் பட்டாசு வெடித்து, மத்தாப்பு கொளுத்தி தீபாவளியைக் கொண்டாடினோம்.

பிறகு தூங்கிவிட்டு மறுநாள் காலையில் எழுந்தால், வெந்நீரும், சோப்பும், சீயக்காயும், துண்டும் தயாராக இருந்தன.

"வாங்கப்பா! சீக்கிரம் எண்ணை தெய்த்து குளிச்சிட்டு ரெடியாகுங்க" என்றார், பாரதியின் அம்மா.

"எதுக்கு?" என்று நாங்கள் கேட்க, "சாப்பிட வேணாமா? பின்னே என்ன தீபாவளி?" என்று கூறிவிட்டு, பாரதிக்கு எண்ணை தேய்த்து விட்டார்கள்.

நானும் எண்ணை எடுத்து தேய்த்துக்கொண்டேன். "நல்லா இருக்கு நீ எண்ணை தேய்க்கிற லட்சணம்!" என்று கூறிவிட்டு, எண்ணை கிண்ணத்தை வாங்கிக் கொண்டார்கள். என் முதுகில், எண்ணை படாமலிருந்த இடங்களில் எல்லாம் எண்ணை தேய்த்துவிட்டார்கள்.

பிறகு, பாரதியின் தலையில் நன்றாக சீயக்காய் போட்டுத் தேய்த்ததுடன், சோப்பு போட்டு தேய்த்து, தண்ணீர் ஊற்றி குளிப்பாட்டினார்கள்.

நான் குளிப்பதற்கு சொம்பில் தண்ணீர் எடுத்தேன். "போதும். இங்கே கொண்டா!" என்று வலுக்கட்டாயமாக சொம்பை வாங்கி, எனக்கும் சீயக்காய் தேய்த்து, குளிப்பாட்டினார்கள்!

வீட்டுக்கு வந்த மகனின் நண்பனுக்கு, எந்த ஊரில் எந்தத்தாய் இப்படி செய்திருப்பார்கள்!

பிறகு சாப்பாடு. சாதாரணமாக மூன்று நாலு இட்லி, ஒரு தோசை, காபியுடன் கதை முடிந்து விடும். ஆனால் எங்களுக்கு 6 இட்லி, 6 பனியாரம், 6 தோசை இவற்றுடன், சட்னி, சாம்பார், மிளகாய் சட்னி ஆறாக ஓடியது!

ஒரே ஒரு தீபாவளிக்கு இப்படி நடந்தது என்றால் பரவாயில்லை. எத்தனை

தீபாவளிகளுக்கு நான் அல்லிநகரத்துக்கு போனேனோ, அப்போதெல்லாம் இப்படி நடந்தது.

காந்தி பக்தர்

பெரிய மாயத்தேவர், காந்தீயத்தில் பற்று மிக்கவர் என்பதை அவருடைய கதர் வேட்டியும், சட்டையும் எடுத்துக்காட்டின. சகோதரி பாலா, பள்ளிக்கூட ஆசிரியையாக இருந்தார். பாரதி – இந்தத் தங்கையின் பெயரைத்தான் தன் பெயராக மாற்றிக்கொண்டார், பாரதிராஜா. (இயற்பெயர் சின்னச்சாமி)

பின்னால் நான் இசையமைப்பாளனாக ஆன பிறகு, பண்ணைப்புரம் போகும்போதோ, அம்மாவின் சமாதிக்கு போகும்போதோ, அல்லிநகரத்திலும், தேனியிலும் காரை நிறுத்தி, அம்மாவைப் பார்க்காமல் போனதே இல்லை. வெறும் கையுடன் போகமாட்டேன். ஒவ்வொரு முறையும், 4 புடவையும், பணமும் கொடுத்து அந்தத் தாயை வணங்குவேன்.

என்னைப் பெறாமல் பெற்ற தாய் அவர்.”

இவ்வாறு இளையராஜா கூறினார்.

## சிறு வயதில் இளையராஜாவை கவர்ந்த எம்.எஸ்.விஸ்வநாதன் பாடல்கள்

சிறு வயதில், 'மெல்லிசை மன்னர்' எம்.எஸ்.விஸ்வநாதனின் பாடல்களைக்கேட்டு பிரமித்துப்போன இளையராஜா, இவரைப்போல் உயர முடியுமா என்று எண்ணினார்.

தனது இளமைப் பருவம் பற்றி இளையராஜா தொடர்ந்து கூறியதாவது:—

பம்பாய் பயணம்

"1963—ம் ஆண்டில், பம்பாயிலும் (தற்போதைய மும்பை) ஆமதாபாத்திலும் ஒரு மாதம் சுற்றுப்பயணம் செய்து, இசை நிகழ்ச்சிகள் நடத்தினோம்.

அப்போது, பம்பாய் நகரில் எங்கள் காலடி படாத இடமே கிடையாது. சிட்டி பஸ், டிராம், மாடி பஸ், அதிவேக ரெயில் — இவற்றில் எல்லாம் பயணம் செய்திருக்கிறோம். இப்போதுள்ள நெரிசல் அப்போது கிடையாது.

லதா மங்கேஷ்கர்

மலபார் ஹில்ஸ் போகும் வழியில், லதா மங்கேஷ்கர் இருந்த வீட்டை வேடிக்கை பார்த்துக்கொண்டே போவோம்.

மெரின் டிரைவ், மெயின் டவுன் ஏரியா, தாதர், மாதுங்கா என்று எந்த இடம் போனாலும், ஒரே ஒரு பாடல் இடைவிடாமல் கேட்டுக்கொண்டிருந்தது. அது, "தாஜ்மகால்" படத்தில், மதன் மோகன் இசை அமைத்த "ஜொவாதாக்கியாவோ நிபானா படேகா" என்ற பாடல்தான். மகமத் ரபியும், லதா மங்கேஷ்கரும் பாடிய இந்தப்பாடல் எங்களை கிறங்க வைத்தது.

தாராவியில் ஒரு தமிழ் நாடகத்திற்கும் இசை அமைத்தோம்.

தாராவிக்குள் நுழையும்போதே கருவாடு வாடையும், மீன் நாற்றமும், வாந்தி வருகிற அளவுக்கு இருந்தன.

இந்தப் பகுதியிலா தமிழர்கள் வாழ்கிறார்கள்! நினைக்கும்போதே நெஞ்சம் பதைத்தது.

"விதியே, விதியே!

தமிழ்ச் சாதியை

என் செய்ய நினைத்தாய்

எனக் குரையாயோ?"

— என்ற பாரதியின் பாடல் இதயத்தில் எதிரொலித்தது.

தாராவியில் ஒருநாள் இருந்தோம். அவர்களோடுதான் உண்டோம்; உறங்கினோம்.

பிறகு, ஆமதாபாத்தில் இரண்டு நிகழ்ச்சிகள் நடத்துவதற்காக ஒரு வாரம் தங்கினோம். மீண்டும் பம்பாய் வந்து, சென்னை மதுரை வழியாக பண்ணைபுரம் வந்தோம்.

நேரு மறைவு

1964–ல் பிரதமர் நேரு மறைந்தபோது, “சீரிய நெற்றி எங்கே?” என்று தொடங்கும் இரங்கல் பாடலை கவிஞர் கண்ணதாசன் எழுத, அதை சீரணி அரங்கில் சீர்காழி கோவிந்தராஜன் பாடினார்.

இந்தச் செய்தியுடன், அந்த முழுப்பாடலையும் “தினத்தந்தி” வெளியிட்டிருந்தது.

இந்த சமயத்தில் நாங்கள் திருத்துறைப்பூண்டி வட்டாரத்தில் இசை நிகழ்ச்சி நடத்துவதற்காகச் சென்றிருந்தோம். நேரு மறைவு காரணமாக, திருத்துறைப்பூண்டி நிகழ்ச்சி ரத்து செய்யப்பட்டது.

அடுத்த நாள் வேதாரண்யத்தில் நிகழ்ச்சி. அதை நடத்துவதா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்தபோது, கண்ணதாசன் எழுதியிருந்த பாடலை இசை அமைத்துப் பார்ப்போம் என்று எண்ணினேன். சீர்காழி கோவிந்தராஜன் அதை எப்படி பாடியிருப்பார் என்று எனக்குத் தெரியாது. நான் என் பாணியில் இசை அமைத்துப் பாடினேன்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த அண்ணன், பிரதமர் நேருவுக்கு அஞ்சலி செலுத்தும் விதமாக வேதாரண்யம் நிகழ்ச்சியை நடத்தி விடலாம் என்று கூறினார்கள்.

அதுமட்டுமல்ல, நிகழ்ச்சியில் என்னை பாடவும் வைத்துவிட்டார்கள்.

எம்.எஸ்.விஸ்வநாதன்

கச்சேரிகளில், பாடல் முடிந்தவுடன் அடுத்த பாடலுக்கு இடையே ஒரு சினிமா பாடல்களை வாசிப்பது வழக்கம். அதற்கெல்லாம் சில சமயம் கைதட்டல் கிடைக்கும். ஆரம்ப காலத்தில் இதற்காகப் பெருமைப்பட்டுக்கொண்ட நான், பிறகு, “இந்தக் கைதட்டல்கள் எல்லாம், பாட்டை யார் கம்போஸ் செய்தார்களோ அவர்களுக்கு அல்லவா போய்ச்சேர வேண்டும்” என்று எண்ணத் தொடங்கினேன்.

நாங்கள் இப்படிப் பாடுவதில் அண்ணன் எம்.எஸ்.விஸ்வநாதன் அவர்களின் பாடல்கள்தான் அதிகமாக இருக்கும். என்னுடைய பாடல்களுக்கு மக்களிடம் என்றைக்கு அதிகம் கைதட்டல் கிடைக்கிறதோ அன்றைக்குத்தான் நான் பெருமையோ, கர்வமோ கொள்ள முடியும் என்ற திட்டவட்டமான முடிவுக்கு என் மனம் வந்துவிட்டது. எனவே, சினிமா பாடல்களுக்கு கைதட்டல் ஒலி எழும்போது, அதோடு சொந்தம் கொண்டாடாமல், தனித்திருந்தேன்.

அண்ணன் எம்.எஸ்.வி. பாடல்களுக்கு கைதட்டல்கள் விழும்போதெல்லாம் அவருடைய பாடல்களை மனம் ஆராயத் தொடங்கியது. அவருடைய ஆற்றல் என்னை வியக்க வைத்தது.

அடேயப்பா! எவ்வளவு வித்தியாசமான – ஒன்றுக்கு ஒன்று சம்பந்தம் இல்லாத ட்யூன்கள்? அதோடு இணைந்து வரும் அருமையான மியூசிக்!

நாளுக்கு நாள் அண்ணன் எம்.எஸ்.வி. மீது மதிப்பும், மரியாதையும் கூடின.

சிறு வயதிலேயே எங்கள் உள்ளங்களை எல்லாம் கொள்ளை கொண்ட சி.ஆர்.சுப்பராமனிடம் எம்.எஸ்.வி. உதவியாளராக இருந்தார் என்றும், உடுமலை நாராயணகவி, பாபநாசம் சிவன் முதலிய மேதைகளிடம் பாடல் எழுதி வாங்கும் பணியில் இருந்தார் என்றும், எம்.எஸ்.வி. அவர்கள் பத்திரிகைகளுக்கு அளித்திருந்த பேட்டிகளின் வாயிலாக அறிந்திருந்தேன்.

'இதுபோன்ற சந்தர்ப்பங்கள் எதிர்காலத்தில் நமக்கு அமையுமா? இவர்களை நேரில் காணும் வாய்ப்பாவது கிட்டுமா?" என்று என் உள்ளம் அலைமோதும்."

இவ்வாறு இளையராஜா கூறினார்.

**இளையராஜா இசை நிகழ்ச்சி**
**எம்.எஸ்.விஸ்வநாதன் கேட்டு ரசித்தார்**

திருச்சியை அடுத்த பொன்மலையில் நடந்த இளையராஜாவின் இசை நிகழ்ச்சியை "மெல்லிசை மன்னர்" எம்.எஸ்.விஸ்வநாதன் கேட்டு ரசித்துப் பாராட்டினார்.

கம்யூனிஸ்டு கட்சிக்காக அண்ணன் பாவலர் வரதராஜனுடன் சேர்ந்து, இளையராஜா இசை நிகழ்ச்சிகள் நடத்தி வந்த காலக்கட்டம் அது.

அப்போது நடந்த நிகழ்ச்சிகளை இளையராஜா நினைவு கூர்ந்தார்:

நண்பர்கள்

"இளம் வயதில், என் நண்பர்களில் எனக்கு முதன்மையானவர்கள் இருவர். ஒருவர் கரியணம்பட்டி எம்.சுப்பிரமணி. என் வகுப்புத் தோழன். இரண்டாவது பாரதிராஜா.

பாரதி இல்லாத வாழ்க்கையை என்னால் நினைத்துக்கூட பார்க்க இயலாது. இன்று வரை அந்த நட்பில் குறைவில்லை.

படிக்கும் நேரத்தில் மணியுடன் அதிகமாகப் பழகவில்லை என்றாலும், பி.யு.சி.யில் இருந்து என்ஜினீயரிங் படித்து முடிக்கும் வரை இருந்த நட்பு, அதன் பின்னும் – சினிமாவில் வாய்ப்பு கிடைத்த பிறகும் தொடர்ந்தது.

மதுரையில் தங்க நேரும்போதெல்லாம் மணியுடன்தான் அதிகமாக இருப்பேன். சினிமா, வைகை மணல்வெளி, திருப்பரங்குன்றம் அருகே உள்ள ஏரிக்கரை, மீ னாட்சி கோவில் என்று நாட்கள் கழியும்.

விடுமுறை காலங்களில், ஒன்று நான் கரியணம்பட்டியில் மணியுடன் தங்குவேன். அல்லது மணி என் வீட்டில் தங்குவார்.

மாலை நேரங்களில் புல்லாங்குழலை எடுத்துக்கொண்டு கரியணம்பட்டி ஏரிக்கரை நந்தவனம் அல்லது மேற்கே வீராந்தோப்புக்கு சென்று நான் வாசிக்க – அல்லது பாஸ்கர் இருந்தால் பாஸ்கர் வாசிக்க, இதமாகப் பொழுதுபோகும்.

போதாதற்கு "கல்கி"யின் வந்தியத்தேவனும், குந்தவையும், வானதியும், சிவகாமியும், பார்த்திபனும் எங்கள் கற்பனைகளைத் தூண்டி, அந்த சரித்திர காலத்திற்கே இழுத்துச் சென்று விடுவார்கள்.

இசை அமைப்பு

அவ்வப்போது வீட்டில் இசை பிராக்டிஸ் செய்து கொண்டிருப்போம். நண்பர்கள் கூடிவிடுவார்கள். ஆளுக்கொரு பாடலாகச் சொல்ல, வாசித்துக் கொண்டிருப்போம்.

இடையில், திடீரென்று தம்பி அமர் எழுதிய பாடலுக்கு, நான் இசை அமைத்த பாடலை வாசிப்பேன்.

"இது எந்தப் படத்தில் வரும் பாடல்?" என்று பலர் கேட்பார்கள். 'நம் பாடல், சினிமாப் பாடலின் தரத்துக்கு உயர்ந்து விட்டதே' என்று மனதுக்குள் சந்தோஷமாக

இருக்கும்.

“படம் இன்னும் வரவில்லை. எம்.எஸ்.வி. இசை அமைத்த பாடல்” என்போம்.

நண்பர்கள் குழுவில் இரண்டொருவர் தவிர எல்லோரும் எம்.எஸ்.வி.யின் ரசிகர்கள். அடிக்கடி நாங்கள் அவர் பாடலையே வாசிப்பதால், அத்தனை ஈர்ப்பு.

அப்படியே சீட்டாட்டம் தொடங்குவோம். “நாக் அவுட்” — 25 காசு!

யார் கடைசியில் ஜெயிக்கிறாரோ, அவர் பண்ணைபுரம் பஸ் ஸ்டாண்டில் உள்ள சுப்புசாமி நாயக்கர் கடையில் இட்லி — டிபன் வாங்கித்தர வேண்டும்.

தி.மு.க. வெற்றி

1967 தேர்தலில் தி.மு.கழகம் வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றியது.

1957 தேர்தலில் 50 எம்.எல்.ஏ.க்களைக் கொண்டிருந்த கம்யூனிஸ்டு கட்சி, 1962—ல் 11 ஆகக் குறைந்து, 1967—ல் 2 எம்.எல்.ஏக்களை மட்டுமே பெற்றது. பாலதண்டாயுதமும், சி.ஏ.பாலனும் தூக்கு மேடையிலிருந்து திரும்பி, தி.மு.க.வுக்கு எதிராகப் பிரசாரம் செய்தும் பலன் இல்லை.

தி.மு.கழகம் மந்திரிசபை அமைத்தது. அண்ணா முதல்—அமைச்சர் ஆனார்.

பொன்மலை கச்சேரி

1967 கடைசியிலோ, 1968 ஆரம்பத்திலோ, பொன்மலை ரெயில்வே காலனியில் எங்கள் கச்சேரி இருந்தது. நல்ல கூட்டம். கச்சேரி முடிந்து, பொன்மலை தோழர்களுடன் சாப்பிடப்போனோம்.

அப்போது, எங்கள் கச்சேரியை எம்.எஸ்.விஸ்வநாதன் கேட்டுக்கொண்டிருந்தார் என்று தோழர்கள் சொன்னார்கள். எங்களுக்கு ‘ஷாக்’ அடித்தது.

“எம்.எஸ்.வி. அண்ணன் எங்கள் கச்சேரியை கேட்டாரா!” என்று நாங்கள் ஆச்சரியத்துடன் கேட்க, நண்பர்கள் ‘ஆமாம்’ என்று மீண்டும் சொன்னார்கள்.

எம்.எஸ்.வி.யின் மாமா வீடு பொன்மலையில் இருந்தது. சென்னை போகும் வழியில் அங்கு தங்கியிருக்கிறார். அப்போது எங்கள் கச்சேரியைக் கேட்டிருக்கிறார் என்று தெரிந்து கொண்டோம்.

இரவு வெகு நேரமாகி விட்டதால், எம்.எஸ்.வி. தூங்கச் சென்றிருக்கலாம் என்று நினைத்தோம். மறுநாள் காலை அவரைச் சந்திக்க வேண்டும் என்று தீர்மானித்தோம்.

அன்றிரவு திருச்சி உறையூரில், கட்சி ஆபீசில் தங்கினோம். தூக்கம் வரவில்லை. மறுநாள் எம்.எஸ்.வி.யைப் பார்ப்பது பற்றியே சிந்தனை.

மறுநாள் காலையில் முதல் வேலையாக, எம்.எஸ்.வி. அவர்களைப் பார்த்துவிட்டு வருமாறு தம்பி அமரை அனுப்பினோம். ‘எப்போது வருவான், எப்போது வருவான்’ என்று காத்திருந்தோம். அமர் திரும்பி வந்தான். ‘என்ன ஆச்சு, என்ன ஆச்சு?’

என்று கேட்டோம்.

'எம்.எஸ்.வி. இரவே சென்னைக்கு புறப்பட்டுவிட்டார்' என்ற செய்தியைக் கேட்டு அதிர்ந்து போனோம். என்றாலும், அமர் சொன்ன விவரங்கள் எங்களுக்கு ஆறுதல் அளித்தன.

"எம்.எஸ்.வி.யின் மாமாவுடன் அரை மணி நேரம் பேசிவிட்டு வருகிறேன். நாம் கச்சேரி செய்தபோது, எம்.எஸ்.வி. அண்ணன் வீட்டுக்கு வெளியே ஈசிசேரைப் போட்டு உட்கார்ந்து, கச்சேரியை ரசித்துக் கேட்டிருக்கிறார். 'இந்தப்பசங்க, நல்லா வாசிக்கிறாங்க' என்று பாராட்டியிருக்கிறார்..."

இவ்வாறு அமர் சொன்னதும் ஆனந்தத்தில் மிதந்தோம். அதே சமயம், 'ஆகா! எப்பேர்ப்பட்ட மேதை நம் பாட்டைக் கேட்டிருக்கிறார்! அவரை சந்திக்க முடியாமல் மிஸ் பண்ணிவிட்டோமே' என்ற வருத்தமும் மேலிட்டது."

இவ்வாறு கூறினார், இளையராஜா.

**இளையராஜா இசை அமைப்பில்**
**ஓ.ஏ.கே. தேவர் நாடகம் திருச்சியில் அரங்கேற்றம்**

திரைப்பட நடிகர் ஓ.ஏ.கே. தேவரின் "மாசற்ற மனம்" என்ற நாடகத்துக்கு இளையராஜா இசை அமைத்தார். இந்த நாடகம் திருச்சியில் அரங்கேறியது.

பொன்மலையில் நடந்த தனது கச்சேரியை எம்.எஸ்.விஸ்வநாதன் கேட்டு ரசித்தார், பாராட்டினார் என்ற தகவல், இளையராஜாவுக்கு உற்சாகத்தை அளித்தது.

எம்.எஸ்.வி.க்கு கடிதம்

அவர், எம்.எஸ்.விஸ்வநாதனுக்குக் கடிதம் எழுதினார். "நான் விரைவில் சென்னைக்கு வருகிறேன். அப்போது உங்களை சந்திக்கிறேன். நீங்கள் என்னை உங்கள் பூஜை அறைக்கு அழைத்துச்சென்று, ஆசீர்வதிக்க வேண்டும்" என்று குறிப்பிட்டிருந்தார்.

குறிப்பிட்டபடி ஒருநாள் சென்னை சென்று காலை 8–30 மணிக்கு எம்.எஸ்.விஸ்வநாதன் வீட்டுக்குச் சென்றார்.

வீட்டில் இருந்தவர்கள், "புறப்பட்டுக் கொண்டிருக்கிறார். விரைவில் வந்துவிடுவார்கள்" என்றார்கள்.

எம்.எஸ்.வி. வருகையை எதிர்பார்த்து இளையராஜா காத்துக் கொண்டிருந்தார்.

சரியாக 9 மணிக்கு விஸ்வநாதன் வெளியே வந்தார். நெற்றியில் விபூதி – குங்குமம் பளிச்சிட, புன்சிரிப்புடன் வந்தார்.

அவரை பார்த்த இளையராஜா, கைகூப்பி வணங்கினார். விஸ்வநாதனும் பதிலுக்கு வணங்கினார்.

அதன்பின், என்ன பேசுவது என்று தெரியாமல் தயக்கத்துடன் நின்றார், இளையராஜா. தன் கடிதத்தில் குறிப்பிட்டிருந்ததுபோல, எம்.எஸ்.வி. தன்னை பூஜை அறைக்கு அழைத்துச்சென்று ஆசீர்வதிப்பார் என்று நினைத்தார்.

ஆனால், எம்.எஸ்.வி. மிகவும் 'பிசி'யாக இருந்த காலக்கட்டம் அது. இளையராஜா எழுதிய கடிதத்தை அவர் பார்த்தாரோ என்னவோ தெரியவில்லை. தயாராக நின்ற காரில் ஏறி புறப்பட்டுப் போய்விட்டார்!

கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்த இளையராஜா, இவ்வுலக நினைவுக்குத் திரும்பி வந்தார்.

வீடு சென்றதும் நடந்ததை எல்லாம் பாரதிராஜாவிடமும், பாஸ்கரிடமும் சொன்னார்.

"கடிதம் எழுதியதை அவரிடம் சொன்னாயா? பொன்மலை கச்சேரி பற்றிச் சொல்லியிருக்கலாமே, அவருக்கு நினைவு வந்து பேசி இருப்பாரே" என்றெல்லாம் பாரதிராஜாவும், பாஸ்கரும் கூறினார்கள்.

"சொல்லியிருக்கலாம்தான். ஆனால் சொல்லவில்லை!" என்றார், இளையராஜா!

எம்.பி.சீனிவாசன்

இதன்பின் கம்யூனிஸ்டு தலைவர் பாலதண்டாயுதம், இளையராஜாவின் திறமையைப் பாராட்டி, "எம்.பி. சீனிவாசனுக்கு ஒரு கடிதம் தருகிறேன். அவரைப் பாருங்கள். சினிமா துறையில் நீங்கள் பணியாற்ற அவர் உதவுவார்" என்று கூறினார்.

எம்.பி.சீனிவாசன், யதார்த்தமாக எடுக்கப்படும் படங்களுக்கும், சிறிய பட்ஜெட் படங்களுக்கும் இசை அமைப்பதில் புகழ் பெற்று விளங்கினார். அவரை இளையராஜாவும், பாஸ்கரும் போய்ப் பார்த்தார்கள். பாலதண்டாயுதத்தின் கடிதத்தையும் கொடுத்தார்கள்.

அதைப் படித்துப் பார்த்த எம்.பி.சீனிவாசன், பின்வருமாறு கூறினார்:—

"உங்கள் எதிர்பார்ப் பையோ, திறமையையோ குறைவாக மதிக்கவில்லை. உங்கள் கனவுகளையும், கற்பனைகளையும் வேண்டாம் என்று சொல்லவில்லை. நீங்கள் நன்றாக ஹார்மோனியம் வாசிப்பவர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால், ஒவ்வொரு இசை அமைப்பாளருக்கும் ஹார்மோனியம் வாசிக்க மூன்று, நான்கு பேர் இருக்கிறார்கள். தபேலா, டோலக், பாங்கோ போன்ற வாத்தியங்களை வாசிப்பவர்களும் நான்கு – ஐந்து பேர் இருக்கிறார்கள். என்னிடம் சண்முகம் என்ற ஹார்மோனிஸ்ட் இருக்கிறார். அவருக்கே வேலை தர இயலாததால் 'தில்ருபா' என்ற வாத்தியத்தை வாசிக்கப் பயன்படுத்திக் கொள்கிறேன்."

இவ்வாறு கூறி நிறுத்திய எம்.பி.சீனிவாசன், "இவ்வளவு இடைஞ்சல்களுக்கு மத்தியில் நீங்கள் சினிமாவில் சேரத்தான் வேண்டுமா? அல்லது சேரமுடியுமா!"

இப்படி எம்.பி.சீனிவாசன் சொன்னது, இளையராஜாவுக்கு ஏமாற்றம் அளித்தபோதிலும், சோர்வடையச் செய்யவில்லை.

இதன்பின் நடந்தது பற்றி இளையராஜா கூறுகிறார்:

"எம்.பி.சீனிவாசன் கூறியதில் நியாயம் இருந்தது. ஆனால், எங்கள் பக்க நியாயத்தை அவர் பக்க நியாயம் எந்த விதத்திலும் பாதிக்கவில்லை.

சில நாள் கழித்து, சங்கிலி முருகனிடம் இருந்து எங்களுக்கு அழைப்பு வந்தது. போய்ப் பார்த்தோம். "ஓ.ஏ.கே. தேவர் அண்ணன் நாடகத்துக்கு இசை அமைக்க உங்களுக்கு சந்தர்ப்பம் வாங்கிவிட்டேன். ஏற்கனவே வாசித்த சிவாஜி பார்ட்டியை விட்டுட்டு, புதுசா வந்த உங்களை கூப்பிட்டு கொடுத்திருக்கிறோம். நன்றாக இசை அமைக்க வேண்டியது உங்கள் பொறுப்பு" என்றார்.

நன்றாக செய்வதாய்ச் சொன் னோம்.

அதன்படி இசை அமைத்தோம். எம்.எஸ்.வி.யிடம் 'கோரஸ்' பாடி வந்த கமலா, எங்கள் குழுவில் பாட முன்வந்தார்.

அரங்கேற்றம்

ஓ.ஏ.கே. தேவரின் "மாசற்ற மனம்" நாடகம் திருச்சியில் அரங்கேறியது. என் இசை உலக வாழ்வு முதன் முதலாகத் தொடங்கிய அதே திருச்சியில், சென்னை சென்று

நான் இசைத்த முதல் நாடகமும் அரங்கேறியது. எங்கள் பாடல்கள் பாராட்டுப் பெற்றன.

இந்த நாடகத்தில் தேங்காய் சீனிவாசன், சுருளிராஜன் ஆகியோர் நகைச்சுவை வேடங்களில் நடித்தார்கள். கவுண்டமணியும், செந்திலும் ஒன்றிரண்டு சீன்களில் வந்து போனார்கள். பிற்காலத்தில் மிகவும் பிரபலமாவார்கள் என்று அப்போது யாருக்கும் தெரியாது!"

இவ்வாறு இளையராஜா கூறினார்.

**தன்ராஜ் மாஸ்டரிடம் இசை பயின்றார்**
**"ராஜா" என்ற புதிய பெயர் சூட்டப்பட்டது**

எல்லா வாத்தியங்களையும் வாசிக்கத் தெரிந்தவரும், பல இசைக் கலைஞர்களை உருவாக்கியவருமான தன்ராஜ் மாஸ்டரிடம் இளையராஜா இசை பயின்றார்.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

நாடக அரங்கேற்றம்

"திருச்சியில் நான் இசை அமைத்த நாடகமான ஓ.ஏ.கே. தேவரின் "மாசற்ற மனம்" அரங்கேறிய பின், சென்னைக்குப் புறப்பட்டோம்.

அப்போது, திருமதி கமலா அவர்களிடம், "கர்நாடக இசை அல்லது வெஸ்டர்ன் (மேற்கத்திய) இசை கற்றுக் கொடுக்க யாராவது இருந்தால் சொல்லுங்கள். நான் கற்றுக்கொள்ள வேண்டும்" என்றேன்.

"கர்நாடக சங்கீதம் கற்றுக் கொடுக்கும் யாரையும் எனக்குத் தெரியாது. மேற்கத்திய இசை கற்றுத்தரும் மாஸ்டர் ஒருவர் இருக்கிறார். அவருடைய மாணவர் ஒருவரை எனக்கு தெரியும். அவரிடம் சொல்லி உங்களை அழைத்துப் போகச் சொல்கிறேன்" என்றார், கமலா.

தன்ராஜ் மாஸ்டர்

அடுத்த நாள், நடிகர் டி.எஸ்.பாலையா அவர்களின் மூத்த மகன் சாய்பாபா (எம்.எஸ்.வி.யிடம் கிட்டார் வாசிப்பவர்) என் ரூமிற்கு வந்தார். கமலா அவர்கள் சொன்னதன் பேரில் வந்திருப்பதாகச் சொன்னார். இசையில் புகழ் பெற்ற மாஸ்டர் தன்ராஜிடம் அழைத்துப் போவதாகக் கூறினார்.

அவசரம் அவசரமாக உடை மாற்றிக்கொண்டு அவருடன் புறப்பட்டேன். மைலாப்பூர் சாயிலாட்ஜ் 13–ம் நெம்பர் அறையில், பியானா மற்றும் பல இசைக் கருவிகள், இசை பற்றிய புத்தகங்களுடன் தன்ராஜ் மாஸ்டர் இருந்தார். இரண்டு மூன்று மாணவர்களுக்கு கிட்டாரில் பாடம் நடத்திக் கொண்டிருந்தார்.

சிறிது நேரத்தில், மாணவர்கள் எல்லோரும் சென்ற பிறகு, என்னை மாஸ்டருக்கு அறிமுகம் செய்து வைத்தார், சாய்பாபா.

"இரண்டு நாள் கழித்து, காலை பத்து மணிக்கு வரச்சொல். பாடத்தை ஆரம்பிக்கலாம். வரும்போது, ஒரு நோட்டுப் புத்தகம், ஊதுபத்தி, தேங்காய், பூ, பழம், வெற்றிலைப்பாக்கு வாங்கிவர வேண்டும்" என்று சாயிபாபாவிடம் தன்ராஜ் மாஸ்டர் கூறினார்.

'சரி' என்று கூறிவிட்டு, நானும், சாய்பாபாவும் அங்கிருந்து புறப்பட்டோம்.

நான் ரூமுக்குச் சென்றதும், பாரதி, பாஸ்கர் இருவரிடமும் நடந்ததைக் கூறி, "இனி இசை கற்பதற்கான பீஸ், நமது பட்ஜெட்டில் சேருகிறது. அதற்கு வேண்டிய நிதி ஒதுக்க வேண்டியது தலைவர்களின் பொறுப்பு" என்றேன், சிரித்துக்கொண்டே.

பாடம் தொடங்கும் நாள் வந்தது. நோட்டுப்புத்தகம், பூ, தேங்காய் – பழம், ஊதுபத்தி, கற்பூரம் எல்லாம் வாங்கிக்கொண்டேன். குருதட்சணையாக பணம் வைக்க வேண்டும் என்று சாய்பாபா கூறியிருந்ததால், தட்டில் 25 ரூபாய் வைத்து, மாஸ்டரிடம் கொடுத்தேன்.

பெயர் மாற்றம்

தேங்காய் உடைத்து கற்பூரம் ஏற்றி சாமி கும்பிட்டவுடன், “உன் பெயர் என்ன?” என்று கேட்டார், மாஸ்டர்.

“ராஜையா” என்றேன்.

“அதென்ன ராஜையா! இன்று முதல் உன் பெயர் ராஜா!” என்றார், தன்ராஜ் மாஸ்டர்.

பெயர் மாற்றத்தை இவ்வாறு வெகு எளிதாகச் செய்துவிட்டார்.

பிறகு நோட்டுப் புத்தகத்தை திறந்து, “7” என்ற எண்ணை, பட்டையடிக்கும் ஒரு பேனாவால் பச்சை மையில் எழுதினார். அதன்பின் ஏழுசுரங்களை எழுதிக் காட்டினார்.

என் முதல் ஆசானின் கால்களைத் தொட்டு வணங்கினேன். அப்போது, என்னை அறியாது என் சுயமரியாதைக் கொள்கை விலகிவிட்டிருந்தது.

சரி; மேலே என்ன சொல்லப் போகிறார் என்று ஆவலோடு காத்திருந்தேன். அந்த நேரத்தில் வேறு சில மாணவர்கள் வந்துவிட்டார்கள்.

மாஸ்டர் என்னைப் பார்த்தார்.

“இன்றைக்கு என்ன கிழமை?”

“வியாழன்!”

சரி; நீ போய்விட்டு, ஞாயிற்றுக்கிழமை வா!” என்றவர், சற்று யோசித்துவிட்டு, “வேண்டாம். ஞாயிற்றுக்கிழமை ரொம்பக் கூட்டமாக இருக்கும். திங்கட்கிழமை வந்துவிடு!” என்றார்.

‘அடடா! இன்னும் நமக்கு நேரம் வரவில்லை போலிருக்கிறதே!’ என்றபடி திரும்பினேன்.

அவர் கூறியபடி திங்கட்கிழமை போனேன். ‘இன்றைக்காவது நிறைய பாடம் எடுப்பார்’ என்று எதிர்பார்த்தேன்.

ஆனால் அன்றைக்கும் அரை மணி நேரம்தான். மீண்டும் அடுத்த வாரம் வருமாறு சொன்னார்.

“சார்! எனக்கு ஒரு வேலையும் இல்லை. நிறைய கற்றுக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறேன். தினமும் வருகிறேனே!” என்றேன்.

“ஊகூம். அது ரொம்ப கஷ்டம். தினமும் ஒவ்வொரு வாத்தியத்திற்கும் நிறைய மாணவர்கள் வருகிறார்கள். அவர்களுக்கு இடையில், உனக்கு மட்டும் தினமும் பாடம் எடுக்க முடியுமா? .... நான் பிறகு யோசித்துச் சொல்கிறேன்!”

“சார்! நான் எவ்வளவு சம்பளம் கொடுக்க வேண்டும் என்று நீங்கள் சொல்லவில்லையே!”

“உன்னால் எவ்வளவு கொடுக்க முடியும்?”

“மாதம் 25 ரூபாய்?”

“சரி! சரி!”

– இவ்வாறு கூறிய மாஸ்டர் பிறகு என்ன நினைத்தாரோ! “சரி நீ வேண்டுமானால் தினமும் வந்து போ! பாடத்திற்காக அல்ல. சும்மா, எனக்கு வேண்டிய வேலைகளைச் செய்யவேண்டும். சம்மதமா?” என்று கேட்டார்.

“ஓ! சம்மதம் சார்!” என்றேன்.

பொதுவாக, சினிமா உலகில் உள்ள எந்த இசைக் கலைஞரிடமும், “யாரிடம் பாடம் கற்றுக்கொண்டாய்?” என்று கேட்டால், “தன்ராஜ் மாஸ்டரிடம்!” என்றுதான் கூறுவார்கள். அவ்வளவு திறமை பெற்றவர். அவர் பெயரைச் சொல்லாதவர்கள் எவரும், எந்த இசை அமைப்பாளர் குழுவிலும் இடம் பெறமுடியாது.

“மங்கம்மா சபதம்”, “சந்திரலேகா” முதலான ஜெமினியின் படங்களின் வாத்தியக் குழுவில் முக்கிய இடம் வகித்தவர்.

தன்ராஜ் மாஸ்டரிடம் வயலின், கிட்டார், பியானோ, ஹார்மோனியம், புல்லாங்குழல், பேஸ் கிட்டார், அக்கார்டின் முதலான வாத்தியங்களை கற்றுக்கொள்ள பல மாணவர்கள் வருவார்கள். எனக்குப்பாடம் இல்லாத நேரத்தில்கூட இவர்கள் பயிற்சி பெறுவதைப் பார்த்து, அந்தந்த வாத்தியங்களின் தனித்தன்மையைத் தெரிந்து கொண்டேன்.

ஒருநாள், நானும், மாஸ்டரும் மட்டும் இருந்தோம்.

“நீ ஹார்மோனியம் வாசிப்பேன் என்று சொன்னாய் அல்லவா? எங்கே, இந்த பியானோவில் ஏதாவது வாசி!” என்று கூறினார், மாஸ்டர்.

எனக்கு ஒரு நிமிடம் ஷாக். என்றாலும், அவர் இல்லாத நேரங்களில் சில சினிமாப் பாடல்களை பியானோவில் பிராக்டிஸ் செய்து வைத்திருந்தேன். எனவே கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, எம்.எஸ்.வி. அவர்கள் இசை அமைத்திருந்த “என்ன என்ன வார்த்தைகளோ...” என்ற பாடலை பியானோவில் வாசித்தேன்.

நான் வாசித்துக்கொண்டிருந்தபோதே சில மாணவர்கள் வந்துவிட்டார்கள். வாயைத் திறந்தபடி, ஆச்சரியத்துடன் என்னைப் பார்த்தார்கள்.

அவர்கள் முக பாவத்தை கவனித்த மாஸ்டர், அவர்கள் என் வாசிப்பை ரசிக்கிறார்கள் என்பதை கண்டு கொண்டார். அந்த மாணவர்களோ, என்னை

மாஸ்டருக்கு வேண்டியவன் என்றும், அதனால்தான் சினிமாப்பாடல்களை எல்லாம் சொல்லித் தந்திருக்கிறார் என்று நினைத்தார்கள்.

**ஜி.கே.வெங்கடேசுடன் அறிமுகம்**
**பி.சுசீலா பாடல் பதிவை நேரில் பார்த்தார்**

பிரபல இசை அமைப்பாளர் ஜி.கே.வெங்கடேஷ் இசை அமைக்கும்போது, அவரிடம் இளையராஜாவை தன்ராஜ் மாஸ்டர் அறிமுகப்படுத்தினார்.

இந்த நிகழ்ச்சி இளையராஜாவின் வாழ்க்கைப்பாதையில் முக்கிய மைல் கல்லாக அமைந்தது.

ஜி.கே.வெங்கடேஷ் அழைப்பு

தன்ராஜ் மாஸ்டர் சொல்லியபடி பியானோவில் சினிமா பாடலை இளையராஜா வாசித்துக்காட்டியதும், அங்கு இசை பயில வந்த மாணவர்கள் இளையராஜாவுக்கு நண்பர்களாகி விட்டார்கள்.

இந்நிலையில் ஒருநாள், மாஸ்டர் தன்ராஜுக்கு இசை அமைப்பாளர் ஜி.கே.வெங்கடேஷ் ஓர் அழைப்பு அனுப்பினார். ஒரு பாடலுக்கு "ஆர்கன்" வாத்தியத்தை வாசிக்குமாறு கேட்டுக்கொண்டார்.

அப்போதைய அனுபவம் பற்றி இளையராஜா கூறியதாவது:–

"மறுநாள் காலை 7 மணிக்கு கால்ஷீட். முந்தின நாளே மாஸ்டர் என்னை அழைத்து, "டேய், ராஜா! நாளைக்கு நீதான் என் கூட வரவேண்டும். காலை 6 மணிக்கெல்லாம் வந்துவிடு" என்றார்.

அதன்படி, காலை 6 மணிக்கு சாய் லாட்ஜுக்கு சென்றேன். சிறிய ஆர்கனை, டாக்சியில் ஏற்றினேன்.

சரியாக 7 மணிக்கு நானும் மாஸ்டரும் பரணி ஸ்டூடியோவுக்குச் சென்றோம். அப்போது அங்கே யாரும் வரவில்லை.

அருகே உள்ள ஒரு டீக்கடைக்குச் சென்று, தோசையும், வடையும், காபியும் சாப்பிட்டு விட்டு வந்தோம்.

ஒன்பது மணிக்கு ஜி.கே.வெங்கடேஷ் வந்தார். ஆர்மோனியத்துடன் உட்கார்ந்து, பக்கத்தில் ஒருவர் தபேலா வாசிக்க, அன்றைக்குப் பதிவு செய்யவேண்டிய பாடலைப் பாடினார். பாடலின் ஸ்வரங்களை, வயலின் வாசிக்கும் இரண்டு மூன்று பேருக்கு உதவியாளர் ஸ்ரீராமுலு நாயுடு சொன்னார்.

மாஸ்டரைப் பார்த்து ஜி.கே.வெங்கடேஷ், "இது கதாநாயகி கிருஷ்ணஜெயந்தியன்று பாடுகிற பாடல். இதற்குப் பின்னணியாக ஆர்கன் இசை வந்தால் நன்றாக இருக்கும்" என்றார்.

மாஸ்டர் என்னிடம் ஒரு நோட்டைக் கொடுத்து, "டேய்! அந்த ஸ்வரத்தை அப்படியே எழுதிக்கொள்" என்றார்.

"சார்! எனக்கு ஸ்வரம் எல்லாம் தெரியாதே!" என்றேன்.

“அட! அவர் சொல்வதை அப்படியே எழுது!” என்றார்.

அதன்படி எழுதினேன்.

அடுத்து, பாடலின் இடையே வரும் ‘பேக்ரவுண்ட் மியூசிக்’ (“பி.ஜி.எம்”) போடப்பட்டது. இப்படியாக, முழுப்பாடலையும் உருவாக்கி, ரிகர்சல் செய்து, 10–30 மணிக்கெல்லாம் பாடல் பதிவுக்குத் தயாராகி விட்டார்கள்.

பி.சுசீலா வருகை

சரியாக 10–30 மணிக்கு பி.சுசீலா அம்மா வந்தார்கள். பாடலை எழுதிக் கொண்டார்கள்.

தபேலா, டோலக், கிட்டார் சகிதமாக, பாடலை சுசீலாவுக்கு ஜி.கே.வி. சொல்லிக் கொடுத்தார்.

இதையெல்லாம், தூரத்தில் இருந்து பார்த்துக் கொண் டிருந்தேன்.

பாடலைப் பதிவு செய்வதற்கான ஏற்பாடுகள் துரிதமாக நடந்தன. வாத்தியங்களை தனித்தனியாக வாசிக்க வைத்துப் பார்த்து, யார் யார் எவ்வளவு தூரத்தில் உட்கார வேண்டும் என்று சவுண்ட் என்ஜினீயர் கூறினார்.

பிறகு, சுசீலா அம்மாவுடன் ரிகர்சல்கள் நடந்தன.

12–30 மணிக்கு, தேங்காயில் கற்பூரம் வைத்து கொளுத்த, பாடல் பதிவு தொடங்கியது.

பகல் 1–30க்கு பாடல் பதிவு முடிவடைந்தது.

எம்.எஸ்.வி.யின் இசை பாணி வேறு. ஜி.கே.வி.யின் பாணி வேறு.

எம்.எஸ்.வி.யிடம் ஜி.கே.வி. உதவியாளராக இருந்து விட்டு, “நெஞ்சில் ஓர் ஆலயம்” படத்துடன் தனியாக பிரிந்து, இசை அமைப்பாளர் ஆனவர்.

அறிமுகம்

ஜி.கே.வி. வெளியே வந்ததும், அவரிடம் என்னை மாஸ்டர் அறிமுகப்படுத்தினார்.

“இவர் பெயர் ராஜா! என்னுடைய ஸ்டூடண்ட். மியூசிக் டைரக்டர்!” என்றார்.

“மியூசிக் டைரக்டர்” என்று அறிமுகப்படுத்தியதும் எனக்குத் தூக்கிவாரிப்போட்டது. ஜி.கே.வி.க்கு வணக்கம் செலுத்தினேன்.

அவர் மாஸ்டரைப் பார்த்து, “சரி சார்! இவரை என்கிட்டே அனுப்புங்க. ஒரு ஆறு மாதம் இருக்கட்டும். அப்புறம் பாருங்க!” என்று கூறியபடி, விடை பெற்றுக்கொண்டார்.

டாக்சியில் நானும், மாஸ்டரும் அங்கிருந்து புறப்பட்டோம். “டேய்! உன்னை அறிமுகப்படுத்தியபோது, ‘எங்கிட்டே மியூசிக் கத்துக்கறான்’ என்றுதான் சொல்ல

நினைத்தேன். ஆனா, 'இவர் ஒரு மியூசிக் டைரக்டர்' என்று என்னையும் அறியாமல் வாயில் வந்துச்சுடா!' என்றார், மாஸ்டர்.

'அப்படியே பலிக்கட்டும் சார்!' என்றேன்.

இவ்வாறு இளையராஜா கூறினார்.

**இளையராஜாவின் திறமை:**
**ஜி.கே.வெங்கடேஷ் வியப்பு!**

இசை அமைப்பின்போது, இளையராஜாவிடம் இருந்த திறமை, ஞாபகசக்தி ஆகியவற்றைக் கண்டு ஜி.கே.வெங்கடேஷ் வியப்படைந்தார்.

பல்வேறு வாத்தியங்களை இசைக்க, தன்ராஜ் மாஸ்டரிடம் இளையராஜா பயிற்சி பெற்று வந்த காலக்கட்டம் அது.

அப்போது நடந்த நிகழ்ச்சி பற்றி இளையராஜா கூறியதாவது:—

ஜி.கே.வி. அழைப்பு

"ஒருநாள் ஜி.கே.வெங்கடேஷிடம் இருந்து ஒருவர் வந்தார். இசை 'கம்போஸ்' செய்ய என்னை அழைத்து வருமாறு ஜி.கே.வி. கூறியிருப்பதாக, அவர் தன்ராஜ் மாஸ்டரிடம் கூறினார்.

மாஸ்டர் என்னைப் பார்த்து, "கோடம்பாக்கம் போறியா?" என்று கேட்டார்.

"நீங்க போகச்சொன்னா போகிறேன் சார்!" என்றேன்.

"அங்கே போனா, மியூசிக் போயிடும். உருப்பட மாட்டானுங்க!" என்று கூறிய மாஸ்டர் "உன்னை அப்படி நினைக்கவில்லை. போய் வா!" என்றார்.

அவர் முழு மனதுடன் என்னை வாழ்த்தி அனுப்ப வேண்டும் என்று நினைத்தேன். "பாடல் பதிவு நடந்த அன்றைக்கு, என்னை மியூசிக் டைரக்டர் என்று ஜி.கே.வி.க்கு அறிமுகம் செய்து வைத்தீர்கள். அதனால்தான் என்னை அவர் அழைத்திருக்கிறார்" என்றேன்.

"சரி, போயிட்டு வா!" என்றார், மாஸ்டர்.

ஆழ்வார்பேட்டையில் உள்ள ஒரு படக்கம்பெனிக்கு என்னை அழைத்துச் சென்றார்கள். அங்கே ஜி.கே.வெங்கடேஷ், 'தபேலா' கன்னையா, தயாரிப்பாளரும் டைரக்டருமான பகவான்துரை ஆகியோர் இருந்தனர்.

ராஜ்குமாரின் படம்

ஆபீஸ் நடுவில், ஒரு ஜமுக்காளத்தில் ஹார்மோனியம், தபேலாவுடன் நாங்கள் உட்கார்ந்திருந்தோம். ராஜ்குமார் நடிக்கும் "கோவாவில் சி.ஐ.டி. 999" என்ற கன்னடப்படத்தில் வரும் பாடலுக்கான காட்சியை டைரக்டர் விவரித்தார்.

"ட்யூனை கம்போஸ் செய்து வையுங்கள். எங்களுக்கு வேலை இருக்கிறது. மாலையில் வந்து டியூனை கேட்கிறோம்" என்று கூறிவிட்டு டைரக்டர் போய்விட்டார்.

பாடலை ஜி.கே.வெங்கடேஷ் கம்போஸ் செய்யத் தொடங்கியபோது, "ஸ்வரத்தை நோட்ஸ் எழுதிக்கோ!" என்று என்னிடம் கூறினார்.

"ஸ்வரம் எல்லாம் எனக்குத் தெரியாது சார்!" என்றேன்.

“பின்னே எப்படி ஆர்மோனியம் வாசிச்சே?” என்று கேட்டார், ஜி.கே.வி.

“அதெல்லாம் மனப்பாடம் செஞ்சது” என்றேன்.

“காதடியா?” என்று கேட்டார், ஜி.கே.வி.

(ஸ்வரம் தெரியாமல், காதில் கேட்பதை வைத்து வாசித்தால், அதற்குப் பெயர் “காதடி”)

“இப்படியெல்லாம் வாத்தியம் இல்லாமல் நீ வரவேண்டாம். மாஸ்டர் ரூமில் இருந்து கிட்டார் எடுத்து வா!” என்று ஜி.கே.வி. கூறினார்.

கிட்டார் வாசித்து ஏற்கனவே எனக்குக் கொஞ்சம் பழக்கம் இருந்ததால், மதியம் மாஸ்டர் ரூமில் இருந்த கிட்டார்களில் ஒன்றை, மாஸ்டரிடம் கேட்டு வாங்கி வந்தேன். ஜி.கே.வி. முன் போய் நின்றேன்.

“டேய்! நீ ஸ்வரம் எல்லாம் எழுதவில்லை என்றால், நான் கம்போஸ் பண்ணினதை நீ எப்படி திரும்ப எனக்குச் சொல்ல முடியும்?” என்று ஜி.கே.வி. கேட்டார்.

“சார்! எனக்கு ட்யூனை இரண்டு தடவை கேட்டா மனப்பாடம் ஆயிடும். அப்படியே திரும்பச் சொல்லிடுவேன்!” என்றேன்.

“அதெல்லாம் சரிப்படாது!” என்று கூறிய ஜி.கே.வி., பிறகு “சரி. பார்க்கலாம்” என்று சொல்லிவிட்டு, ட்யூன்களை கம்போஸ் செய்யத் தொடங்கினார். கிடுகிடுவென்று, பத்து ட்யூன்களை கம்போஸ் செய்து விட்டார்.

அதற்குள் டைரக்டர் பகவான்துரை வந்துவிட்டார். “வெங்கடேஷ்! ட்யூன்களைப் போடுங்கள், கேட்போம்!” என்றார்.

“முதல் ட்யூன் எது?” என்று என்னிடம் கேட்டார், ஜி.கே.வி.

நான் பாடினேன். உடனே அதை ஞாபகப்படுத்திக்கொண்டு ஜி.கே.வி. பாடிக்காட்டினார்.

“இரண்டாவது ட்யூன்?” என்று ஜி.கே.வி. கேட்க, அதைப் பாடினேன்.

இப்படியே மூன்றாவது, நான்காவது என்று, பத்து ட்யூன்களையும் நான் ஞாபகத்தைக்கொண்டே பாடிக்காட்டினேன். ஜி.கே.வி.க்கு ஒரே ஆச்சரியம்! தபேலா கன்னையாவைப் பார்த்து, “என்னடா இவன்!” என்று சொல்லிவிட்டு, என்னைப் பார்த்து, “நீ என்ன, டேப் ரிக்கார்டரா?” என்று கேட்டார்.

சிறிய டேப் ரிக்கார்டர் வராத காலம் அது.

ஜி.கே.வி. ஆச்சரியம் தீராதவராக பகவான் துரையைப் பார்த்து, “துரை! இந்தப் பையனைப் பாருங்க!” என்றார்.

“ஆமாம், ஆமாம். ஆச்சரியமாகத்தான் இருக்கு!” என்றார், பகவான் துரை.

அவர் கன்னடக்காரராக இருந்தாலும் தெளிவாகத் தமிழில் பேசினார்.

“வெங்கடேஷ்! இது நம் படத்தில் நீச்சல் குளத்தில் ஒரு பெண் நீச்சல் உடையில் பாடுகிற பாட்டு! நீங்கள் மூன்றாவதாக போட்டிருக்கும் ட்யூன் ரொம்ப நல்லா இருக்கு...” என்று பகவான் துரை கூற, “அப்ப, அதையே வச்சுக்கலாம்” என்றார், ஜி.கே.வெங்கடேஷ்.

பிறகு அவர் என்னிடம், “நீ இப்படியே காலத்தை ஓட்டிவிடலாம் என்று நினைக்காதே. நீதான் இந்தப் பாடலுக்கு உரிய ஸ்வரங்களை வாத்தியம் வாசிப்பவர்களுக்கு சொல்லணும்” என்றார்.

அன்றிரவு எனக்கு தூக்கம் வரவில்லை. ‘இங்கேதான் ட்யூன் தொடங்குகிறது. இதுதான் ஸட்ஜமாக இருக்க வேண்டும். இதுதான் ரி...க...ம...ப...த..நி... என்று, ஒவ்வொரு ஸ்வரமாகத் தேடிக் கண்டுபிடித்து, அதை நோட்டுப் புத்தகத்தில் எழுதி வைத்தேன்.

எல்லாம் சரியாக இருந்தது.

பிறகு பாடலை எல்.ஆர்.ஈஸ்வரி பாட, கோல்டன் ஸ்டுடியோவில் ரெக்கார்டிங் நடந்தது.”

இவ் வாறு இளையராஜா கூறினார்.

**புட்டண்ணாவிடம் உதவி டைரக்டர் ஆனார் பாரதிராஜா**
**இளையராஜா வெளியிட்ட தகவல்கள்**

நடிகராக விரும்பிய பாரதி ராஜாவுக்கு, திடீரென்று டைரக்ஷன் மீது நாட்டம் ஏற்பட்டது. பிரபல கன்னட டைரக்டர் புட்டண்ணாவிடம் உதவி டைரக்டர் ஆனார்.

அல்லி நகரத்தைச் சேர்ந்தவரான பாரதிராஜா, இளையராஜாவின் ஊரான பண்ணைபுரத்துக்கு மலேரியா தடுப்பு அதிகாரியாக வந்தபோது, நண்பர்கள் ஆனார்கள்.

பாரதிராஜாவுக்கும் சினிமா கனவு உண்டு. டைரக்டர் ஆக வேண்டும் என்றல்ல; நடிகர் ஆக வேண்டும் என்பதுதான் ஆசை!

சிவாஜி கணேசனின் நடிப்பை அணு அணுவாக ரசித்த பாரதிராஜா, சிவாஜி போலவே பெரிய நடிகராக வேண்டும் என்று விரும்பினார்.

சென்னைக்கு வந்தார்

இதன் காரணமாக வேலையை விட்டுவிட்டு சென்னைக்கு வந்தார்.

சென்னையில், பெட்ரோல் பங்க் ஒன்றில் வேலை பார்த்தார். பின்னர் மவுண்ட் ரோட்டில் (இன்றைய அண்ணா சாலை) உள்ள 'பயோனியர் மெட்ராஸ்' என்ற மோட்டார் கம்பெனியில் நண்பர் ஒருவர் முயற்சியால் வேலைக்கு சேர்ந்தார். பாரதிராஜா, இளையராஜா, பாஸ்கர், கங்கை அமரன் மூவரும் ஒரே அறையில்தான் தங்கியிருந்தனர்.

பாரதிராஜாவுக்கு அப்போது சம்பளம் 120 ரூபாய். அதில் 30 ரூபாய் ரூம் வாடகை. மீதி இருந்த 90 ரூபாயில் சாப்பாடு, பஸ், சினிமா, சிகரெட் செலவுகள்!

டைரக்ஷனில் நாட்டம்

இந்த சமயத்தில், பாரதிராஜாவுக்கு நடிப்பின் மீதான மோகம் குறைந்து, டைரக்ஷன் மீது நாட்டம் ஏற்பட்டது.

ஒரு நாள், ஜெய்சங்கர் படத்தை போஸ்டரில் பார்த்து விட்டு, அறைக்கு திரும்பிய பாரதிராஜா, கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டார். பிறகு, பாஸ்கரைப் பார்த்து, "டேய்! இந்த ஜெய்க்கு கண்ணே சரி இல்லையே! அவர் எல்லாம் நடிக்கும்போது நான் ஏன் நடிக்கக்கூடாது?" என்று கேட்டார்.

"நடிக்கக்கூடாது என்று யார் சொன்னது? உனக்கு மூக்கு கொஞ்சம் பெரிசு! நடிப்பிலே பேர் வந்துட்டா ஜனங்கள் ஒத்துக்குவாங்க! ஜெய்யை ஒத்துக்கிட்டவங்க, உன்னை ஒத்துக்க மாட் டாங்களா!" என்று ஐஸ் வைத்துப் பேசினார், பாஸ்கர்.

இதற்குப் பிறகு, புட்டண்ணா கனகல் எடுத்த "சரபஞ்சரா" என்ற கன்னடப் படத்தை ராஜகுமாரி தியேட்டரில் (இப்போது ஷாப்பிங் சென்டர்) பார்த்த பாரதிராஜா, அப்படியே பிரமித்துப் போய்விட்டார். டைரக்டர் ஆக வேண்டும் என்ற ஆசைக்கு வித்தூன்றிய படம் இதுதான்.

“ஆகா! புட்டண்ணா, எப்படி படம் எடுத்திருக்கிறார்! உதவி டைரக்டரா சேர்ந்தா இவரிடம்தான் சேர வேண்டும்” என்று கூறியபடி

இருந்தார்.இதற்குப் பின் என்ன நடந்தது என்பது பற்றி இளையராஜா கூறியதாவது:–

“டைரக்டராக வேண்டும் என்ற நோக்கத்திற்கு பாரதிராஜா மாறிவிட்டார் என்று தெரிந்தது. யாராவது பாரதிராஜாவை புட்டண்ணாவிடம் சேர்த்து விட மாட்டார்களா என்று நினைத்தேன்.

ஒரு நாள் ஜி.கே.வெங்கடேஷ் இசை அமைத்துக் கொண்டிருந்தபோது, ‘சரபஞ்சரா’ படம் பற்றி பேச்சு வந்தது. புட்டண்ணாவை எல்லோரும் புகழ்ந்து கொண்டிருந்தார்கள்.

“அவன் யாரு தெரியுமா? நம்ம பையன்!” என்றார், ஜி.கே.வி.

ஜி.கே.வி.யுடன் பாஸ்கருக்கு அறிமுகம் உண்டு. அவர் மூலமாக ஜி.கே.வி.யிடம் சொல்லிப் பார்க்கலாம் என்று நினைத்தேன்.

விஷயத்தை பாஸ்கரிடம் சொன்னேன். அவரும், “சரி; முயற்சிப்போம்” என்றார்.

ஒரு நாள் நானும், பாஸ்கரும் ஜி.கே.வி.யிடம் போனோம். “என்ன விஷயம் பாஸ்கர்?” என்று ஜி.கே.வி. கேட்டார்.

“எங்க பாரதிராஜாவுக்கு புட்டண்ணா கிட்டே அசிஸ்டென்டாக வேலை பார்க்க ஆசை. நீங்க அவரிடம் கொஞ்சம் சொன்னா நல்லா இருக்கும்ண்ணே!” என்றார், பாஸ்கர்.

“அது யாருடா பாரதி?” என்று ஜி.கே.வி. கேட்க, “எங்க சித்தப்பா பையன்! அண்ணன் முறை வேண்டும்! என்று கூறி சமாளித்தோம்.

“சரி. நாளை காலை அவனை கூட்டிக் கொண்டு வா!” என்று பாஸ்கரைப் பார்த்துச் சொன்னார், ஜி.கே.வி.

குருவுடன் சந்திப்பு

மறுநாள் பாஸ்கரும், பாரதிராஜாவும் ஜி.கே.வி.யிடம் போனார்கள். “ஒரு டாக்சி பிடித்து வா!” என்று ஜி.கே.வி. சொல்ல, பாஸ்கர் ஒரு டாக்சியை கொண்டு வந்தார். மூவரும் டாக்சியில் புறப்பட்டனர்.

மந்தைவெளி பஸ் ஸ்டாண்டு அருகே, டாக்சியை ஜி.கே.வி. நிறுத்த சொன்னார். “ஒரு மாலை வாங்கிக் கொண்டு வா!”

என்றார்.பாரதிராஜாவும், பாஸ்கரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். “என்ன, காசில்லையா?” என்று கேட்ட ஜி.கே.வி. அவரே பணம் கொடுத்து மாலை வாங்கினார். ஆழ்வார்பேட்டை சி.ஐ.டி. காலனிக்கு சென்ற டாக்சி, புட்டண்ணா வீட்டு முன் போய் நின்றது.

பாஸ்கர், பாரதிராஜா இருவரையும் அழைத்துக் கொண்டு, ஜி.கே.வெங்கடேஷ்

உள்ளே சென்றார்.

ஹாலில் புட்டண்ணா உட்கார்ந்திருந்தார். ஜி.கே.வி.யை பார்த்ததும், “இது ஏனு குருக்களே! நீவே ஏளி இருபருதல்லா, நானே நிம்மள்ள காணு பேக்கு எந்தித்தேனு” (‘இது என்ன குருவே! நீங்களே சொல்லியிருந்தா, நானே வந்திருப்பேனே! நானே உங்களைப் பார்க்க வேண்டும் என்று இருந்தேன்’) என்றார்.

உடனே ஜி.கே.வி, “டேய் பாரதி! மாலையைப் போட்டு நமஸ்காரம் பண்ணிக்கோ” என்றார்.

பாரதிராஜா, புட்டண்ணாவுக்கு மாலை அணிவித்து விட்டு, காலைத் தொட்டு வணங்கினார். “அடடா! இதெல்லாம் எதுக்கு?” என்றார், புட்டண்ணா.

“இருக்கட்டும், இருக்கட்டும்! இவன் நமக்குத் தெரிந்த பையன். ரொம்ப நல்லவன். நீ டைரக்ட் செய்த படத்தைப் பார்த்து விட்டு, உன் மேலே பைத்தியமாகி விட்டான். உன்கிட்டே அசிஸ்டென்டா சேர ஆசைப்படுகிறான்” என்றார், ஜி.கே.வி.

“சரி! குருக்களே! நீங்க சொல்லிட்ட பிறகு வேறு என்ன!” என்று கூறிய புட்டண்ணா, பாரதிராஜாவை நோக்கித் திரும்பி, “நாளைக்கு ஜெமினி ஸ்டுடியோவுக்கு வந்துடு!” என்றார்.

சரித்திர சுருக்கம்

நாங்கள் திரும்பி வரும்போது, “புட்டண்ணா உங்களிடம் இவ்வளவு மரியாதை வைத்திருக்கிறாரே. என்ன காரணம்?” என்று ஜி.கே.வி.யிடம் பாரதிராஜா கேட்டார்.

“ஜூபிடர் ஸ்டுடியோவிலும், சி.ஆர்.சுப்பராமனிடமும், எஸ்.வி.வெங்கட்ராமனிடமும் வீணை வாசித்த பின், எம்.எஸ்.வி.யிடம் நான் இசை கண்டக்ட் செய்து கொண்டிருந்த காலக்கட்டத்தில், எம்.எஸ்.வி.யிடம் தபலா வாசிக்கும் கோபால கிருஷ்ணனும், நானும் ஒரு ரூமில் தங்கியிருந்தோம். எங்களுக்கு சமையலுக்கு ஒரு ஆள் தேவைப்பட்டது. கர்நாடகாவில் இருந்து ஒருவர் வந்தார். அவர் நன்றாக கவிதை எழுதக்கூடியவர். எங்களுக்குத் தேவையானதை எல்லாம் சமைத்து வைப்பார். அவர்தான் பிரபாகர் சாஸ்திரி. பிற்காலத்தில், கன்னடப் படவுலகின் தலைசிறந்த பாடல் ஆசிரியர் ஆனார். அவர் தம்பிதான் புட்டண்ணா” என்று ஒரு பெரிய சரித்திரத்தை நான்கு வாக்கியங்களில் அடக்கிச் சொன்னார், ஜி.கே.வி.

ஒரு பெரிய ஆலமரத்தில், எங்கிருந்தோ பறவைகள் வந்து, ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு விதமாக தங்கி மகிழ்ந்திருந்து, வாழ்ந்திருந்து போவது போல், எங்கெங்கிருந்தோ வருகிற கலைஞர்கள் சினிமாவாம் ஆலமரத்தில் தங்கியிருந்து வாழ்ந்ததும் அல்லாமல் விழுதுகளால் வேரோடி இருக்கிறார்களே! நினைக்கவே அதிசயமாக இருந்தது.

புட்டண்ணா கூறியபடி, மறுநாள் ஜெமினி ஸ்டுடியோவுக்கு பாரதிராஜா போனார், அசிஸ்டென்ட் டைரக்டராகி விட்டார்.

நேரம் வந்துவிட்டால், நடக்க வேண்டியது தானாக நடக்கும் என்பதற்கு இது ஓர் உதாரணம்”

இவ்வாறு இளையராஜா கூறினார்.

**டைட்டிலில் யார் பெயர் முதலில் வரும்?**
**இளையராஜாவிடம் பாரதிராஜா போட்ட பந்தயம்**

“வெள்ளித்திரையில் யாருடைய பெயர் முதலில் வருகிறது, பார்ப்போமா?” என்று இளையராஜாவிடம் பாரதிராஜா பந்தயம் போட்டார். பந்தயத்தில் அவர் ஜெயித்தார்.

இசை அமைப்பாளர் ஜி.கே.வெங்கடேஷிடம் இளையராஜா அசிஸ்டென்டாக இருந்தபோது, புட்டண்ணாவிடம் பாரதிராஜா உதவி இயக்குனராகச் சேர்ந்தார்.

ஒருநாள் இளையராஜா வும், பாரதிராஜாவும் பேசிக் கொண்டிருந்த போது, “சினிமாவில் டைட்டில் கார்டில் யார் பெயர் முதலில் வருகிறது என்று பார்ப் போமா?” என்று பாரதிராஜா சிரித்துக் கொண்டே கேட்டார். இளையராஜாவும் சிரித்தபடி, “பார்த்து விடுவோம்” என்றார்.

இருளும் ஒளியும்

புட்டண்ணா இயக்கிய ‘இருளும் ஒளியும்” படத்தில், உதவி டைரக்டராக பாரதிராஜா பணியாற்றினார். வாணிஸ்ரீ கதாநாயகியாக இரட்டை வேடத்தில் நடித்த படம் இது.

இந்தப் படத்தில்தான் “உதவி டைரக்டர்– பாரதிராஜா’ என்று டைட்டில் கார்டு போடப்பட்டது.

படம் வெளிவந்ததும், “பார்த்தியா! பந்தயத்தில் நான்தான் ஜெயித்து விட்டேன்” என்று இளையராஜாவிடம் கூறினார், பாரதிராஜா.

“ஓகே பாரதி” என்றார், இளையராஜா.

காரணம், அவர் கவனம் எல்லாம் இசையை முழுவதுமாக கற்றறிய வேண்டும் என்பதில் இருந்ததே தவிர,தன் பெயர் திரையில் வரவேண்டும் என்பதில் இல்லை!

“இருளும் ஒளியும்” ஒரு சிறந்த படமாக இருந்தும், புட்டண்ணா தமிழ்நாட்டில் புகழ் பெறவில்லை. ஆனால், கன்னடப் படஉலகில் ஈடு இணையற்ற டைரக்டராக விளங்கினார். எனவே அவர் கவனம் கன்னடப்பட உலகத்தை நோக்கித் திரும்பியது.

தமிழ்ப்பட உலகில் புகழ் பெற விரும்பிய பாரதிராஜா, டைரக்டர் கிருஷ்ணன் நாயரிடம் சிலகாலம் உதவி டைரக்டராக பணியாற்றினார். ஏ.ஜெகநாதன் டைரக்ட் செய்த “அதிர்ஷ்டம் அழைக்கிறது” படத்துக்கும் அவர்தான் துணை டைரக்டர். தேங்காய் சீனிவாசனும், சவுகார் ஜானகியும் நடித்த படம் இது.

சொந்த வீடு

இந்த சமயத்தில், கே.ஆர்.ஜி. “சொந்த வீடு” என்ற படத்தை தயாரிக்க தீர்மானித்தார். டைரக்ஷன் பொறுப்பை பாரதிராஜாவுக்கு வழங்கினார்.

கதை ஆர்.செல்வராஜ்; இசை: வி.குமார் என்று முடிவாயிற்று.

ஜி.கே.வெங்கடேசிடம் ‘பிசி’யாக இருந்தாலும், இசையை கற்றுக் கொள்வதை

லட்சியமாகக் கொண்டிருந்தாலும், இளையராஜா இதுபற்றி கவலைப்படவில்லை.

"பாரதியைப் பார்த்தாயா! படம் கிடைத்ததும், உன்னை மறந்திட்டான்" என்று இளையராஜாவிடம் செல்வராஜ் சொன்னார். அதை இளையராஜா காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை.

என்ன காரணத்தினாலோ, "சொந்த வீடு" படம் நின்று விட்டது.

"16 வயதினிலே" என்ற திரைக் காவியம் பாரதிராஜாவின் முதல் படமாக அமைய வேண்டும் என்றும், அதன் இசை அமைப்பாளராக இளையராஜா பணியாற்ற வேண்டும் என்பதும் காலத்தின் கட்டாயம் என்பது, அன்று யாருக்கும் தெரியாது!

அம்மா வந்தார்

இந்த சமயத்தில், ஊரில் இருந்த இளையராஜாவின் அம்மா, பிள்ளைகளைப் பார்க்க வேண்டும், அவர்களுக்கு தன் கையால் சமைத்துப்போட வேண்டும் என்று விரும்பி சென்னைக்கு வந்து விட்டார்.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

"எங்களைப் பிரிந்திருப்பது பொறுக்க மாட்டாமல், அம்மா சென்னைக்குக் கிளம்பி வந்து விட்டார்கள். "எம் புள்ளைங்க இங்கே கஷ்டப்படும்போது, நான் எதுக்கு அங்கே இருக்கணும்? உங்களுக்கு சமைத்தாவது போட வேண்டும் என்றுதான் வந்து விட்டேன்" என்றார்கள்."இந்த வயதில் நீங்க ஏன் கஷ்டப்படணும்?" என்று கேட்டால், "அடப் போங்கப்பா! சமைக்கிறது ஒரு கஷ்டமா?" என்று அடித்துப் பேசி விடுவார்கள்.

1969–ல் இருந்து நான்கு வருடம் அம்மா சமையல்தான்.

பாரதியின் தாய் எனக்கும் அம்மா போல. என் அம்மாவும் பாரதிக்குத் தாய்தான். கிடைக்கிற காசை அவர்களிடம் கொடுத்து விடுவோம். எல்லாவற்றையும் அம்மாதான் பார்த்துக் கொள்வார்கள்.

ஒருமுறை அம்மாவிடம் 200 ரூபாய் கொடுத்தோம். அவர்கள் சென்னை வந்த பிறகு நாங்கள் கொடுத்த பெரிய தொகை. அம்மா மிகவும் மகிழ்ந்து, வெற்றிலைப் பையில் அந்தப் பணத்தை வைத்து, இடுப்பில் செருகிக் கொண்டார்கள். எல்டாம்ஸ் ரோடு மார்க்கெட்டிங் காய்கறி வாங்கப் புறப்பட்டார்கள்.

ஒரு கடையில் ஏதோ காய்கறி வாங்கியிருக்கிறார்கள். அதை கவனித்த எவனோ பணப்பையை திருடி விட்டான்.

பை களவு போனது தெரியாமல், அம்மா அடுத்த கடையில் சாமான்களை வாங்கி விட்டு இடுப்பைத் தொட்டுப் பார்த்தால், பையை காணவில்லை. சாமான்களை அங்கேயே வைத்து விட்டு, வந்த வழியில் பை எங்காவது கிடக்கிறதா என்று நடந்தபடி தேடிப் பார்த்திருக்கிறார்கள். அது கிடைக்காமல், வாங்கிய சாமான்களைத் திருப்பிக் கொடுத்து விட்டு, வெறும் கையுடன் வீட்டுக்கு திரும்பி னார்கள்.

"எம் புள்ளைங்க பாடுபட்டு சேர்த்த பணத்தை, இந்த படுபாவி தொலைச்சுட்டேனே!" என்று வாய் விட்டு புலம்பினார்கள்.

“சரிம்மா... போகட்டும், விடுங்க! இதுக்கு ஏன் வருத்தப்படறீங்க?” என்று தேற்றினோம்.

வருத்தத்தை மாற்றிக் கொள்ளவோ, குறைத்துக் கொள்ளவோ அவர்களால் முடியவில்லை. வெந்து போன மனதுடன், வீட்டிலிருந்த அரிசி, வெங்காயம், புளி, மி ளகாயை வைத்து, சாதம் வடித்தார்கள்.

வெங்காயத்தை தண்ணீரில் நறுக்கி, பச்சை மிளகாயை சிறு துண்டுகளாக நறுக்கி, உப்பு போட்டு, சாதத்தில் ஊற்றிச் சாப்பிடக்கொடுத்தார்கள்.

உண்மையில் சொல்கிறேன், இன்று வரை அது போன்ற ருசியான சாப்பாட்டை நாங்கள் சாப்பிட்டதில்லை.”

இவ்வாறு இளையராஜா கூறினார்.

**லண்டன் இசைக்கல்லூரி நடத்திய பரீட்சையில் இளையராஜா வெற்றி மாஸ்டர் தன்ராஜ் பாராட்டு**

லண்டன் இசைக் கல்லூரி நடத்திய இசை பற்றிய தேர்வில் இளையராஜா வெற்றி பெற்று சாதனை படைத்தார்.

இசை அமைப்பாளர் ஜி.கே.வெங்கடேஷிடம் உதவியாள ராக இளையராஜா பணியாற்றிக் கொண்டிருந்த போது, இசை நிகழ்ச்சிகளும் நடத்தி வந்தார். நாடகங்களுக்கும் இசை அமைத்தார்.

இப்படி, இரவு – பகலாக வேலை பார்த்து வந்ததால், தன்ராஜ் மாஸ்டரை பார்க்க முடியாமல் போய் விட்டது.

ஏற்கனவே அவர் கூறிய படி, இசையில் பட்டம் பெற லண்டன் 'டிரினிட்டி காலேஜ் ஆப் மியூசிக்" நடத்தும் பரீட்சையில் பங்கு கொள்ள இளையராஜா பணம் கட்டியிருந்தார்.

மாஸ்டரிடம் சபதம்

ஒருநாள் சற்று ஓய்வு கிடைத்த போது, தன்ராஜ் மாஸ்டரை பார்க்கச் சென்றார். தன்னை விட்டு விட்டு கோடம்பாக்கத்துக்குச் சென்றதாலும், இடையில் தன்னைப் பார்க்க வராததாலும் இளையராஜா மீது மாஸ்டர் கோபம் கொண்டிருந்தார்.

இளையராஜாவை பார்த்ததுமே, அவர் கண்களில் அனல் வீசியது. "நான் அப்போதே சொன்னேன், கோடம்பாக்கம் போனால் உருப்பட மாட்டாய் என்று! அப்படியே ஆயிடுச்சு பார்!" என்றார்.

"இல்லை சார். கொஞ்சம் ரெக்கார்டிங் வேலை இருந்தது. இனிமேல் கரெக்டா வந்துடறேன், சார்" என்று இளையராஜா கூறினார்.

"இனிமே என்ன வர்றது? உனக்கு இனிமேல் நான் பாடம் எடுக்கப் போறதில்லே. நீ போ! ரெக்கார்ட்டிங்குக்கே போ!" என்று கோபத்துடன் கூறினார், மாஸ்டர்.

இளையராஜா எவ்வளவோ சமாதானப் படுத்திப் பார்த்தார், ஆனால் மாஸ்டரின் கோபம் தணியவில்லை. "நான் சொன்னா சொன்னதுதான்" என்றார், கண்டிப்புடன்.

"சார்! நீங்க சொல்லித்தான் லண்டன் டிரினிட்டி காலேஜ் பரீட்சைக்கு பணம் கட்டினேன், எட்டாவது கிரேட் பிராக்டிக்கல், நான்காவது கிரேட் தியரி இரண்டுக்கும் நான் தயாராக வேண்டும்..."

"ஆமாம்...பணம் கட்டச் சொன்னேன். இனிமேல் என்னால் முடியாது. இனி நீ இங்கு வரவும் வேண்டாம்"

– கண்டிப்புடன் கூறினார், மாஸ்டர்.

இளையராஜா ஓர் முடிவுக்கு வந்தார்.

"சார்! நான் இங்கே மீண்டும் ஒருநாள் வருவேன். பரீட்சைகளில் நல்ல முறையில்

தேறி, ஹானர்ஸ் சர்டிபிகேட்டுடன் வந்து உங்களைப் பார்ப்பேன்" என்று சபதம் செய்வது போல் கூறி விட்டு, அங்கிருந்து புறப்பட்டார்.

நன்றாக உழைப்பவர்கள் சபதம் செய்தால் என்ன நடக்குமோ அதுதான் இளையராஜாவுக்கும் நடந்தது. சதாசர்வ காலமும் இசை பற்றிய படிப்பு... பயிற்சி!

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:—

"பாரதிராஜாவிடம் ஒரு சபதம், மாஸ்டரிடம் ஒரு சபதம்.

திரையில் என் பெயரை பாரதிக்கு முன்னால் கொண்டு வந்து விட வேண்டும் என்று நான் எந்த முயற்சியும் செய்யவில்லை. ஆனால் இசை தேர்வுக்கு பணம் கட்டியதற்காகவாவது எப்படியும் தேறி விட வேண்டும் என்று வைராக்கியம் கொண்டேன்.

பிராக்டிக்கல் பரீட்சை பற்றி நான் கவலைப்படவில்லை. கிட்டாருக்கு என்னென்ன பாடங்கள் உண்டோ அதையெல்லாம் பிராக்டிஸ் செய்து விடலாம்.ஆனால் இந்த 'தியரி'க்கு (எழுத்துப் பரீட்சை) என்ன செய்வது முக்கியப் பிரச்சினை— ஆங்கிலம்!

தேர்வு சம்பந்தப்பட்ட புத்தகங்கள் எல்லாவற்றையும் வாங்கி, நானாகப் படிக்க ஆரம்பித்தேன்.

புத்தகத்தை திறப்பேன். முதல் வாக்கியத்தை வாசிப்பேன். புரியாது. மீண்டும் வாசிப்பேன். ஓரிரு வார்த்தைகள் — ஏற்கனவே தெரிந்த வார்த்தைகள் மட்டும் புரியும். அந்த வார்த்தைகளின் அர்த்தத்தை மட்டும் மனதில் கொண்டு, 'இந்த வாக்கியம் எதைச் சொல்ல எழுதப்பட்டிருக்கிறது' என்று யோசிப்பேன்.

மூன்றாவது முறை வாசிப்பேன். யாரும் விளக்காமலேயே, நன்றாக அர்த்தம் மனதில் வந்து விடும்.

'சரியாக இருக்கிறதா?' என்று அடுத்தவரிடம் கேட்டு சரிபார்த்தால், 100க்கு 100 சரியாக இருக்கும்!

தெரியாத புது வார்த்தைகளுக்கு அர்த்தத்தை யாரிடமா வது கேட்டுத் தெரிந்து கொள்வேன்.

ரெக்கார்டிங் இல்லாத நேரங்களில், பரீட்சைக்கு உரிய இசையை, மனப்பாடமாக பிராக்டிஸ் செய்வேன். எப்போதும் பேப்பரும் கையுமாக இருக்கும் நான், ஓய்வு நேரத்தில் எழுதிக் கொண்டே இருப்பேன். இசைக் குழுவினர் எல்லோரும் என்னை வியப்புடன் வேடிக்கை பார்ப்பார்கள்.பரீட்சை வந்தது. பிராக்டிக்கல் 8வது கிரேடு, தியரி 4வது கிரேடு ஆகிய இரண்டிலும் 85 மார்க் எடுத்து "ஹானர்ஸ்" தகுதியுடன் தேறினேன்.

"யூ ஆர் கிரேட்!

இந்த சான்றிதழுடன் தன்ராஜ் மாஸ்டரை போய்ப் பார்த்தேன். சான்றிதழைக் காட்டினேன்.

அதைப் பார்த்த மாஸ்டர், வியப்புடன் என்னை நோக்கினார். "ராஜா! ரியலி யூ ஆர்

கிரேட்!" என்றார்.

அதுமட்டுமல்ல "இசையில் இன்னும் எவ்வளவோ இருக்கு. நீ எப்போது வேண்டுமானாலும் வரலாம்" என்று திறந்த மனதோடு அழைப்பு விடுத்தார்.ஆயினும் மறுபடியும் மாஸ்டரிடம் போக எனக்கு மனம் வரவில்லை."

**இளையராஜா—எஸ்.பி.பாலசுப்பிரமணியம்**
**பயங்கர விபத்தில் உயிர் தப்பினார்கள்**
**40 அடி பள்ளத்தில் கார் உருண்டது**

இசை நிகழ்ச்சிக்குப் போய் விட்டு காரில் திரும்பும்போது, இளையராஜாவும், எஸ்.பி.பாலசுப்பிரமணியமும் பயங்கர விபத்தில் சிக்கி, அதிசயமாக உயிர் தப்பினார்கள்.

இசை அமைப்பாளர் ஜி.கே.வெங்கடேஷ் இசைக் குழுவில் இளையராஜா பணியாற்றிய அதே கால கட்டத்தில், எஸ்.பி.பாலசுப்பிரமணியம் பின்னணி பாடகராக சினிமா உலகில் அடியெடுத்து வைத்தார்.

இளையராஜாவும், பாலசுப்பிரமணியமும் நெருங்கிய நண்பர்கள் ஆனார்கள்.

அந்த "மலரும் நினைவுகள்" பற்றி இளையராஜா கூறியதாவது:—

காதல் டூயட்

நாராயணன் என்னும் டைரக்டர் இயக்கிய "ஸ்ரீதேவி" என்ற படத்துக்கு ஜி.கே.வி. இசை அமைத்தார்.

எஸ்.பி.பாலசுப்பிரமணியம் எனக்கு நல்ல நண்பன் ஆகியிருந்த நேரம் அது. அவனுக்கு எப்படியாவது ஒரு பாடல் வாங்கிக் கொடுத்து விட வேண்டும் என்று நினைத்திருந்தேன். இது, எஸ்.பி.பி.க்குத் தெரியாது.

ஸ்ரீதேவி படத்தில் ஒரு "டூயட்" பாடல் வந்தது. பழைய கதாநாயகர்களுக்கு என்று இல்லாமல், ஒரு இளம் ஜோடி பாடுவது போல் அமைந்தது.

நாராயண் ரெட்டி இதை எழுதினார். "ராசானு ப்ரேம லேக்க லென்னு" (எத்தனை எத்தனை காதல் கடிதம் எழுதினேன்) என்று தொடங்கியது அந்தப்பாடல்.

ட்யூன் கம்போசிங் முடிந்தது. யாரைப் பாட வைக்கலாம் என்று டைரக்டருடன் பேசிக் கொண்டிருந்தபோது, நான் ஜி.கே.வி.யிடம், "அண்ணே! இந்த பாட்டை நம்ம பாலுவுக்கு கொடுக்கலாம்ண்ணே!" என்றேன்.

"ஏன்டா! அவன் நன்றாகப் பாடுவானா? இந்த பாட்டுக்கு சரியாக இருக்குமா!" என்று கேட்டார், ஜி.கே.வி.

"அண்ணே! இது இளம் ஜோடி பாடும் பாட்டு! இதற்கு ஏன் பழைய பாடகர்? பாலு, தெலுங்கில் கோதண்டபாணியிடம் பாடியிருக்கிறான். தமிழில் எம்.ஜி.ஆருக்குப் பாடிய 'ஆயிரம் நிலவே வா' பாடல் பெரிய ஹிட்!"

"எம்.ஜி.ஆருக்கு யார் பாடினாலும் ஹிட்டாகும்!"

"அப்போ சீர்காழி போன்றவர்களுக்கு ஏன் பெரிய வாய்ப்புகள் கிடைக்கவில்லை? பாலு புதுசு. இந்த பாடலுக்கு ரொம்பப் பொருத்தமாக இருப்பான். 'எத்தனை காதல் கடிதம் எழுதினேன்' என்று, வயதாகி விட்ட கண்டசாலவோ, பி.பி.சீனிவாசோ பாடினால் பொருத்தமாக இருக்குமா?" என்றேன்.

“சரி. அவனை ரிகர்சலுக்கு வரச் சொல்!” என்றார், ஜி.கே.வி.

பாலு ரிகர்சலுக்கு வந்து, சொல்லிக் கொடுத்ததை உடனே நன்றாகப் பாடி விட்டான். அவனுக்கு இருந்த திறமையைக் கண்டு கொண்டார், ஜி.கே.வி.

“ஓ.கே.! பாலுவே பாடட்டும்” என்று அவர் சொல்ல, பாடல் பதிவாகி, படம் வெற்றி பெற்று பாடலும் ஹிட் ஆனது.

கச்சேரி

சினிமாவில் பாட எஸ்.பி.பி.க்கு நிறைய வாய்ப்புகள் வந்ததுடன், கச்சேரிகளும் நிறைய வந்தன. ஆந்திராவில் நிறைய கச்சேரிகளுக்கு போக வேண்டியிருக்கும். அப்போது எனக்கு ஜி.கே.வி.யின் இசை அமைப்பில் பின்னணி இசை சேர்ப்பு வேலை இருக்கும்.

எஸ்.பி.பி.யுடன் ஒரு கச்சேரிக்கு போனால் எனக்கு சம்பளமாக 75 ரூபாய் கிடைக்கும். ஜி.கே.வி.யின் இசை அமைப்புக்கு போனால், ஒரு நாளைக்கு 150 ரூபாய் வீதம் நான்கு நாளைக்கு 600 ரூபாய் கிடைக்கும்.

இதை மனதில் வைத்து, “நான் வர முடியாது” என்று பாலுவிடம் சொன்னால், “நீ இல்லாமல் நான் எப்படி கச்சேரி செய்வேன்? யாரை வைத்து என்ன செய்ய முடியும்?” என்றெல்லாம் பேசி, எப்படியாவது என்னை அழைத்துச் சென்று விடுவான்.

எழுபத்தைந்து ரூபாய்க்காக, அறுநூறு ரூபாய்களை இழந்தது எத்தனை முறை என்று கணக்கு இல்லை. இது பாலுவுக்கு இப்போது ஞாபகம் இருக்குமோ என்னமோ! பாலுவை எந்த அளவுக்கு நேசித்தேன் என்பதற்காக இதைச் சொல்ல வந்தேனே தவிர, வேறொன்றும் இல்லை.

கார் பயணம்

ஒரு முறை எஸ்.பி.பி.க்கு பொள்ளாச்சியில் கச்சேரி. அடுத்த நாள் எனக்கு இசைக் கல்லூரியின் தேர்வு இருந்தது. அதனால் நான் வரவில்லை என்று கூறிவிட்டேன்.

ஆனால், நான் கட்டாயம் வரவேண்டும் என்று எஸ்.பி.பி. வற்புறுத்தினான். ‘கச்சேரி முடிந்ததும், நான் காரில் உன்னை இங்கே கொண்டு வந்து சேர்த்து விடுகிறேன்’ என்றான்.

‘சரி’ என்று கச்சேரிக்குப் புறப்பட்டேன்.

இரவு கச்சேரி முடிந்ததும், பாலுவின் காரில், ஏறிக் கொண்டேன். ‘கிளாரினட்’ பல்லாராவ், ‘தபேலா’ மது ஆகியோரும் எங்களுடன் புறப்பட்டார்கள். பாலுவே காரை ஓட்டினான். சேலம், உளுந்தூர்பேட்டை வழியாக வருவதற்கு பதிலாக, சேலம், அரூர், தர்மபுரி என்று தவறான பாதையில் காரை ஓட்டியதால், வேலூர் வந்து சேருவதற்கே காலை ஐந்து மணி ஆகி விட்டது. விடியப் போகும் நேரம்.

‘அப்பாடா! வேலூர் வந்து விட்டோம். ஏழு மணிக்குள் சென்னையை அடைந்து விடலாம்’ எண்ணினேன்.

காரை ஓட்டி வந்த பாலு, டிரைவரை ஓட்டச் சொல்லி விட்டு பின் சீட்டுக்கு வந்து, என் மடியில் தலை வைத்துத் தூங்க ஆரம்பித்தான்.

பள்ளத்தில் உருண்டது

டிரைவர் சீட்டுக்குப் பின்புறம் நான் இருந்தேன். வேலூர் அவுட்டருக்கு கார் வந்தபோது, ஒரு குழந்தை திடீரென்று காரின் குறுக்கே ஓடிவந்தது. டிரைவர் காரை ஒடிக்க, கார் மணலில் சறுக்கி, 40 அடி பள்ளத்தில் உருண்டது.

தூங்கிக் கொண்டு வந்த நான் விழித்துப் பார்த்தால், கார் உருண்டு கொண்டிருக்கிறது!

நான் தயாராகி விட்டேன். 'இதோ இப்போது அடி விடும்', 'இதோ இப்போது!' என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்த வேளையில், முன்னால் 'ஐயோ, அம்மா!' என்று இருவர் கூச்சலிடும் சப்தம் கேட்டது. 'சரி; முன்னால் இரண்டு பேர் காலி' என்று நினைத்தேன்.

கார், தலை கீழாக பள்ளத்தில் போய் விழுந்தது. சக்கரங்கள் நாலும் மேலே பார்த்தபடி நின்றன! சீட் மட்டும் மாறாமல், நாங்கள் உட்கார்ந்த நிலையில், அப்படியே இருந்தது! முன்புறக் கண்ணாடி வழியாக ரத்தம் வழிவது தெரிந்தது.

டிரைவர் பக்கத்து கண்ணாடி கதவு திறந்திருந்தது. அதன் வழியாக ஒவ்வொருவராக வெளியே வந்தோம். பார்த்தால், ஒரு பாலத்துக்குக் கீழே இருக்கிறோம் என்பது தெரிந்தது. மேலே, பாலத்தில் பெரிய கூட்டம்! அவர்கள், "என்ன ஆச்சு, என்ன ஆச்சு?" என்று கத்தினார்கள். என்ன ஆச்சு என்று எங்களுக்கே தெரியவில்லை!

கார் கண்ணாடியில் வழிந்தது ரத்தம் அல்ல, என்ஜின் ஆயில். ரோடு புழுதி காரணமாக, ரத்தக் கலரில் வழிந்திருக்கிறது.

"செத்துப் பிழைத்தவன்டா!"

எப்படியோ தப்பிப் பிழைத்தோம். மேலே வந்ததும், "நான் செத்துப் பிழைச்சவன்டா!" என்று சத்தம் போட்டுப் பாடினேன்!

உண்மையில், நானும், மற்றவர்களும் அந்த விபத்தில் உயிர் தப்பியது ஆச்சரியம்தான். நான், கார் கண்ணாடியில் தலையை சாய்த்து வைத்து தூங்கிக் கொண்டுதான் பயணம் செய்தேன். அந்தக் கண்ணாடி முழுவதும் நொறுங்கிப் போயிருந்தது. எனக்கு ஒரு சிறு காயம் கூட ஏற்படவில்லை.

பின்னர், வேலூர் பஸ் அதிபர் ஒருவர் எங்களை தனது வண்டியில் சென்னையில் கொண்டு வந்து விட்டார்.

இந்த விபத்து காரணமாக, அப்போது இசை தேர்வு எழுத முடியாமல் போயிற்று. பிறகுதான் எழுதினேன்"

**இளையராஜா வாழ்க்கைப்பாதை**
**கை நழுவிப்போன இசை அமைப்பு வாய்ப்புகள்!**

ஜி.கே.வெங்கடேஷிடம் உதவியாளராகப் பணியாற்றிய காலக் கட்டத்தில், இசை அமைப்பாளர் ஆவதற்கான வாய்ப்புகள், இளையராஜாவை தேடி வந்தன. கடைசி நேரத்தில் அவை கை நழுவிப்போயின.

இதன் காரணமாக "அன்லக்கி" (ராசி இல்லாதவர்) என்று பெயர் பெற்றார்!

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:-

இரவு - பகலாக வேலை

"ஜி.கே.வி.க்கு நிறைய படங்கள் வந்தன. இரவு இரண்டு மணி வரை கம்போசிங் நடக்கும். காலை 7 மணிக்கு பாடல் பதிவு! இப்படி எத்தனையோ மாதங்கள் நடந்துள்ளன.

சென்னையில், இசைக் கருவிகள் விற்பனை செய்யும் கடைக்கு, வெளிநாட்டுக் கிட்டார் வந்திருந்தது. விலை 150 ரூபாய். கொஞ்சம் கொஞ்சமாக பணம் சேர்த்து அதை வாங்கி விட்டேன்.

பாடல்களுக்கு நானும், பிலிப்சும் கிட்டார் வாசிப்போம். பாட்டின் இடையே சில சமயம் பிலிப்ஸ் வாசிப்பார்.

அவர் கைக்கு நல்ல நாதம் அமைந்திருந்தது. அதே கிட்டாரை வேறு யாராவது வாசித்தால் அந்த நாதம் வராது. சில பேருடைய கைவாகு அப்படி. அதேபோல் வாத்தியமும் அவர்களுக்கு படிய வேண்டும். குதிரைகளில் எல்லோரும் சவாரி செய்து விட முடியாது. அது சிலருக்குத்தான் கட்டுப்படும்.

அதே போலத்தான் வாத்தியங்களும், இசையும், பாட்டும், கலைகளும், பண்பும், ஒழுக்கமும், தவமும்!

நாம் தவமிருப்பதல்ல; தவம் நமக்கு அமைய வேண்டும்.

ஜி.கே.வெங்கடேஷ் இசை அமைக்கும் படங்களின் டைரக்டர்கள் வந்து, கதையைச் சொல்லி, பாடல்கள் இடம் பெற வேண்டிய இடங்களையும் சொல்லி விட்டுச் செல்வார்கள். அந்த வேலை முடியும் வரை என் பணியைச் செய்து விட்டு, வீட்டுக்கு வருவேன். பாடலின் அந்த கட்டத்திற்கு நான் இசை அமைக்க வேண்டியிருந்தால் என்ன செய்வேன் என்று யோசிப்பேன். இசை அமைத்துப் பார்ப்பேன். பாடலை கம்போஸ் செய்து பார்ப்பேன். இப்படியே, நிறைய டியூன்கள் சேர்ந்து விட்டன!

தேடி வந்த வாய்ப்பு

பாஸ்கர், பகல் நேரத்தில் சும்மா இருக்க முடியாது. வழக்கமாக சினிமா கம்பெனிகளுக்குப் போய் வருவார். அதில், டைரக்டர் டி.என்.பாலுவுக்கு உதவியாளராக இருந்த முருகானந்தம், பாஸ்கருக்கு பழக்கமாகி நண்பர் ஆனார். அவர் சொந்தமாகப் படம் தயாரிக்க போவதாகவும், அதற்கு நாம்தான் இசை

அமைக்க வேண்டும் என்றும் பாஸ்கர் சொன்னார்.

படக்கம்பெனிக்கு "வலம்புரி மூவீஸ்" என்று பெயர் சூட்டப்பட்டது. ராயப்பேட்டையில் ஆபீசும் திறக்கப்பட்டது.

இசை அமைப்புக்கு அட்வான்சாக ஐந்தாயிரம் ரூபாய் செக்கை, முருகானந்தம் கொடுத்தார். என்னால் நம்பவே முடியவில்லை. அந்தக் காலத்தில் பெரிய இசை அமைப்பாளர்களுக்கு முழு இசை அமைப்புக்கும் ஐந்தாயிரம் ரூபாய்தான் சம்பளம் கொடுத்தார்கள். இவர், அட்வான்சாகவே ஐந்தாயிரம் கொடுக்கிறாரே, பெரிய புரொடியூசர்தான் போலிருக்கு என்று நினைத்துக் கொண்டேன்.

இந்த செக்கை பாங்கியில் போடாமல் நானே வைத்திருந்தேன். ரெக்கார்டிங்கில் வாசிக்கும்போது, வலம்புரி மூவிஸ் கொடுத்த செக்கை நண்பர்களிடம் அவ்வப்போது பெருமையுடன் காட்டுவேன். அவர்களும் ஆச்சரியப்படுவார்கள்.

ஆனால், வலம்புரி மூவிஸ் படம் எடுக்கவில்லை; எடுக்கவும் முடியவில்லை.

இன்னொரு படம்

இதன் பிறகு, இன்னொரு பட அதிபரிடம் பழகி விட்டு பாஸ்கர் வந்தார். அந்தப் படத்திற்கு அடுத்த நாள் ஆழ்வார்பேட்டை ஆனந்த் ஓட்டலில் கம்போசிங் என்று சொன்னார்.

எனக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அடுத்த நாள் ஆனந்த் ஓட்டலுக்குப் போனோம். தயாரிப்பாளர், டைரக்டர், பாடலாசிரியர் சேதுராமன் ஆகியோர் ஓர் அறையில் இருந்தார்கள். டைரக்டர் படத்தின் கதையைச் சொல்லி, "பூஜைக்கு ஒரு காதல் பாட்டை பதிவு செய்யலாம்" என்றார்.

டியூன் கம்போஸ் செய்தேன். டைரக்டருக்கும் பிடித்திருந்தது.

பூஜைக்கு நாள் குறிப்பிடப்பட்டது. பி.சுசீலாவும், எஸ்.பி.பாலசுப்பிரமணியமும் பாடுவதாக முடிவு செய்யப்பட்டது. "பாடல் பதிவுக்கு ஸ்டூடியோ வாடகை, பாடகர்கள் இசைக் குழுவினர் சம்பளம் ஆகியவற்றுக்கு எவ்வளவு பணம் வேண்டும்?" என்று பட அதிபர் கேட்க, அவருக்கு பட்ஜெட் கொடுக்கப்பட்டது.

பாடல் பதிவு நாள். இசைக் குழுவினருடன் ஒத்திகை பார்த்தோம்.

இடையிடையே இசைக் குழுவினர், "பணம் வந்து விட்டதா?" என்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஏனென்றால், காலையில் இருந்தே புரொடக்ஷன் மானேஜர், புரொடியூசர் எவரையுமே காணோம்!

நேரம் ஆகிக் கொண்டிருந்தது. பணம் வந்த பாடில்லை. பட அதிபர் எங்கே போனார் என்று தெரியவில்லை. ஆனந்த் ஓட்டலில் அவர் தங்கியிருந்த ரூம் காலி செய்யப்பட்டிருந்தது!

பாடகர்கள் வருகை

இதற்கிடையே பாடுவதற்கு பி.சுசீலாவும், எஸ்.பி.பாலசுப்பிரமணியமும் வந்து விட்டார்கள். அவர் களுக்கு பாடல் சொல்லிக் கொடுக்கப்பட்டு ஒத்திகை நடந்தது.

பணம் வந்து சேர வில்லை. என்ன செய்வ தென்று ஆலோசித்தோம்.

“இவ்வளவு நேரம் சிரமப்பட்டு, பாடலை உருவாக்கியிருக்கிறோம். பாடலை பதிவு செய்வோம். பணம் கொடுத்த பிறகு அவரிடம் பாடலை கொடுப்போம்” என்று முடிவு செய்து, அதை ஸ்டுடியோவுக்கு தெரிவித்தோம். ஒலிப்பதிவு என்ஜீனியரும் ஒப்புக் கொள்ளவே, பாடல் பதிவாகியது.

ஆனால் இன்று வரை பணமும் வரவில்லை; பட அதிபரும் வரவில்லை.

அதிலிருந்து, இசைக் கலைஞர்கள் மத்தியில் என்னை “அன்லக்கி மியூசிக் டைரக்டர்” (ராசியில்லாத இசை அமைப்பாளர்) என்று குறிப்பிட ஆரம்பித்தார்கள்!”

**"என் மானசீக குரு சி.ஆர்.சுப்பராமன்"**
**இளையராஜா புகழாரம்**

"இளம் வயதிலேயே என் மானசீக குருவாகத் திகழ்ந்தவர் சி.ஆர்.சுப்பராமன்" என்று இளையராஜா கூறினார்.

நாகேஸ்வரராவ்— சாவித்திரி நடித்த "தேவதாஸ்" படத்துக்கு இசை அமைத்தவர், சி.ஆர்.சுப்பராமன்.

எம்.கே.தியாகராஜ பாகவதர்— பானுமதி நடித்த "ராஜமுக்தி", என்.எஸ்.கிருஷ்ணன் டைரக்னில் உருவான லலிதா, பத்மினி, பாலையா நடித்த "மணமகள்", பானுமதி — நாகேஸ்வரராவ் நடித்த "லைலா மஜ்னு" உள்பட ஏராளமான படங்களுக்கு இசை அமைத்தவர் சி.ஆர்.சுப்பராமன்.

அவர் பற்றி இளையராஜா கூறியதாவது:—

"ஏவி.எம். ஸ்டுடி யோவிலும், ஜூபிடர் ஸ்டுடியோவிலும் அவர்களுக்கு என்று இசைக் குழுக்கள் இருந்தன. மற்ற ஸ்டுடியோக்களில் இசைக் கலைஞர்களைத் தனியாக அழைத்துதான் வாசிக்கச் செய்து, பதிவு செய்ய வேண்டும்.

அதெல்லாம் போய் விட்ட காலத்தில் அல்லவா நான் திரை உலகுக்கு வந்தேன்! அந்தக் காலப் பெருமைகளை, அனுபவம் மிக்க பெரியவர்கள் சொல்வது ஒரு பாடமாகவே இருக்கும்.

மானசீக குரு

குறிப்பாக, என் முதல் 'மானசீக குருநாதர்' சி.ஆர்.சுப்பராமன் பின்னணி இசை கம்போஸ் செய்வது அற்புதமான காட்சியாக இருக்கும் என்று அறிந்திருக்கிறேன்.

பின்னணி இசை (ரீரிகார்டிங்) அமைப்பதற்கான காட்சியை சுப்பராமனுக்கு திரையிட்டுக் காட்டுவார்கள். 10 நிமிடம் திரையில் ஓடும் படத்தைப் பார்த்து விட்டால், பியானோ முன் வந்து உட்கார்ந்து விடுவாராம். இரண்டு கைகளாலும் அவர் வாசிக்க, அதை 'நோட்ஸ்' எடுக்க வலது புறம் விசுவநாதனும் ராமமூர்த்தியும் இடது புறம் கோவர்த்தனும், ஸ்ரீராமுலுவும் அமர்ந்து கொண்டு, சுப்பராமன் வாசிக்க வாசிக்க எழுதிக் கொள்வார்களாம்.

எதை எந்த வாத்தியத்திற்கு கொடுக்க வேண்டும் என்று கேட்டு, பிரித்துக் கொடுத்து ரிகர்சல் பார்க்கும்போது, 'ஏய்! இந்த நோட்சை தப்பா கொடுத்தது யாரு? இங்கே வா!' என்று அழைத்து அதை மீண்டும் பியானோவில் வாசித்துக் காட்டி சரி செய்வாரம்.

வாசிப்பதை நோட்ஸ் எழுதுபவர்கள் எல்லோரும் திறமைசாலிகள். அவர்கள் எழுதுவதிலும் தவறு வர, அதை ஞாபகமாய்ச் சரி செய்தார் என்றால், அவருடைய ஞானத்தை என்ன சொல்வது?

முப்பத்தி இரண்டு வயதே வாழ்ந்த அவர், எவருக்கும் இணை இல்லாத மேதை.

மது பாட்டில்

ஆனால் ஆர்மோனிய பெட்டி மீது 'விஸ்கி' பாட்டிலும், சிகரெட் பாக்கெட்டும் இருக்குமாம்!

அன்றைய காலக்கட்டத்தில் மட்டும் அல்ல, சினிமா கலைஞர்களுக்குப் புகழ் வரவர, குடியும், காமவெறியும்தான் உயர்ந்த சுகபோக நிலையாகவும், அதிலேயே சுகித்திருப்பதே நல் வாழ்க்கையாகவும் இருக்கிறது.

சி.ஆர்.சுப்பராமன் இசை அமைத்த பாடல்கள் மிகவும் 'பாப்புலர்' ஆனதால், பொறாமை கொண்டவர்கள் அவரை 'டப்பா மியூசிக் டைரக்டர்' என்று கூறி வந்தார்கள். சினிமா இசையை டப்பா இசை என்று சங்கீத வித்வான்கள் கேலியாகக் கூறுவது அக்கால வழக்கம்.

மணமகள்

கலைவாணர் என்.எஸ். கே.யும், சி.ஆர்.சுப்பராமனும் நல்ல நண்பர்கள். என்.எஸ்.கே.யிடம் சுப்பராமன் இதுபற்றி கூறி வருத்தப்பட, 'கவலைப்படாதே, சுப்பராமா! உன்னுடைய சங்கீத ஞானத்தைக் காட்டுவதற்காகவே ஒரு படம் எடுக்கிறேன்' என்று கூறி, 'மணமகள்' என்ற படத்தைத் தயாரித்தார்.

அதில் அத்தனையும் கர்நாடக சங்கீதப் பாடல்கள். அத்தனை பாடல்களையும் வைரமணிகள் போல் ஒளி வீசும் வண்ணம் இசை அமைத்திருந்தார்.

உடுமலை நாராயண கவி எழுதியிருந்த பாடல்கள் மறக்க முடியாதவை. "எல்லாம் இன்பமயம்" என்ற பாடலில்,

மலையின் அருவியிலே – வளர்
மழலை மொழிதனிலே
நிலவின் ஒளியாலும்
குழலின் இசையாலும்
நீலக்கடல் வீசும் அலையாலுமே!
கலைஞன் சிலையிலும் கவிதைப் பொருளிலும்
கானமா மயிலின் ஆடல் அறுசுவையில்
காதலோடு மனிதனின் புலன் காண்பதெல்லாம் இன்பமயம்!

– சிம்மேந்திர மத்திம ராகத்தில் அமைந்த இந்தப் பாடலை யாரால் மறக்க இயலும்!

மகாகவி பாரதியாரின் "சின்னஞ்சிறு கிளியே" பாடலுக்கு அவர் ராகமாலிகையில் இசை அமைத்தார். உயிரையே கொள்ளைகொள்ளும் உன்னதமான பாடல். இத்தனை காலம் கடந்தும், அதற்கு மேல் இதோ ஒரு ராகமாலிகை என்று யாராலும் சுட்டிக் காட்ட முடியாத அளவுக்கு இசையை அறிந்தவர், சுப்பராமன்.

'டப்பா சங்கீதம்' என்று சங்கீத வித்வான்கள் கூறி வந்த சினிமா சங்கீதத்தை உயர்த்தி, அதை அப்படியே திருப்பிப் போட வைத்தது சி.ஆர்.சுப்பராமனின் இசை. சினிமா பாடலை சங்கீத மேடைக்கு கொண்டு போக வைத்த நிலைமை, சி.ஆர்.சுப்பராமன் காலத்தில்தான் ஏற்பட்டது. இன்றைய இளம் வித்வான்களில் யார் "சின்னஞ்சிறு கிளியே" பாடவில்லை?

சரளமான நடைபோல வந்த பாட்டுக்கு, இத்தனை மகத்துவம்.சி.ஆர்.சுப்பராமனின்

“வர்ணமெட்டால்” வந்தது. அதை யாரும் மறுக்க முடியாது; மறக்கவும் முடியாது.

என் மானசீக குருவே— உம்மை என்றும் வணங்குகிறேன்”

**மலையாளப் படங்கள்**

சில மலையாளப் படங்களில் பணியாற்ற இளையராஜாவுக்கு வாய்ப்பு கிடைத்தது. அதுபற்றி அவர் கூறியதாவது:—

“சில மலையாளப் படங்களுக்கு கிட்டார் வாசிக்க சான்ஸ் வந்தது. “12 பி” பஸ்சில் வடபழனிக்குச் சென்று, ஏவி.எம்.மிலோ, பரணியிலோ, ரேவதியிலோ நடக்கும் ரெக்கார்டிங்குக்கு நடந்து போவேன். முடிந்ததும் கடைசி “12 பி” பஸ்சில் திரும்பி வந்து சேருவேன்.

மலையாள இசை அமைப்பாளர் யாராக இருந்தாலும், பாடல் பதிவின் போது “கண்டக்ட்” செய்பவர் சேகர் அவர்கள்தான். அவர் தன்ராஜ் மாஸ்டரின் மாணவர். அதை விட ஏ.ஆர்.ரஹ்மானின் தந்தை என்று கூறினால் நன்றாகத் தெரியும்.

எல்லா இசை அமைப்பாளர்களுக்கும் “பிஜிஎம்” (பேக்ரவுண்ட் மியூசிக்) சேகர் தான் செய்து கொடுப்பார். மாஸ்டர் தேவராஜனிடம் மட்டும் அவர் “கண்டக்ட்” மட்டும் செய்வார்.

அவர் “பிஜிஎம்” மட்டும் செய்யும் படங்களில் சில இடங்களை குறிப்பிட்டு, “நீ இந்த இடத்தில் வாசித்து விடு” என்பார். எனக்காக கம்போஸ் செய்ய மாட்டார்.

மற்ற அனைவருக்கும் நோட்ஸ் கொடுத்து விட்டு, எனக்கு மட்டும் ஒன்றும் சொல்லாமல், “வாசித்து விடு” என்று சுதந்திரமாக விட்டு விடுகிறாரே, ஏன் என்று யோசிப்பேன். நான் தன்ராஜ் மாஸ்டரின் மாணவன் என்பதால்தான் என்னிடம் இவ்வளவு நம்பிக்கை என்று தெரிந்தது.

ஒத்திகையைப் பார்க்கும் யாராவது இசை அமைப்பாளர்கள், கிட்டாரில் ஏதாவது மாற்ற வேண்டும் என்று என்னிடம் வந்தால், அவரை சேகர் கூப்பிட்டு, “அதெல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. ‘டேக்’கின் போது சரியாக —நன்றாகவே வரும்’ என்று சொல்லி, என் அருகே யாரையும் நெருங்க விடமாட்டார். அவ்வளவு நம்பிக்கை.

அவர் தனியாக இசை அமைத்த எந்த ஒரு படமும் சரியாக அமையவில்லை. அதுபற்றி அவர் வருந்தியும் நான் பார்த்தது இல்லை. தன் தந்தையின் ஆசியால் ரஹ்மான் பெரும் அளவில் பேரும், புகழும் பெற்றார் என்பதில் எனக்கு முழு நம்பிக்கை.”

**பாரதிராஜாவுடன் சென்ற போது ஏற்பட்ட அனுபவம்!**
**"கிளியோ பாட்ரா" படத்தை பார்க்க**

சுமார் 30 ஆண்டுகளுக்கு முன் வெளிவந்த பிரமாண்ட மான ஆங்கிலப்படம் "கிளியோ பாட்ரா". அதைப் பார்க்க பாரதிராஜவுடன் இளையராஜா சென்றார். அப்போது எதிர்பாராத சிக்கலில் மாட்டிக் கொண்டார்கள்.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

"சென்னையில் சபையர் தியேட்டரில் "கிளியோ பாட்ரா" ரிலீஸ் ஆகியிருந்தது. எப்படியாவது அந்தப் படத்தைப் பார்த்து விட வேண்டும் என்று 2 முறை முயற்சி செய்தும், டிக்கெட் கிடைக்காமல் திரும்பி விட் டோம்.

அடுத்து வரும் ஞாயிற்றுக் கிழமை, முன்னதாகவே சென்று 'கியூ'வில் நின்று, டிக்கெட் வாங்கி படத்தைப் பார்த்து விடுவது என்று முடிவு செய்தோம்.

காலை எட்டு மணிக்கே கிளம்பி விட்டோம். பஸ் பிடித்து சபையர் ஸ்டாப்பில் இறங்கினோம். இன்னும் 'கேட்' திறக்கவில்லை.

ஓட்டலில் டிபன்

'சரி, டிபன் சாப்பிட்டு விட்டு வருவோம். நேரம் சரியாக இருக்கும்' என்று தீர்மானித்து, அருகில் உள்ள ஓட்டலுக்கு நடந்து சென்றோம்.

கிளியோ பாட்ரா பார்க்கப் போகிறோம் என்பதால், எல்லோரும் நல்ல மூடில் இருந்தோம். ஜோக் அடித்துக் கொண்டே 'ஆர்டர்' கொடுத்தோம்.

'சரி, சரி! இவ்வளவு ஆர்டர் கொடுத்து விட்டோமே. பணம் குறைந்தால், யாரய்யா மாவாட்டுவது!' என்று கிண்டல் செய்து கொண்டிருந்தோம்.

டிபன் வந்தது. நன்றாகச் சாப்பிட்டோம்.

பில்லை வாங்கிக் கொண்டு, எங்கள் 'நிதி மந்திரி' பாஸ்கர், பேண்ட் பாக்கெட்டில் கையை விட்டார். அவர் முகம் மாறியது.

அதை கவனித்த பாரதி ராஜா, சிரித்துக் கொண்டே, 'டேய்! காசு இல்லேண்ணு நடிக்காதே! போய் பணத்தைக் கொடு!" என்றார்.

பாஸ்கரின் முகம் மாறவில்லை. இறுக்கமாகவே இருந்தது. "யோவ்! காசு இருந்த பேண்ட்டுக்கு பதிலா, வேறு பேண்ட்டை போட்டுக் கொண்டு வந்து விட்டேன்யா!" என்றார்.

கைக்கெடிகாரம்

இப்போது பாரதியின் முகம் சீரியசாக மாறியது. சுற்றும் முற்றும் பார்த்தார். நிறைய கூட்டம். நேராக கேஷியர் உட்கார்ந்திருந்த கல்லாவுக்கு போனார். பாஸ்கரிடம் இருந்த பில்லைப் பிடுங்கி, தான் போட்டிருந்த கைக்கெடிகாரத்தைக் கழற்றி இரண்டையும் கேஷியரிடம் கொடுத்தார்.

“பணத்தை மறந்து வைத்து விட்டு வந்து விட்டோம். இந்த வாட்சை வைத்துக் கொள்ளுங்கள். பணத்தைக் கொடுத்து விட்டு வாங்கிக் கொள்கிறோம்” என்றார்.

கேஷியர் நல்லவர். சரி என்று தலையை ஆட்டினார். வெளியே வந்ததும், பாஸ்கரைத் திட்டிய பாரதி, பணத்தைக் கொண்டு வருமாறு விரட்டினார். அங்கேயே காத்திருந்தோம். சிறிது நேரத்தில் பணம் வந்து சேர்ந்தது.

பணத்தை கேஷி யரிடம் கொடுத்து, கெடிகாரத்தை மீட்டோம். இதற்குள் நேரம் ஆகி விட்டதால் அன்றைக்கும் கிளியோ பாட்ரா படத்தைப் பார்க்க முடியவில்லை.

பின்னர், ஒரு தடவைக்கு மூன்று தடவை கிளியோ பாட்ராவைப் பார்த்தோம்”

இவ்வாறு இளையராஜா கூறினார்.

மெட்டுகளை மனதிலேயே பதிவு செய்து கொண்டு, பின்னர் அதை அப்படியே பாடக்கூடிய அபூர்வ ஆற்றலை சின்ன வயதிலேயே பெற்றிருந்தார், இளையராஜா. இந்த ஆற்றலைக்கண்டு வியந்து போற்றிய ஜி.கே.வெங்கடேஷ், பின்னொரு சமயம் இளையராஜா வாசித்த இசையை ஏற்காமல் கேலி செய்தார்.

இந்த சம்பவம் பற்றி இளையராஜா கூறியதாவது:–

ஜி.கே.வெங்கடேசுடன் புதிய அனுபவம்

“ஒருநாள் ஜி.கே.வி. இசை அமைப்பில் ஒரு கன்னடப்படத்தின் பாடல் பதிவாக இருந்தது.

காலை 7 மணிக்கு, விஜயாவாகினி கார்டனில் ஜி.கே.வி. யுடன் கம்போசிங் குழுவினர் உட்கார்ந் திருந்தோம். பாடலுக்கு முன் தொடங்கும் இசையை கம்போஸ் செய்ய வேண்டும்.

இசைக்குழுவில் இருந்த வைத்தி, முயற்சி செய்து ஒரு இசையைப் போட்டார். அது நன்றாக இல்லை என்று ஜி.கே.வி. சொன்னார்.

பிறகு ஜி.கே.வி. ஏதோ, சொல்ல வாத்தியக் காரர்கள் நோட்ஸ் எடுத்துக் கொண்டு, வாசித்தார்கள். அதுவும் நன்றாக இல்லை என்று கூறி விட்டார்.

இப்படி நேரம் போய்க் கொண்டு இருந்தது. நான், ‘அண்ணா! எனக்கொரு ஐடியா! மியூசிக் கொடுக்கவா?” என்றேன்.

வைத்தியை ஜி.கே.வி. அழைத்தார். “டேய், வைத்தி! நம்ம ராஜா ஏதோ மியூசிக் கொடுக்கிறானாம், போய் கொடுத்து வாசிக்கச் சொல்லு” என்றார்.

நானும் இசைக் குழுவினருக்கு நோட்ஸ் கொடுத்து, வாசிக்கச் செய்து காட்டினேன்.

அதுவும் ஜி.கே.வி.க்கு பிடிக்கவில்லை.

அத்துடன் நிறுத்தியிருக்கலாம். வைத்தியை அழைத்து, “டேய், பாருடா இவனை!” என்று என்னை சுட்டிக் காட்டி சிரித்தார்.

பிறகு, 555 சிகரெட் பாக்கெட்டிலிருந்து ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்து புகைத்தபடியே, “டேய்! இதெல்லாம் பெரிய விஷயம். அவ்வளவு ஈசியா வந்திடுமா? அந்த இடத்துக்கெல்லாம் நீ இன்னும் வரலை!” என்று என்னைப் பார்த்து உரத்தக்குரலில் சொல்லி, சிகரெட் பாக்கெட்டை ஆர்மோனியத்தின் மீது ‘டக்’ கென்று போட்டார்.

இசைக்குழுவினர் எல்லோரும் சிரித்தார்கள். எனக்கு உடம்பே கூனிக் குறுகி கூசியது.

அப்போதே நான் ஓர் முடிவுக்கு வந்தேன். எந்த ஐடியா எனக்குத் தோன்றினாலும், அதை ஜி.கே.வியிடம் சொல்லக்கூடாது; உதவவும் கூடாது. எனக்கு இசை அமைக்க சந்தர்ப்பம் வந்தாலும், உதவிக்காக யாரையும் வைத்துக் கொள்ளக்கூடாது என்றும் தீர்மானித்தேன்.

**இளையராஜாவின் அண்ணன் பாஸ்கருக்கு திருமணம்**
**பம்பாயில் நடந்தது**

இளையராஜாவின் அண்ணன், பாஸ்கரின் திருமணம் பம்பாயில் (தற்போதைய மும்பை) எளிய முறையில் நடந்தது.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

தம்பியின் காதல்

"தம்பி அமர் (கங்கை அமரன்) கலாவை காதலிக்கும் விஷயம், அம்மாவுக்கு தெரிந்து விட்டது. கடைசி பிள்ளை என்ற முறையில், அமர் மீது அம்மாவுக்கு ரொம்பப் பிரியம்.

ஆனால், மூத்தவர்களான பாஸ்கரும், நானும் இருக்கும்போது, எங்களுக்கு முன் அமர் திருமணத்தை எப்படி நடத்துவது என்று அம்மா யோசித்தார்.

என் அக்கா பத்மாவுக்கு பம்பாயில் திருமணமாகியிருந்தது. மாப்பிள்ளை ராஜன், கம்யூனிஸ்டு கட்சியை சேர்ந்தவர். பாஸ்கருக்கு பெண் பார்க்கச் சொல்லி, அவருக்கு அம்மா கடிதம் எழுதியிருந்தார் போலிருக்கிறது. பாஸ்கருக்கு பம்பாயிலேயே பெண் பார்த்து விட்டார்கள்.

பாஸ்கருக்கு திருமணம் என்று தெரிந்ததுமே, பாரதியும், நானும் அவரை கலாட்டா செய்ய ஆரம்பித்து விட்டோம்.

ஜனவரி 26

ஜனவரி 26–ந்தேதி இந்திய குடியரசு தினம். அன்றுதான் பம்பாயில் பாஸ்கருக்குத் திருமணம் என்று முடிவாகியது.

ஜாதகப் பொருத்தம் பார்த்தார்களா, ஜோசியர்கள் நாள் குறித்தார்களா என்றெல்லாம் தெரியவில்லை. சாதாரணமாக, எந்த ஒரு காரியமானாலும், அம்மா ஜோசியம் பார்ப்பது வழக்கம். இதற்கும் ஜோசியம் பார்த்திருப்பார்களோ என்னவோ!

குறிப்பிட்ட நாளுக்கு முன்பாகவே, நான், பாஸ்கர், பாரதி, அம்மா, அமர் எல்லோரும் ரெயில் மூலம் பம்பாய்க்குப் போய்ச் சேர்ந்தோம். அண்ணனும் (பாவலர் வரதராஜன்) வந்து கலந்து கொண்டார்.

தமிழர்கள் வசிக்கும் தாராவியில், குடிசைகள் நிறைந்த பகுதியில், ஒரு வீட்டின் முன் சிறிய பந்தல் போடப்பட்டு இருந்தது. அக்காவின் வீட்டில் உடைகளை மாற்றிக்கொண்டு, கல்யாணத்துக்கு பாஸ்கர் தயாரானார்.

"மாப்பிள்ளை அழைப்பு" ஊர்வலம் நடந்தது. யாரோ சரியாக வாசிக்கத் தெரியாத ஒருவர் நாயனம் வாசித்தார். மேளதாளம் முழங்க, பாஸ்கரை நடக்க வைத்து அழைத்துச் சென்றோம்.

ஒரு சாதாரணப் பந்தல். இரண்டு நாற்காலிகள் போட்டிருந்தார்கள். அதில் மாப்பிள்ளையும், பெண்ணும் உட்கார்ந்தார்கள். சுற்றிலும் கூட்டம்.

பூக்கள் கிடைக்காத பம்பாயில், எப்படியோ இரண்டு சிறிய மாலைகளை தயார் செய்திருந்தார்கள். கெட்டி மேளம் முழங்க, மணமக்கள் மாலை மாற்றிக்கொள்ள, மணமகள் கழுத்தில் மணமகன் தாலி கட்ட, திருமணம் நடந்தேறியது.

‘ரூம்’ பிரச்சினை

திருமணம் முடிந்து சென்னைக்குத் திரும்பினோம். அங்கே ஒரு பிரச்சினை.

எங்கள் வீட்டில் மேற்கு புறம் இருந்த அறையில் பாஸ்கரும், பாரதியும் வழக்கமாகப் படுப்பார்கள். அதை புதுமணத் தம்பதிகளுக்கு ஒதுக்க வேண்டி இருந்தது.

நானும், அமரும் ஹாலில் படுப்பது வழக்கம். பாரதி, எங்களுடன் ஹாலில் படுத்துக் கொள்ளலாம் என்று நினைத்தோம். ஆனால், அது பாரதிக்கு சரியாகத் தோன்றவில்லை. தனியாக வேறு ரூம் பார்த்துக்கொண்டு போக விரும்பினார்.

எது வந்தாலும் ஒன்றாக வாழ்வது என்ற உயர்ந்த நோக்கம் உள்ள நண்பர்களைக்கூட, கால நேரமும், சூழ்நிலைகளும் பிரித்து விடுகிறது அல்லவா?

பக்கத்திலேயே வேறு ரூம் பார்த்துக்கொண்டு பாரதிராஜா போய் விட்டார். சாப்பாட்டிற்கு மட்டும் வீட்டுக்கு வந்து போவார்.

கல்யாணப்பேச்சு

அம்மா அடுத்தபடியாக என் கல்யாணப் பேச்சை எடுத்தார்கள். நான் அதைக்கண்டு கொள்ளாமல், தட்டிக் கழித்து, நான் உண்டு என் வேலை உண்டு என்று போய்க்கொண்டிருந்தேன்.

முன்பே சொன்னது போல், நாள் முழுவதும் ஜி.கே.வி.யின் கம்போசிங் அல்லது ரெக்கார்டிங்கில் இருப்பேன். இரவுதான் வீடு திரும்புவேன்.

இந்தக் காலக்கட்டத்தில், மற்ற இசை அமைப்பாளர்களும் என்னை வாசிக்கக் கூப்பிட்டார்கள். மலையாளத்தில் தேவராஜன் மாஸ்டர், பாபுராஜ், ஏ.டி.உமர், தட்சிணாமூர்த்தி சுவாமி, கன்னடத்தில் விஜயபாஸ்கர், ராஜன் நாகேந்திரா, உபேந்திரகுமார், தெலுங்கில் ராஜேஸ்வரராவ், பெண்டியாலா சீனிவாசன், ராகவலு... இப்படி எல்லோருக்கும் வாசித்துக் கொண்டிருந்தேன்.

கர்நாடிக் இசை கற்பதும், ஜோசப்பிடம் மேற்கத்திய இசை பாடம் கற்பதும் தொடர்ந்து கொண்டிருந்தது. பாடல் பதிவுகளின்போது என்னை உற்சாகமாக வைத்திருந்ததே கர்நாடிக் இசை, மேற்கத்திய இசை ஆகியவற்றைக் கற்றுக்கொண்டிருக்கிறேன் என்ற எண்ணம்தான்.

ஆதலால், கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் எனக்குத் தோன்றவில்லை. கல்யாணம் செய்து கொள்வது, இசை வாழ்க்கைக்கு இடையூறாக ஆனாலும் ஆகிவிடலாம் என்ற எண்ணமும் இருந்தது. எனவே, திருமணத்தைப் பற்றி அக்கறை இல்லாமல் இருந்தேன்.

கடற்கரையில் ‘வாக்கிங்’

மாலையில் கடற்கரை வரை 'வாக்கிங்' போவதாக இருந்தால், நானும், பாரதியும் மட்டும் போவோம். பாஸ்கர் எங்களைப் பார்ப்பார். பாரதி சிரித்துக்கொண்டே, "நாங்கள் எல்லாம் சின்னப் பசங்க. நீ இப்போது குடும்பஸ்தன்! அதனால் எங்கள் கூட வரக்கூடாது!" என்பார்.

பாஸ்கர் பொறுத் துப்பொறுத்துப் பார்த்துவிட்டு, "அட போங்கடா" என்று கூறிவிட்டு சில சமயம் எங்களுடன் வருவார்.

அப்படி அவர் ஒரு நாள் வந்தபோது, "குடியரசு என்றால் என்னய்யா?" என்று பாரதி வேடிக்கையாக கேட்டார்.

"மக்களாட்சி. அதாவது நம்மை நாமே ஆள்வது!" – இது பாஸ்கர்.

"அப்படியானால் அது சுதந்திரம்தானே?"

"ஆமாம். சுதந்திரம்தான்!"

"அப்படியானால், சுதந்திரமாக இருக்க வேண்டிய நாளில் யாராவது கைதாவானா?" என்று சிரித்தபடி கேட்டார், பாரதி.

"ஆமாய்யா! ஜனவரி 26–ந்தேதி குடியரசு தினம் – சுதந்திரமாக இருக்க வேண்டிய நாள். அன்றைக்குப் பார்த்து, எனக்கு கல்யாணம் பண்ணி வச்சு ஜெயில்லே அடைச்சுட்டீங்க!" என்பார் பாஸ்கர்.

"தலையில் எழுதினதை மாத்த முடியுமா பாஸ்கரூ!" என்று சிரிப்பார், பாரதி.

தமிழ்ப்படங்களின் தரம்

பாஸ்கர் எங்களுடன் வராதபோது, நானும் பாரதியும் பல்வேறு விஷயங்களை பேசிவிட்டு வருவோம்.

அப்போது, மத்திய அரசின் "தேசிய திரைப்பட வளர்ச்சிக் கழகத்தின்" (என்.எப்.டி.சி.) உதவியுடன் தயாரிக்கப்பட்டு வந்த "தாகம்" என்ற படத்திற்கு பாரதிராஜா உதவியாளராக வேலை பார்த்து வந்தார்.

உலகின் பல்வேறு நாடுகளிலும் திரைப்படத்துறை எவ்வளவு வளர்ச்சி அடைந்திருக்கின்றன, எவ்வளவு உன்னதமான படங்களை வெளிநாடுகளில் தயாரிக்கிறார்கள், இங்கே அப்படி இல்லையே என்று ஆதங்கத்துடன் பேசி வருந்துவோம்.

உலகத் தரத்துக்கு உயரும் வகையில் தமிழ்ப்படங்கள் வரக்கூடாதா? எம்.ஜி.ஆருக்கும், சிவாஜிக்கும் எவ்வளவு ரசிகர்கள் இருக்கிறார்கள்? இந்த மாதிரி உயர்ந்த படங்களைத் தந்தால் அவர்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்களா என்று ஏங்குவோம்.

ரசிகர்கள் ஏற்றுக்கொள்வார்கள். ஆனால் தயாரித்தால்தானே! தயாரிப்பாளரும், விநியோகஸ்தர்களும் ஒத்துக்கொள்ள வேண்டுமே!

இல்லை; ஒரு நாள் இதெல்லாம் மாறத்தான் போகிறது!

– இப்படியெல்லாம் பேசிக்கொண்டு நடப்போம்.

அதற்குள் நிலா கடலில் இருந்து மேலே வந்து, அதன் நிழல் கடல் பரப்பில் விழ, அது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

**திருமணத்துக்கு இளையராஜா சம்மதம்**
**மணமகள் – முறைப்பெண் ஜீவா**

பாஸ்கர் திருமணத்தைத் தொடர்ந்து, இளையராஜாவைத் திருமணம் செய்து கொள்ளுமாறு அவர் தாயார் வற்புறுத்தினார். இடைவிடாத முயற்சிக்குப்பின் திருமணத்துக்கு இளையராஜா சம்மதித்தார். மணமகள் ஜீவா, இளையராஜாவின் முறைப்பெண். (அக்காள் மகள்)

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

"எனக்கு விரைவில் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்பதில் அம்மா மி கவும் பிடிவாதமாக இருந்தார்கள். அமர் – கலா காதல் தீவிரமாகி வந்ததும், இதற்கு ஒரு காரணம்.

என்னை கல்யாணத்துக்கு சம்மதிக்க வைக்க, அம்மா ஒரு வழியைக் கண்டுபிடித்தார்கள். "எனக்கும் வயசாச்சு. இப்படியே தினமும் உங்களுக்கு சமைச்சுப் போட எத்தனை நாள் முடியுமோ! அதனால் காலா காலத்திலே..." என்று அம்மா கூறிக்கொண்டிருக்கும்போதே நான் எழுந்து விடுவேன்.

ஜாதகம்

என் அக்காவுக்கு முதல் குழந்தையாக பெண் குழந்தை (ஜீவா) பிறந்தபோது, அதன் ஜாதகத்தை என் தந்தையார் பார்த்திருக்கிறார்கள். "இந்தக் குழந்தையைத்தான் ராஜையாவுக்கு கட்டி வைக்கவேண்டும்" என்று உத்தரவு போட்டுவிட்டு போய்விட்டார்கள். அதை அம்மா என்னிடம் சொல்லி பயமுறுத்துவார்கள்.

ஜீவா பிறந்து, சிறு குழந்தையாக இருந்தபோதே, அதைப் பார்த்துக் கொள்ளும்படி அக்கா என்னிடம்தான் சொல்வார்கள். நான்தான் பார்த்துக் கொண்டேன். நான்தான் வளர்த்தேன். ஒரு தாய், சிறு குழந்தைக்கு செய்யும் அத்தனையும் நான்தான் ஜீவாவுக்கு செய்தேன்.

நிபந்தனை

அம்மாவிடம் மேற்கொண்டு மறுத்துப் பேசமுடியாத கட்டம் வந்தது. திருமணம் செய்து கொள்ள நான் சில நிபந்தனைகளை அம்மாவிடம் சொன்னேன்.

"அதைப் பார்க்கவேண்டும், இதைப் பார்க்க வேண்டும், சினிமாவுக்குப் போகவேண்டும், அங்கே போகவேண்டும், இங்கே போகவேண்டும் என்றெல்லாம் எல்லா பெண்களும் கணவன்மாரிடம் வற்புறுத்துவார்கள். அதுமாதிரி என்னிடம் கூறக்கூடாது. எனக்கு முதலும், இரண்டாவதும், மூன்றாவதும் இசைதான். அதற்குப் பிறகுதான் மற்றதெல்லாம்" என்று கூறினேன்.

இது என் அக்காவுக்கும் தெரிந்தது. அவர்களும் மகளை பயமுறுத்தியிருப்பார்கள் போலிருக்கிறது!

எல்லாம் ஈசன் செயலே. கல்யாணம் நிச்சயம் ஆயிற்று, என்னைக் கேட்காமலேயே! அண்ணன் பாவலரும், அத்தானும், அம்மாவும் கலந்து பேசி, 1972 மே 22–ந்தேதி எனக்கும், ஜீவாவுக்கும் திருமணம் என்று நிச்சயித்து விட்டார்கள்.

அழைப்பிதழ்

திருமண அழைப்பிதழ் அச்சடிக்க வேண்டும் என்று, பாஸ்கர் கட்டாயப்படுத்தினார்.

அதன்படி அழைப்பிதழும் அடித்துவிட்டோம். ஆனால் இன்று நினைத்தாலும், நெஞ்சை மிகவும் உறுத்துகிற விஷயம் – அழைப்பிதழில் அண்ணன் பாவலர் வரதராஜன் அவர்களின் பெயரை போடாமல் விட்டு விட்டோம்.

"விட்டுவிட்டோம்" என்ன, "விட்டு விட்டேன்."

அண்ணன் பெயரைப் போட்டால், கட்சிக்காரர்கள் அனைவருக்கும் அழைப்பிதழ் அனுப்பவேண்டும். கூட்டம் வந்தால் செலவு தாங்காது என்ற முன் எச்சரிக்கைதான் காரணம் என்று சமாதானம் சொன்னால் அதை நம்பி விடுவீர்களா என்ன!

அண்ணனும் இதுபற்றி என்னிடம் கேட்கவில்லை. அதுதான் மிகவும் வருத்தம்.

கல்யாண உடை

திருமணத்துக்கு புதுத்துணிகள் எடுக்க வேண்டியிருந்தது.

பாலு ஒரு டெய்லரைக் காட்டி, "ஒரு சூட் தைத்துக்கொள்" என்றான். பணம் அவனா கொடுப்பான்? நான்தானே கொடுக்கவேண்டும்!

கல்யாணம் நிச்சயமான நாளில் இருந்து எத்தனை கச்சேரிகள் இருந்ததோ, அத்தனை கச்சேரிகளில் என் சம்பளத்தை மொத்தமாக பாலுவையே வைத்திருக்கச்சொல்லி கல்யாணத்துக்கு முன் என்னிடம் கொடுக்கும்படியும், இல்லையென்றால் செலவாகிவிடும் என்றும் கூறியிருந்தேன்.

ஜி.கே.வி.யிடம் 'ஆர்க்கெஸ்ட்ரா' இன்சார்ஜ் ஆக இருந்த சீனிவாசன்தான் பாலுவிடமும் இன்சார்ஜ் ஆக இருந்தான். கடைசியில் பணம் பட்டுவாடா செய்தபோது, பெரிய தொகையை நான் எதிர்பார்க்க, ஏதோ ஒரு தொகையை "இவ்வளவுதான்" என்று சொல்லி என் கையில் வைத்துவிட்டான்!

சீனு விளையாடி விட்டானோ என்று எனக்கு சந்தேகம். பாலுவிடம் கேட்டதில், நோட்டுப் புத்தகத்தில் குறித்து வைத்தபடிதான் இருக்கிறது என்று கூறிவிட்டான்.

சரி; இப்போது என்ன செய்ய முடியும்!

கல்யாணத்திற்கு பட்டுச்சட்டை தைத்துக்கொண்டேன். கல்யாண வேட்டியின் விலை என்ன தெரியுமா? 37 ரூபாய்! இன்றும் அந்த வேட்டி (என் மனைவியால் காப்பாற்றப்பட்டு) என்னிடம் இருக்கிறது!

கல்யாணத்துக்கு ஒவ்வொரு காசையும் இழுத்துப்பிடித்து, எண்ணிப் பார்த்து செலவு செய்தேன்.

அழைப்பு

என் திருமணத்துக்கு முக்கியமாக இரண்டு பேர் வரவேண்டும் என்று

விரும்பினேன் – எதிர்பார்த்தேன்.

அந்த இரண்டு பேர் பாரதிராஜாவும், எஸ்.பி.பாலசுப்பிரமணியமும்.

தனக்குப் படப்பிடிப்பு இருக்கிறது என்றும், திருமணத்திற்கு வர இயலாது என்றும் பாரதி சொல்லிவிட்டார்.

எஸ்.பி.பி.யிடம், “நீ கட்டாயம் வரவேண்டும்” என்று சொன்னதோடு மட்டும் அல்லாமல், “நீ வராவிட்டால், நம் நட்பு பொய் என்றாகிவிடும். அவசியம் வா. உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன்” என்றும் சொல்லிவிட்டேன்.

**இளையராஜா திருமணம் சிறப்பாக நடந்தது**
**22–5–1972**

இளையராஜா – ஜீவா திருமணம், சொந்த ஊரில் சீரும் சிறப்புமாக, அதே சமயம் எளிமையாக நடந்தது.

திருமணம், தன் இசை வாழ்வுக்கு இடையூறாக இருக்கும் என்று கருதி, நீண்ட காலமாக திருமணத்தைத் தள்ளிப்போட்டு வந்த இளையராஜா, முடிவில் தாயாரின் விருப்பத்தை தட்ட முடியாமல் திருமணத்துக்கு சம்மதித்தார்.

திருமணநாளை நினைவு கூர்கிறார், இளையராஜா:

"திருமண நாள் வந்தது.

நாதசுரத்துடன் மாப்பிள்ளை ஊர்வலம் தெருமுனையில் இருந்து தொடங்கி, வீடு வரை வந்தது. மாப்பிள்ளை (அதாவது நான்) சிறுவயதில் விளையாடிய தெருவில், கழுத்தில் மாலையுடன் வந்தார்!

இரண்டு நாற்காலிகளைப் போட்டு, பெண்ணையும், மாப்பிள்ளையையும் உட்காரச் சொன்னார்கள். அதன்படி அவர்களும் உட்கார்ந்தார்கள்.

அம்மா, அண்ணன், மதனி, அவர்கள் குழந்தைகள், அத்தான், அக்கா, மனைவியின் தம்பிகள், பாஸ்கர், அவர் மனைவி சுசீலா, தம்பி அமர், அவன் நண்பன் ராஜேந்திரன் ஆகியோர் சூழ்ந்து நின்றார்கள்.

மற்றும் என் நண்பர் என்ஜினீயர் எம்.சுப்பிரமணி, தேவாரம் ராமராஜ், கோம்பை நண்பர்கள், பள்ளித்தோழன் மைத்துனன் ஜெயகரன், அவனுடைய குடும்பத்தார் குழுமியிருந்தார்கள்.

தாலி

முகூர்த்த நேரம் நெருங்கியது. "...ம்... தாலியைக் கொண்டு வாங்கப்பா!" என்று ஒருவர் குரல் கொடுக்க, ஒரு தட்டில் தாலி வந்தது. அதைப் பெரியவர்கள் தொட்டு ஆசி வழங்க, "தாலியை எடுத்து மாப்பிள்ளையிடம் கொடுங்கப்பா" என்று ஒரு குரல் கேட்டது.

தாலியை என் கையில் கொடுத்தார்கள். "கெட்டி மேளம்... கெட்டி மேளம்" என்று யாரோ முழங்க, கெட்டி மேளம் முழங்கியது. தாலியைக் கட்டினேன். பின்னால் நின்றிருந்த சுப்பிரமணியனின் மனைவி, ராமராஜின் மனைவி, மற்ற பெண்கள், தாலியின் மற்ற முடிச்சுகளைப் போட்டார்கள். பூ தூவினார்கள்.

"மாலை மாற்றிக் கொள்ளுங்கள்" என்று சொல்ல, மாலை மாற்றிக்கொண்டோம்.

பிறகு ஊர்ப் பெரியவர்கள் பேசினார்கள். வழக்கம் போலவே, "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை பண்பும் பயனும் அது" – என்று அவர்கள் கூறியபோது, நான், பாஸ்கர், தோழன் ஜெயகரன், சுப்பிரமணியன், ராமராஜ் எல்லோரும் சிரித்து விட்டோம். ஏனென்றால், நாங்கள் போகும் கல்யாண வீடுகளில் எல்லாம், இதையேதான் பேச்சாளர்கள் பேசுவார்கள். அதுபற்றி கிண்டல் செய்வோம்.

அதே அனுபவம் எனக்கும் நேரிட்டதால், எங்களை அறியாமல் சிரிப்பு வந்தது.

மாலையில், மதுரையில் இருந்து வந்த இசைக்குழுவின் இன்னிசைக் கச்சேரி நடந்தது.

அன்றைக்கே சாந்தி முகூர்த்தம்!

ஆம்; முதல் இரவு.

முதல் இரவு, முதல் இரவுதான்!

சென்னை புறப்பாடு

மறுநாள், சென்னையில் இருந்து நாங்கள் வந்திருந்த டாக்சியில், குடும்பத்தாருடன் சுருளிதீர்த்தம் சென்று நீராடிவிட்டு வந்தோம்.

மாலையே சென்னை திரும்புவதாக இருந்தது.

எல்லோரிடமும் சொல்லிக்கொண்டு, அண்ணன் பாவலரிடமும் விடைபெற்றுக்கொண்டு, மாலை 6 மணிக்கு பண்ணைபுரத்தில் இருந்து புறப்பட்டோம். மறுநாள் காலை 6 மணி அளவில், சென்னைக்கு வந்து சேர்ந்து, வீட்டை அடைந்தோம்.

ஆசி

காலையில் குளித்து, டிபன் சாப்பிட்டு விட்டு, ஜி.கே.வெங்கடேஷ் அவர்களின் வீட்டுக்குச் சென்று, ஜி.கே.வி. அண்ணன், அண்ணி, ஆகியோரின் காலில் விழுந்து ஆசி பெற்றோம். திரும்பும் வழியில் சாயி லாட்ஜ் சென்று தன்ராஜ் மாஸ்டர் காலில் விழுந்து வணங்கி ஆசி பெற்றுக்கொண்டு வீடு திரும்பினோம்.

அம்மாவுக்கு சமையல் பாரம் குறைந்தது. அண்ணியும், ஜீவாவும் அதை பார்த்துக்கொண்டார்கள்.

அடுத்த நாள் முதல் என் வழக்கமான பணிகள் தொடங்கின. கர்நாடக சங்கீதம், ஜோசப்பிடம் மேற்கத்திய இசை பாடம் ஆகியவற்றை கற்பது தொடர்ந்தது.

குளியல்

காலையில் நான் குளிப்பதற்கு வெந்நீர் கலந்து வைக்குமாறு ஜீவாவிடம் அம்மா கூறினார்கள்.

அதன்படி வெந்நீர் வைத்தாள். நான் ஒரு சொம்பு தண்ணீர் ஊற்றிக்கொண்டதும், "போ! போய் முதுகு தேய்த்து விடு!" என்று ஜீவாவிடம் அம்மா கூறினார்கள்.

இந்த மாதிரி காட்சிகளை கிராமங்களிலும், சிறு ஊர்களிலும் நான் கண்டிருக்கிறேன். ஆனால் இதெல்லாம் எனக்குப் பிடிக்காது.

"வேண்டாம்" என்று சொன்னேன்.

அம்மா, “பரவாயில்லை. தேய்த்து விடு” என்று சொன்னார்கள்.

ஜீவா ஒரு சொம்பு வெந்நீர் ஊற்றி முதுகு தேய்த்து விட்டாள்.

மேற்கொண்டு வேண்டாம் என்று சொல்லிவிட்டேன். அம்மாவோ, ஜீவாவோ இதுபற்றி என்ன நினைப்பார்கள் என்று நான் எண்ணிப்பார்க்கவில்லை.”

மேற்கண்டவாறு இளையராஜா குறிப்பிட்டார்.

கங்கை அமரன் திருமணம்

இளையராஜாவின் திருமணத்துக்குப்பின், அவர் தம்பி கங்கை அமரன் திருமணம் நடந்தது.

மணமகள் பெயர் கலா. தந்தை எஸ்.எஸ்.பி.லிங்கம், பேரறிஞர் அண்ணாவின் நெருங்கிய நண்பர்.

கங்கை அமரன் – கலா திருமணம் மைலாப்பூர் கபாலீசுவரர் கோவிலில் சிறப்பாக நடந்தது. வரவேற்பு, உட்லண்ட்ஸ் ஓட்டலில் நடந்தது.

வரவேற்புக்கு அன்றைய முதல்–அமைச்சர் கலைஞர் கருணாநிதி, மற்ற அமைச்சர்கள், பிரமுகர்கள் வந்திருந்து வாழ்த்தினார்கள்.

**இளையராஜா – ஜீவா தம்பதிகளுக்கு**
**ஆண் குழந்தை பிறந்தது**
**தலைப் பிரசவ அனுபவங்கள்**

இளையராஜா – ஜீவா தம்பதிகளுக்கு முதல் குழந்தையாக ஆண் குழந்தை பிறந்தது. அதுதான் கார்த்திக் ராஜா.

தலைப்பிரசவ அனுபவம் பற்றி இளையராஜா கூறியதாவது:–

பிரசவ வலி

"ஜீவாவுக்கு மூன்று மாதம். டாக்டரிடம் அழைத்துப்போக வேண்டும், செக்அப் செய்ய வேண்டும் என்றெல்லாம் எனக்குத் தோன்றவில்லை."தோன்றவில்லை" என்றில்லை; எனக்குத் தெரியாது!

அம்மாதான் இருக்கிறார்களே! அவர்களுக்குத் தெரியாதா? கவனித்துக் கொண்டார்கள். இருந்தாலும், வீட்டு வேலைகள் அனைத்தையும் ஜீவாவே செய்து வந்தாள்.

நான் எப்போதும் போல் கம்போசிங், ரெக்கார்டிங், மியூசிக் எழுதுவது என்றிருந்தேன்.

ஜீவாவுக்கு மகப்பேறு நேரம் வந்தது. அவளுக்கு வலி எடுத்தது. அது பிரசவ வலி என்று அவளுக்குத் தெரிந்து போயிற்று.

அம்மா, கலாவின் வீட்டுக்கு போயிருந்தார்கள். நான்தான் வீட்டில் இருந்தேன்.

"வலிக்கிறது" என்றாள், ஜீவா. "என்ன செய்யவேண்டும்?" என்று நான் கேட்க, "ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டும்" என்றாள்.

"சரி" என்று கூறிவிட்டு, ரிக்ஷா ஒன்றை அழைத்து வந்தேன். அவளே அதில் ஏறினாள்; அவளே கல்யாணி ஆஸ்பத்திரிக்குப்போனாள்; அவளே 'அட்மிட்' ஆனாள்!

"கூட யாரும் வரவில்லையா?" என்று ஆஸ்பத்திரியில் கேட்டிருக்கிறார்கள். "இல்லை" என்று இவள் கூற, அட்மிட் செய்து கொண்டார்கள்.

என் மனைவி – என் வாழ்க்கைத்துணை, பிரசவ வலி எடுத்தபோது, 'எல்லோருக்கும் ஏற்படுவதுதான் போலிருக்கிறது' என்று மிகவும் சாதாரணமாக எண்ணிய மூடன்!

'பாவம், எப்படி தனியாகப் போவாள்? இடையில் ரிக்ஷாவில் போகும்போது வலி அதிகமாகி வேறு ஏதாவது ஆகிவிட்டால்...' என்றுகூட எண்ணாத கொடியவன்!

– இப்படியெல்லாம் என்னைப்பற்றி இப்போது எண்ணத் தோன்றுகிறதே தவிர, அப்போது ஒன்றும் தோன்றவில்லை.

குழந்தை பிறந்தது

ஜீவாவுக்கு முதல் குழந்தை பிறந்தது.

அம்மா, பாஸ்கர் எல்லோரும் போய்ப் பார்த்துவிட்டு வந்தார்கள். நானும் போய்ப் பார்த்தேன்.

பச்சை உடம்போடு வீட்டுக்கு வந்தாள் ஜீவா. பிஞ்சுக் குழந்தை கைகளையும், கால்களையும் ஆட்டுவது, அழுவது, மழலைக் குரல் கேட்பது – இதெல்லாம் விவரிக்க முடியாத விஷயங்கள்தான்.

பிரசவம், தாய் வீட்டில் நடப்பதுதான் வழக்கம். நாங்கள் எல்லாம் ஒரே குடும்பம் என்பதால், அது ஒரு விஷயமாக எண்ணிப் பார்க்கப்படவில்லை. இப்போது குழந்தை பிறந்து விட்டது. இந்த நேரத்தில் ஜீவா பிறந்த வீட்டில் இருக்க வேண்டும் என்று அக்கா, அத்தான் எல்லோரும் விரும்பியதால், அம்மாவும் அதற்கு ஒப்புக்கொண்டார்கள்.

ஜீவாவையும், குழந்தையையும் பாஸ்கர், பண்ணைபுரத்தில் கொண்டு போய் விட்டு வந்தார்.

அப்போது, இந்த "ராஜா தி கிரேட்"டுக்கு உடன் செல்ல முடியவில்லை. ஏனென்றால் "ராஜ்யம்" எப்படி நடக்கும்!

மூன்று மாதம் கழித்து, அழைக்கப் போகவேண்டும் அல்லவா? அப்போதும் இந்த "ராஜா தி கிரேட்" போகவில்லை! போனால் "ராஜ்யம்" கவிழ்ந்து விடும் பாருங்கள்!

பாஸ்கர்தான் போய் ஜீவாவையும், குழந்தையையும் அழைத்து வந்தார்.

மதுரையில், அண்ணன் பாவலரிடம் குழந்தையைக் காட்டியிருக்கிறார்கள். குழந்தையை கையில் எடுத்து, அப்படியே வெகுநேரம் அண்ணன் பார்த்துக் கொண்டிருந்தார்கள் என்று பாஸ்கர் கூறினார்.

என் தாய்க்கு நான் நல்ல மகனா? என் மனைவிக்கு நல்ல கணவனா? உடன் பிறந்தார்க்கு நல்ல சகோதரனா?

நானல்லவோ பாரதியார் பாடாத வேடிக்கை மனிதன்!

குழந்தைக்கு பெயர்

குழந்தையின் ஜாதகத்தைக் கணித்து, இரண்டு மூன்று பெயர்களை பாஸ்கர் சொன்னார்.

"கார்த்திக்" என்ற பெயரை நான் தேர்ந்தெடுத்தேன்.

அப்போது நான் வாங்கியிருந்த புது சவுண்ட் சிஸ்டத்தில், புதிய இசைத்தட்டுகளை காலை 4 மணிக்கே எழுந்து போடுவேன். மெதுவாக சத்தத்தை குறைத்து வைத்து இசைத்தட்டுகளைப் போடுவேன். எல்லாம் கார்த்திக்கிற்காகத்தான்!

இப்படி அதிகாலையிலும், பிறகு நேரம் இருக்கும்போதும், இரவு 10 மணிக்கு மேலும்

இசை ஒலிக்கும். அந்த இசைத்தட்டில் இசைத்தவர்களும், கம்போஸ் செய்தவர்களும் வந்திருந்து கவனிப்பார்கள். ரசித்து, ரசித்து, அவர்களை நேசிக்கும் என்னையும், என் குழந்தையையும் ஆசீர்வதித்துப் போவார்கள்.

அந்த இசையைக் கேட்பதற்கே கொடுத்து வைத்திருக்க வேண்டும். நம் நாட்டில் எத்தனை பணக்காரர்கள், தொழில் அதிபர்கள், அரசியல்வாதிகள் இதற்குக் கொடுத்து வைத்திருக்கிறார்கள்?

இசை இல்லாத இவர்கள் வாழ்வு – வறண்ட பாலை!

கார்த்திக் குழந்தையாக இருக்கும்போதே இந்த இசையைக் கேட்கிறான். எனக்கு இந்த இசையை கேட்க 30 ஆண்டுகள் அல்லவா ஆகியிருக்கிறது! பியானோவை பார்க்கவே எனக்கு 27 ஆண்டுகள் ஆயிற்றே! கார்த்திக் பிறந்த மூன்று மாதத்திலேயே இசையைக் கேட்கிறானே!

எஸ்.வி.வெங்கட்ராமன் இசை ஜி.கே.வெங்கடேஷ் மியூசிக் கம்போஸ் செய்யும்போது ஓய்வு கிடைத்தால், பழைய பாடல்களின் உயர்தரமான அமைப்புகளை விளக்குவார்.

அவர் எஸ்.வி. வெங்கட்ராமனுக்கு வீணை வாசித்தவர்.

எம்.எஸ்.சுப்புலட்சுமி நடித்த “மீரா” உள்பட பல படங்களுக்கு இசை அமைத்தவர், எஸ்.வி.வெங்கட்ராமன்.

மீரா படத்தில் ஒரு காட்சி. ஒட்டகத்தின் மீது போய்க்கொண்டே எம்.எஸ். ஒரு பாட்டு பாடுவார்.

இதற்கு இசை அமைக்கும் முன், உயிரியல் பூங்காவுக்கு (“ஜூ”) வெங்கட்ராமன் சென்றார். அங்கு காசு கொடுத்து ஒரு ஒட்டகத்தின் மீது சவாரி செய்தார். ஒட்டகம் நடந்த நடையை தாள கதியாக வைத்து, மியூசிக் கம்போஸ் செய்தார் என்று சொல்வார், ஜி.கே.வி.

“சிலையே நீ என்னுடன் பேசவில்லையோ?” என்ற பாடலை ஜீ.கே.வி. பாடினால் மிக அழகாக இருக்கும்.

சிங்கப்பூருக்கு அழைப்பு

பாலுவுக்கு சிங்கப்பூரிலும், மலேசியாவிலும் கச்சேரிகள் நடத்தும் வாய்ப்புகள் வந்தன.

ஏற்கனவே என் கல்யாணத்துக்கு வராவிட்டால், நட்பு பொய்யாகிவிடும் என்று பாலுவிடம் சொல்லியிருந்தேன். அவன் வராததால், எனக்கு பாஸ்போர்ட் எடுத்துக் கொடுத்தாலும் சிங்கப்பூர் போவதில்லை என்று முடிவு செய்திருந்தேன்.

என்னை சமாதானப்படுத்த, வைத்தியை பாலு என்னிடம் அனுப்பி வைத்தான். நான் உறுதியாக மறுத்துவிட்டேன்.

அவர்கள் சிங்கப்பூர் போனார்கள்; வந்தார்கள். அதுபற்றி நான் கொஞ்சமும் கவலைப்படவில்லை.

ஒரு சாதாரண வாத்தியக் கலைஞனுக்கு, முதன் முதலாக “வெளிநாட்டுப் பயணம்” போக வாய்ப்பு வந்தால் அதைத் தவற விடுவானா**?** ஆனால், நான் தவறவிடுவேன்**!** அது எனக்குப் பெரிதில்லை**.** மரியாதையும், ஒழுங்கும், பண்பும்தான் முக்கியம்**!**

**கன்னட "சூப்பர் ஸ்டார்" ராஜ்குமார், சொந்தக்குரலில் பாடினார்**
**இளையராஜா முயற்சி வெற்றி**

கன்னட பட உலகின் சூப்பர் ஸ்டாராக விளங்கிய ராஜ்குமார், பிற்காலத்தில் சொந்தக் குரலில் பாடினார். இதற்கு வழி வகுத்தவர்

இளையராஜா.இசை அமைப்பாளர் ஜி.கே.வெங்கடேஷிடம் உதவியாளராகப் பணியாற்றி வந்த காலக்கட்டத்தில் இந்த நிகழ்ச்சி நடந்தது.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

குடிப்பழக்கம்

"என் மானசீக குருவான சி.ஆர்.சுப்பராமனை வணங்கும் அதே நேரத்தில், அவர் குடியால் தன் உயிரை இழந்தது எனக்குப் பிடிக்கவில்லை. சங்கீதத்திற்காக உயிரைக் கொடுக்கலாம். ஆனால் குடிக்காக உயிரைக் கொடுக்கலாமா?

சினிமாவில் பல இசைக் கலைஞர்கள் குடியால் கெட்டுப் போனார்கள். இசையைத் தொழிலாகக் கொண்ட ராஜரத்தினம் பிள்ளையில் இருந்து, கரகாட்டத்திற்கு வாசிக்கும் நையாண்டி மேளக்காரர் வரை, குடிப்பழக்கம் இல்லாத கலைஞர்களைக் காண்பது அரிது.

சினிமாவில் இருக்கும் அத்தனை தொழில் நுட்பக் கலைஞர்களும் கூட இதற்கு விதி விலக்கு அல்ல. பாலுவின் கச்சேரிக்குப் போகும்போது, அதில் வாசிக்கும் அத்தனை பேரும் குடிப்பார்கள். மெதுவாக என்னையும் அதில் சேர்த்துக் கொண்டார்கள். வெறென்ன செய்வது? சேர்ந்து கொண்டேன்!

வெளியூருக்கு போகிறோம். நாளெல்லாம் சும்மா இருந்து விட்டு, மாலையோ, இரவோதான் கச்சேரி. அது எப்போது முடியுமோ? அதற்கப்புறம் சாப்பிட்டு விட்டுப்படுத்து, அடுத்த நாள் ரெயிலைப் பிடித்து, பகலெல்லாம் காய்ந்து கருவாடாகித் திரும்புவோம்.

இதில் அவர்களுக்கு இருக்கும் ஒரே சந்தோஷம் இந்தக் குடிதான். அவர்களுடன் அவ்வப்போது சேர்ந்து கொள்வேனே தவிர, அவர்களைப்போல் எப்போதும் அதிலேயே கிடப்பதில்லை.

கச்சேரி முடிந்த பிறகுதான், எப்போதாவது அவர்களுடன் சேர்வேன். குடித்தால், ஆர்மோனியத்தை தொடமாட்டேன்.

ராஜ்குமார் படம்

ராஜ்குமார் நடித்த "பங்காரத மனுஷியா" என்ற படத்தின் பாடல் கம்போசிங்கிற்காக, ஜி.கே.வி.யுடன் பட அதிபர் கே.சி.என்.கவுடாவின் ஊரான தொட்டுபெள்ளாப்பூர் என்ற ஊருக்கு போயிருந்தோம். அங்கே, டிராவலர்ஸ் பங்களாவில் ரூம் புக் செய்திருந்தார்கள். அங்கே தங்கி பாடல் கம்போஸ் செய்தோம்.

காலையில் எழுந்து நந்திஹில்ஸ் ரோட்டில் நடந்து விட்டு, 7 மணிக்கு கம்போசிங் தொடங்குவோம். 8 – 9 மணிக்கு டிபன் சாப்பிட்டு விட்டு மறுபடியும் தொடங்க,

தயாரிப்பாளரும், டைரக்டரும் வந்து கேட்பார்கள்.

பிறகு மதிய உணவு. ஓய்வு. மாலை 4 மணிக்கு டீயுடன் மீண்டும் கம்போசிங் தொடங்கி, இரவு 9 மணி வரை தொடரும். அப்புறம், ஜீ.கே.வி.யாருடனாவது விஸ்கி, கோழி, டிபன்...

இது தொடர்ச்சியாக ஒரு வாரம் நடந்தது.

உதயசங்கர் பாடல் எழுதினார்.

சமயத்தில், பட அதிபர் தன் நண்பர்களுடன் வந்து விடுவார். ஜி.கே.வி.யிடம் ட்யூனை வாசிக்கச் சொல்லி கேட்பார்.

வாசிக்கத் தொடங்குவோம். ஜி.கே.வி.க்கு இடையில் மறந்து போகும். இடையில் நிறுத்தி, "எப்படி அது?" என்று என்னிடம் கேட்டுவிட்டு, மறுபடியும் தொடங்குவார்.

இப்படி இடையில் நிறுத்தி, மறுபடியும் பாட, அது மொத்தமாக என்ன ட்யூன் என்று தயாரிப்பாளர் கவுடாவுக்கு புரியாது. எனவே, "ராஜா! நீயே பாடப்பா! ஜி.கே.வி.யை விட நீ நல்லாப் பாடறே" என்பார்.

ஜி.கே.வி. இடையில் நிறுத்தி, நிறுத்திப் பாடுவதால் எனக்கு இந்த சர்ட்டிபிகேட். ஜி.கே.வி.யும், "டேய்! நீயே பாடு!" என்பார்.

நான் பாடுவேன்.

வாத்தியத்தை தொட மறுப்பு!

கடைசி நாள் அன்று, கம்போசிங் முடிந்ததும், ஜி.கே.வி. விஸ்கி பாட்டிலை எடுத்து, தபேலா கன்னையாவை பார்த்து, "டேய் கண்ணா! இந்தா!" என்று ஒரு கிளாசில் ஊற்றிக் கொடுத்தார்.

அதோடு, உதய சங்கரும் இதில் கலந்து கொண்டார்.

"டேய், ராஜா! நீயும் வா!" என்று ஜி.கே.வி. அழைத்தார்.

"அண்ணே, வேணாம்!" என்றேன்.

"அட, பரவாயில்லை! வாடா!" என்றார்.

"இல்லேண்ணா! திடீர் என்று புரொடியூசர் வந்து ட்யூனை கேட்டால், நல்லா இருக்காதுண்ணே!"

"அட, ராத்திரி 9 மணி ஆச்சு. இனிமே யாருடா வரப்போறா?"

"நான் குடிச்சா கிட்டாரை தொடமாட்டேன். என்னை கிட்டார் வாசிக்கும்படி சொல்லக்கூடாது!" என்றேன்.

"சரி வா!" என்றார். கலந்து கொண்டேன்.

சற்று நேரத்தில், படத்தயாரிப்பாளரும், ராஜ்குமாரின் சகோதரர் வரதப்பாவும் வந்துவிட்டார்கள்! ‘பாடலை கேட்கவேண்டும்’ என்றார்கள்! ஜி.கே.வி.யும், கன்னையாவும் வாத்தியங்களை எடுத்து வைத்தார்கள். ஜி.கே.வி. பாடத்தொடங்கினார்.

“ஏனு ராஜா! நீனு ஏறு மாடுத்தியா? ஹாடு!” என்று என்னை பார்த்து சொன்னார், படத்தயாரிப்பாளர்.

ஜி.கே.வி. என்னைப் பார்த்தார். நான் ‘மாட்டேன்’ என்று தலையை ஆட்டினேன்.

புரொடியூசரைப் பார்த்து, “வேண்டாம். அவனை வற்புறுத்த வேண்டாம்” என்று ஜி.கே.வி. சொன்னார்.

நான் அவரிடம் வேலை செய்பவன். வாசிக்கச் சொல்லி என்னை அவர் கட்டாயப்படுத்தி இருக்கலாம். ஆனால் அப்படி செய்யவில்லை.

மற்றவர்களின் எண்ணங்களுக்கு மதிப்பு கொடுக்கும் ஜி.கே.வி.யின் பண்பு, என்னைக் கவர்ந்தது.

சொந்தக் குரலில் ராஜ்குமார் பாட்டு

கன்னடப்படங்களில் ராஜ்குமாருக்கு பொதுவாக பி.பி.சீனிவாஸ்தான் பின்னணியில் பாடி வந்தார்.

“சம்பத்திக்கே சவாலு” என்ற ராஜ்குமாரின் படத்தில், அவர் முதல் காட்சியிலேயே எருமை மாட்டின் மீது உட்கார்ந்தபடியே பாடிக்கொண்டு வந்து அறிமுகம் ஆவார்.

உதயசங்கர், பாடலை நன்றாக எழுதிவிட்டார். மியூசிக் எல்லாம் ரெடி.

நான் ஜி.கே.வி.யிடம், “அண்ணா! ராஜ்குமார் பாடுவாரா?” என்று கேட்டேன்.

“என்னது! முத்துராஜ் (ராஜ்குமார்) பாடுவானா என்றா கேட்கிறாய்? அவன் நாடகத்தில் பாடி நடித்து, சினிமாவுக்கு வந்தவன்டா!” என்றார், ஜி.கே.வி.

“அப்படின்னா, அவரே இந்தப்பாட்டை ஏன் பாடக்கூடாது?”

“ஏண்டா?”

“பாட்டு, பயங்கர குஷியோடு ரசிகர்கள் கைதட்டி ரசிக்கிற மாதிரி இருக்கு. பி.பி.சீனிவாஸ் பாடினா அதுவும் நல்லாத்தான் இருக்கும். ஆனா, அதிலே இந்த ‘பஞ்ச்’ இருக்காது” என்றேன்.

ஜி.கே.வி. நேரே ராஜ்குமாரிடம் பேச, அவர் பாடுவதற்கு ஒப்புக்கொண்டார்.

பிறகு பாடல் பதிவுக்கு ஏற்பாடு நடந்தது. ராஜ்குமார் பிரமாதமாகப் பாடிவிட்டார். அந்தப் படத்தில் வரும் எல்லாப் பாடல்களையும் அவரே பாடினார்.

அவர் பாடல்கள் பெரும் வரவேற்பைப் பெற்றன. அதில் இருந்து, அவர் நடிக்கும் எல்லாப் படங்களிலும், இசை யாராக இருந்தாலும் அவரேதான் கடைசி வரை

பாடினார். அதற்கு அடிபோட்டவன் நானாக இருந்தேன் என்பது, வரலாற்றில் முக்கிய விஷயம்.

இதுகுறித்து, வழக்கமாக ராஜ்குமாருக்கு பாடி வந்த பி.பி.சீனிவாஸ் என்னிடம் வருத்தம் கொள்ளவில்லை. எப்போதும் போலவே என்னிடம் அன்பாகப் பழகினார்.

**சவாலுக்கு சவால்**
**பாரதிராஜாவிடம் இளையராஜா சபதம்**

இசை அமைப்பாளராக வர முடியுமா என்பது குறித்து பாரதிராஜாவுக்கும், இளையராஜாவுக்கும் இடையே வேடிக்கையாக எழுந்த வாக்குவாதம், ஒரு சபதத்தில் முடிந்தது.

பாரதிராஜா உதவி இயக்குனராகவும், இளையராஜா ஜி.கே.வெங்கடேஷிடம் உதவியாளராகவும் பணியாற்றி வந்த காலக்கட்டத்தில் இந்த நிகழ்ச்சி நடந்தது.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:—

“தேசிய திரைப்பட வளர்ச்சிக் கழகத்தின் (என்.எப்.டி.சி.) உதவியோடு படம் எடுக்க ‘மயில்’ என்ற கதையை பாரதிராஜா உருவாக்கினார். அதற்கான விண்ணப்ப மனுவில், திரைக்கதை, டைரக்ஷன் பாரதிராஜா என்றும், கேமரா நிவாஸ் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. இசை அமைப்பாளராக என் பெயரையும் குறிப்பிட்டு விண்ணப்பத்தைக் கொடுத்து விட்டார்.

நிதி உதவி எப்படி யும் கிடைத்துவிடும், படம் எடுத்து விடலாம் என்ற நம்பிக்கையில் இருந்தார். ஆனால் இழுத்துக்கொண்டே போயிற்று.

பாரதிராஜா திருமணம்

பாரதிக்கு திருமணம் செய்ய வேண்டும் என்று, அவர் தாயார் விரும்பினார்.

விரைவில், சொந்தத்திலேயே பெண் பார்த்து முடிவு செய்தார்கள். மணமகள் பெயர் சந்திரலீலா.

கல்யாண நாள் குறித்தார்கள். திருமண வேலைகள் ஆரம்பம் ஆயின. அப்போது அவினாசி மணி இயக்கத்தில் “தலைப்பிரசவம்” என்ற படத்தை, கே.ஆர்.ஜி. தயாரித்துக் கொண்டிருந்தார். கே.ஆர்.ஜி.க்கு பாரதி மீது ரொம்பப் பிரியம். அது, அடுத்த படத்தை பாரதிக்கு கொடுக்கலாம் என்கிற அளவுக்கு வளர்ந்தது. அவரே கல்யாண விஷயங்களில் கலந்து கொண்டு நிறைய உதவி செய்தார்.

திருமணம் ஆன பிறகு, காரணீஸ்வரர் கோவில் தெருவில் ஒரு வீடு பார்த்துக்கொண்டு, பாரதிராஜா குடியேறினார். பாரதிராஜாவின் அம்மா கொஞ்சநாள் வந்து இருந்துவிட்டுப் போனார்கள்.

சபதம்

திருமணத்துக்குப்பின், நானும், பாரதியும் சந்திப்பது குறைந்து போயிற்று. அதைப் புதுப்பித்துக் கொள்ள நாங்கள் எப்போதாவது கடற்கரைக்கோ, டிபன் சாப்பிட லஸ் கார்னருக்கோ போய் வருவதுண்டு.

அப்படி போகும்போது ஒருநாள், புதிய போட்டி ஒன்றை பாரதிராஜா தொடங்கினார்.

நான் எப்போதும் ஜி.கே.வி., குமார், விஜயபாஸ்கர், ராஜன், நாகேந்திரா, ராகவலு, உபேந்திரகுமார், தேவராஜன், ஏ.டி.உமர், பாபுராஜ், தட்சிணாமூர்த்தி ஆகியோரிடம்

கிட்டாரோ, காம்போவோ வாசிக்கப்போய் வருவதைப் பார்த்த பாரதிராஜா, அதுபற்றி குறிப்பிட்டார். சிலர் வாழ்நாள் முழுவதும் உதவி டைரக்டராகவே காலம் கழித்துவிட்டு, அறுபது வயதுக்கு மேலும் வேலை செய்வதை சுட்டிக்காட்டினார்.

பிறகு, "டேய்! நீ எல்லாம் மியூசிக் டைரக்டர் ஆக முடியாது போலிருக்கே! இப்படி கிட்டார் வாசிச்சுக்கிட்டே இருக்கணும்னு விதியோ என்னமோ! ஆனா ஒண்ணு! நீ மியூசிக் டைரக்டரா எப்போது ஆகமுடியும் தெரியுமா? நானெல்லாம் ஒரு இருபத்தஞ்சு முப்பது படம் டைரக்ட் பண்ணி, எம்.ஜி.ஆர்., சிவாஜி மாதிரி பேர் எடுத்துப் புகழோடு இருக்கிறபோது, 'சரி, போனாப்போகுது, நம்ம இவனுக்கு ஒரு படம் கொடுப்போம் என்று கொடுத்தாத்தான் நீ மியூசிக் டைரக்டர் ஆக முடியும்!" என்றார்.

எனக்குத்தான் மியூசிக் டைரக்டர் ஆகவேண்டும் என்ற ஐடியாவே இல்லையே! இசையைக் கற்றுக்கொண்டால் போதும் என்று இருக்கிறபோது பாரதி ஏன் இப்படி பேசுகிறார்! நாமும் ஒரு உதார் விடுவோம் என்று நினைத்தேன்.

"பாரதி! நீ பெரிய டைரக்டர் ஆகு, அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. ஆனா, உன் படத்துக்கு நான் மியூசிக் பண்ணணும்னா, உன்னை புட்டண்ணாவிடம் அனுப்பி அசிஸ்டெண்ட் டைரக்டரா சேர்த்து விட்டாரே ஜி.கே.வி, அவர் உன் படத்துக்கு மியூசிக் பண்ணியிருக்க வேண்டும். அதற்கப்புறம் அவர் என்னிடம், 'டேய், ராஜா! போனாப் போகுது. பாரதி படத்துக்கு மியூசிக் பண்ணுடா' என்று சொன்னாத்தான் நான் மியூசிக் பண்ணுவேன். இல்லேன்னா பண்ணவே மாட் டேன்" என்று சபதம் செய்தேன்.

கோவர்த்தன் அழைப்பு

பெண்டியாலா சீனிவாசன் என்ற தெலுங்கு இசை அமைப்பாளர் இசை அமைக்கும் தமிழ்ப்படமான "பட்டாம்பூச்சி" படத்துக்கு, உதவி இசை அமைப்பாளராக கோவர்த்தன் பணியாற்றினார். இவர் எம்.எஸ்.வி. அவர்களிடம் உதவி இசை அமைப்பாளராகப் பணியாற்றியவர்.

இந்தப் படத்திற்கு கதை – வசனம்: ஏ.எஸ்.பிரகாசம். கமலஹாசன் ஹீரோ. ஜெயசித்ரா கதாநாயகி.

இந்தப் படத்திற்கு கோம்போ ஆர்கன் வாசிக்க கோவர்த்தன் என்னை அழைத்தார். நானும் சம்மதித்து, வாசித்தேன். என் வாசிப்பைப் பார்த்துவிட்டு எனக்கு நிறைய சான்ஸ் கொடுத்து, பல இடங்களில் வாசிக்க வைத்தார்.

ஒருநாள் சாப்பாடு இடைவேளை முடிந்து நான் வேலை தொடங்குவதற்கு முன், அவருக்கு இசையமைக்க ஒரு படம் வந்திருப்பதாக சொன்னார். "நீயும், நானும் சேர்ந்து இசை அமைக்கலாமா? பெயரை 'கோவர்த்தன் – ராஜா' என்று போட்டுக்கொள்ளலாம்" என்றார். "சரி" என்று சொல்லிவிட்டேன்.

**இளையராஜாவின் அண்ணன் பாவலர் மரணம்**

இளையராஜாவின் அண்ணன் பாவலர் வரதராஜன் திடீரென்று மரணம் அடைந்தார். எதிர்பாராத அவரது மறைவு, இளையராஜாவை துயரக்கடலில் மூழ்கச் செய்தது.

இசை அமைப்பாளர் ஜி.கே.வெங்கடேஷின் உதவியாளராக இளையராஜா பணியாற்றி வந்தபோது, இந்த நிகழ்ச்சி நடந்தது.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

"ஒரு நாள் மதுரையில் அண்ணனுக்கு (பாவலர் வரதராஜன்) உடல்நலமில்லை என்றும், ஆஸ்பத்திரியில் அட்மிட் செய்திருக்கிறார்கள் என்றும், செலவுக்கு பணம் வேண்டும் என்றும் மூத்த மகன் ஜீவதுரை வந்தான்.

அவ்வளவு சீரியசாக இருக்காது என்று நான் நிச்சயமாக நம்பினேன். பணத்தை, தேவையானபோது அனுப்பலாம் என்று சாதாரணமாக இருந்து விட்டேன்.

அடுத்த நாள், ஜி.கே.வி.யின் ரெக்கார்டிங்குக்குப் போனேன். காலை 7 மணிக்கு, விஜயா ரெக்கார்டிங் தியேட்டரில் ஜி.கே.வி.யுடன் அமர்ந்தேன்.

அதிர்ச்சி செய்தி

அண்ணன் இறந்துவிட்டார்கள் என்று செய்தி வந்தது. அதிர்ச்சியால் உறைந்து போனேன்.

'பணம் கொடுத்திருந்தால் ஒருவேளை பிழைத்திருப்பாரோ?'

குற்ற உணர்ச்சி, அண்ணன் போய்விட்ட வேதனை எல்லாம் சேர்ந்து, என்னை ஸ்தம்பிக்க வைத்து, துயரத்தில் மூழ்கடித்தன.

அம்மா, பாஸ்கர், அமர் ஆகியோருடன் நானும், மனைவியும், குழந்தையும் வாடகைக் காரில் கிளம்பினோம். போகும்போது யாருக்கும் பேச்சு வரவில்லை. அம்மா புலம்பிக் கொண்டே வந்தார்கள்.

உடலை மதுரையில் இருந்து பண்ணைபுரத்துக்கு பிள்ளைகள் கொண்டு போனார்கள்.

அண்ணன் உடலைப் பார்த்ததும், துக்கம் நெஞ்சை அடைத்தது. துயரத்தைத் தாங்க முடியவில்லை. அப்பா உயிர் பிரியும்போது, எங்கள் கைகளைப் பிடித்து, அவரிடம் தானே ஒப்படைத்தார்! அண்ணன்தானே எங்களை வளர்த்து ஆளாக்கினார். 'எங்கள் வளர்ச்சியைக் காணாமல் போய்விட்டீர்களே' என்று கதறி அழுதோம்.

எல்லாம் முடிந்தது

இறுதி ஊர்வலம் புறப்பட்டபோது, துக்கமும், அழுகையும் அதிகமாகியது. உடலை குழிக்குள் இறக்கியபோது, கண்கள் வற்றும்வரை கண்ணீர் கொட்டியது.

எல்லாம் முடிந்தது.

நான் அழவேண்டியது எல்லாம், அன்றோடு முடிந்தது. அதற்குப் பிறகு, அத்தனை வேதனையோடு நான் என்றும் அழவில்லை.

திரும்பி வந்தோம். ரெக்கார்டிங்குக்கு போனபோது, ஜி.கே.வி.யை பார்த்ததும், அழுகை அதிகமாக வந்தது. "எங்களுக்கு இனி இந்த உலகில் அண்ணன் என்பது நீங்கள்தான் அண்ணே" என்று கதறியபடி கூறினேன். அவர் ஆறுதல் சொன்னார்."

பிரிக்க முயற்சி

அண்ணன் – தம்பி போல் ஜி.கே.வெங்கடேசும், இளையராஜாவும் பழகுவது சிலருக்கு பிடிக்கவில்லை. அவர்களைப் பிரிக்க முயற்சி நடந்தது. இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

இசையமைப்பாளர் கோவர்த்தனும், நானும் சேர்ந்து இசையமைப்பதும், ஆர்க்கஸ்ட்ரா ரிகர்சல் நடத்துவதும், ஜி.கே.வியின் இன்சார்ஜ் சீனிவாசனுக்கு பிடிக்கவில்லை.

'நம்ம ரெக்கார்டிங் எல்லாம் ராஜாவுக்குப் பெரிது இல்லை, அவனும் கோவர்த்தனும் மியூசிக் பண்றாங்க! அதோட வெளிநாட்டில் இருக்கும் குரூப்போல ஆர்க்கஸ்ட்ரா கச்சேரியும் பண்ணப்போகிறார்களாம் என்று சொல்லிவிட்டார். "அவன் பிசியா இருந்தா விட்டுடுடா" என்று ஜி.கே.வி.யை சொல்ல வைத்து விட்டார்.

இதனால், வழக்கமாக என்னை அழைத்துப்போக வீட்டுக்கு வரும் டாக்சி 2 நாட்களாக வரவில்லை. எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

ஜி.கே.வியின் அண்ணன் மகன் வித்யா, வயலின் வாசிப்பவன், என் வீட்டிற்கு வந்து "நீ ஏன் வரவில்லை" என்றான். அதற்கு நான் "வண்டி என்னை பிக்அப் பண்ண வரவே இல்லை" என்றேன்.

பின்னர் நான் ஜி.கே.விக்கு ஒரு கடிதம் எழுதி அவனிடம் கொடுத்து விட்டேன். அதில், "நான் ஏதோ தங்களுக்கு துரோகம் செய்துவிட்டதைப்போலவும், செய்யத்தகாத நடவடிக்கையைச் செய்துவிட்டதைப் போலவும் அதனால் என்னைத் தண்டிப்பதாகவும் நினைத்துக்கொண்டு, என்னை, அப்படியே விட்டுவிடு என்று சீனிவாசனிடம் சொன்னதாக அறிந்தேன். அண்ணா.. உங்களை நம்பி நான் சென்னைக்கு வரவில்லை. இனிமேல் வேலையே இல்லாமல் போனாலும், பட்டினி கிடந்து செத்தாலும் சாவேனே தவிர உங்களிடம் வந்து எனக்கு வேலை வேண்டும் என்று நிற்கமாட்டேன். இப்படிக்கு ராஜா" என்று குறிப்பிட்டிருந்தேன்.

இந்தக் கடிதம் கிடைத்ததும், என்னை அழைத்து வர ஆள் அனுப்பினார், ஜி.கே.வி.

முதலில் அந்த சீனிவாசனே வந்தான். நான் "வரமுடியாது" என்றேன். பிறகு வித்யா வந்தான்.

"வாடா! என்ன இருந்தாலும் அவர் பெரியவர்" என்றான். போனேன்.

"என்னடா இது லெட்டர்!" என்று ஜி.கே.வி. கேட்டார்.

நடந்ததை சொன்னேன். அவர் வருத்தப்பட்டார்.

“சரி, சரி! போனது போகட்டும். வாடா!” என்று அழைத்துப்போனார்.

கம்போசிங்கிலும், ரெக்கார்டிங்கிலும் ‘உம்’ என்று இருந்தேன்.

நான் சரியாவதற்கு இரண்டு மூன்று நாட்களாயிற்று.”

**பாவலர் அனுபவித்த சிறைவாசம்**

இளையராஜாவின் அண்ணன் பாவலர் வரதராஜன், கம்யூனிஸ்டு கட்சியில் தீவிர ஈடுபாடு கொண்டவர். அதனால், சிறைவாசமும் அனுபவித்திருக்கிறார்.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:—

“திருச்சி கலெக்டருக்கு மிரட்டல் கடிதம் எழுதியதாக, அண்ணன் பாவலரை கைது செய்து, வத்தலக்குண்டு சிறையில் அடைத்து விட்டார்கள்.

அறிஞர் அண்ணாவின் மறைவுக்குப்பிறகு, கலைஞர் முதல்வராகியிருந்த காலக்கட்டம் அது. அண்ணனுக்கு கூடும் கூட்டத்தைப் பார்த்துவிட்டு, சிலர் அண்ணன் மீது போட்ட பொய் வழக்கு இது. இது கலைஞருக்கு தெரிந்திருக்க வாய்ப்பு இல்லை.

அண்ணனை ஜாமீனில் எடுக்க கம்யூனிஸ்டு கட்சி முன்வரவில்லை. எந்த கட்சிக்காக, தன் சொந்த செலவில் நாடகம் நடத்தினாரோ, கேரள முதல்—மந்திரி நம்பூதிரிபாடு யாரை மதித்தாரோ, அந்தப் பாவலரை ஜாமீனில் எடுக்கவோ, விடுதலைக்கான முயற்சிகளில் ஈடுபடவோ கம்யூனிஸ்டு கட்சி முயற்சி செய்யவில்லை.

ஆனால் பாவலரோ இது பொய் வழக்கு என்பதாலும், தன்னை கைது செய்த போலீசாருக்கே இது தெரியும் என்பதாலும் இதை பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை.

அடுத்த முறை அவரை பார்த்தபோது, கம்யூனிஸ்டு கட்சியை கடுமையாகத் திட்டினோம். அண்ணன் எங்களை சமாதானப்படுத்தினார்கள்.

“தி.மு.க.வில் பாடகர்களுக்கு மிகவும் மரியாதை இருக்கிறது. அவர்கள் வசதியாக இருக்கிறார்கள். நீங்களும் தி.மு.க.வில் சேர்ந்து விடுங்கள்” என்று சொல்லி வந்தோம்.

நாங்கள் கூறியது வேலை செய்தது போலும். கொஞ்ச நாள் கழித்து, தி.மு.க.வில் சேர்ந்து விட்டார். மதுரை தி.மு.க.வினர் அவரைக் கொண்டாடினார்கள்.”

**“அன்னக்கிளி” படத்துக்கு**
**இசை அமைப்பாளர் ஆனார், இளையராஜா**
**வாக்குறுதியை நிறைவேற்றினார், பஞ்சு அருணாசலம்**

“நான் படம் எடுத்தால், நீதான் மியூசிக் டைரக்டர்” என்று இளையராஜாவுக்கு வாக்குறுதி அளித்தார், பஞ்சு அருணாசலம். அதன்படி “அன்னக்கிளி” படத்தின் இசை அமைப்பாளர் வாய்ப்பை வழங்கி, கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றினார்.

கன்னடத்தில் நம்பர் ஒன் இசையமைப்பாளராக இருந்தவர் ஜி.கே.வெங்கடேஷ். அவரிடம் இளையராஜா 1969–ம் ஆண்டு உதவி இசையமைப்பாளராக சேர்ந்தார். 150 படங்கள் வரை அவருடன் இணைந்து பணியாற்றினார்.

இளையராஜா ஆர்மோனியத்தை வாசிப்பதைத்தான் அனைவரும் பார்த்திருப்பார்கள். ஆனால் அவர் ஜி.கே.வெங்கடேசிடம் பணியாற்றும் போது, கிட்டார், பியானோ, கம்போஆர்கன் ஆகிய இசைக்கருவிகளையும் வாசித்தார். அத்தோடு பாடல்களை எப்படி பாட வேண்டும் என்று சொல்லிக்கொடுப்பது, பின்னணி பாடகர்கள் பாடும்போது தவறுகள் ஏற்படும்போது, அதை சரிசெய்வது போன்ற பணிகளையும் செய்தார்.

திருப்பம்

இந்த சமயத்தில், இளையராஜா வாழ்க்கையில் பெரிய திருப்பம் ஏற்பட்டது.

இளையராஜாவின் நண்பரும், பிற்காலத்தில் பிரபல கதாசிரியராக உயர்ந்தவருமான ஆர்.செல்வராஜ் உருவத்தில் அதிர்ஷ்டம் அவரைத் தேடி வந்தது.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

“செல்வராஜ் ஒருநாள் வந்து, ‘டேய்! உனக்காக பஞ்சு அருணாசலத்துக்கிட்டே சொல்லியிருக்கிறேன். அவர் உன்னை பார்க்க வேண்டும் என்று அழைத்துவரச்சொன்னார்’ என்று கூறினான். பின்னர் நானும், செல்வராஜும் ஒருநாள் அவரைப்பார்க்க சென்றோம்.

காலை 10 மணி இருக்கும். ஒரு சிறிய அறையில் பனியன் மட்டும் போட்டுக்கொண்டு எழுதிக்கொண்டிருந்தார். எங்களைப்பார்த்தவுடன் எழுதுவதை நிறுத்திக்கொண்டு, ‘வா..செல்வராஜ்’ என்றார். உடனே செல்வராஜ், ‘இவர்தான் ராஜா!’ என்று என்னை அறிமுகம் செய்து வைத்தான்.

அதன்பின்னர் பஞ்சு அருணாசலம், ‘நீ ஏதாவது படத்திற்கு டியூன் போட்டு இருக்கிறாயா?, இருந்தால் கொஞ்சம் பாடிக்காட்டு, கேட்கலாம்’ என்றார்.

உடனே நான், ஏற்கனவே மெட்டமைத்து வைத்திருந்த “அன்னக்கிளி உன்னைத்தேடுதே”, “மச்சானைப்பார்த்தீங்களா”, “சுத்தச்சம்பா” போன்ற பாடல்களைப் பாடிக்காட்டினேன். பாட்டுக்கு ஏற்ற தாளமாக பக்கத்தில் இருந்த டேபிளையும் லேசாக தட்டினேன்.

அவர் அந்தபாடல்களை ரசித்துக்கேட்டு விட்டு, ‘டியூன் எல்லாம் நன்றாகவே இருக்கிறது. இப்போது நான் எழுதுகின்ற படம் அனைத்தும் காமெடி படம்தான்.

ஏற்கனவே நான் எழுதி அதிக படங்கள் பாதியில் நின்று போனதால் எனக்கு ‘பாதிப்படம் பஞ்சு அருணாச்சலம்’ என்று பேர் வைத்திருக்கிறது, திரைஉலகம்! இந்த நல்ல டியூன்களை காமெடிப் படத்தில் போட்டால், அதற்குரிய மரியாதை போய்விடும். நல்ல கதை அமைந்து அதில் இந்த பாடல்களுக்கு முக்கியத்துவம் வருகிற மாதிரி வந்தால்தான் படமும், இசையும் நன்றாக இருக்கும். அது போல எடுக்க வேண்டும் என்றால் இப்போது இருக்கின்ற நிலையில் எந்த புரோடியூசர் வரப்போகிறார்! ஒரு வேளை நானே தயாரிப்பாளராக வந்தால், உனக்கு கண்டிப்பாக சான்ஸ் தருகிறேன். அதுவரைக்கும் நீ பொறுத்து இருக்கணும்!’ என்றார்.

“சரி சார்” என்று அவரிடம் விடை பெற்றுக்கொண்டு வந்தோம்.

பஞ்சு சார் சொன்ன பதிலை, சாதாரணமாக எல்லோரும் சொல்கின்ற பதில்போல்தான் எடுத்துக்கொண்டேன். ஜீ.கே.வியின் வேலைகளில் அதைப்பற்றி மறந்தும் விட்டேன்.

இடையில் செல்வராஜ் ஒருநாள் வந்து ‘ஏய்.. பஞ்சுசார் கதை – வசனம் எழுதிய “மயங்குகிறாள் ஒரு மாது” என்ற படம் நல்ல ஹிட்டாகி விட்டது. அடுத்த படம் தொடங்கினால், நீதான் மியூசிக் டைரக்டர்! ரெடியா இருடா’ என்றான். நான் அதையும் ஒரு பேச்சாக எடுத்துக் கொண்டேனே தவிர உண்மையாக எடுத்துக்கொள்ளவில்லை.

அழைப்பு வந்தது

சில நாட்களுக்குப்பின் செல்வராஜ் என்னிடம் வந்து, பஞ்சு அருணாசலம் என்னை அழைப்பதாகக் கூறினான். போனேன்.

“வாய்யா” என்று வரவேற்ற பஞ்சு சார், “செல்வராஜ் ஒன்றும் சொல்லலியா?” என்று கேட்டார்.

‘இல்லை’ என்கிற மாதிரி தலையசைத்து, செல்வராஜை நோக்கினேன்.

“இல்லை சார். அதை நீங்களே சொன்னாத்தான் நல்லாயிருக்கும்” என்று செல்வராஜ் சொன்னான்.

“செல்வராஜ் சொன்ன ஒரு கதையை நானே சொந்தமாகத் தயாரிக்கப்போறேன், நீதான் மியூசிக்!” என்றார், பஞ்சு அருணாசலம்.

மகிழ்ச்சி தாங்காமல், “சரி அண்ணே” என்றேன்.

இருவர் பெயர்

கோவர்த்தனுடன் சேர்ந்து இசையமைக்க ஒத்துக்கொண்டது நினைவுக்கு வந்தது.

“வரப்பிரசாதம் என்ற ஒரு படத்தை கோவர்த்தன் – ராஜா என்ற பெயரில் இருவரும் சேர்ந்து இசையமைக்கிறோம். அதே பெயரில் இதில் இசையமைத்து விடுகிறோமே” என்றேன்.

“இங்கப்பாரு! நான் சான்ஸ் கொடுப்பதே உனக்கு! இதில் ஏன் அவர் பெயரைப்போட வேண்டும்? “கைராசி”, “பட்டணத்தில் பூதம்” என்று பல படத்திற்கு

கோவர்த்தன் தனியாகவே இசையமைத்திருக்கிறார். இது நான் உனக்கு கொடுக்கும் படம்” என்று பஞ்சு சார் கூறினார்.

இதை தயங்கி தயங்கி நான் கோவர்த்தனிடம் சொன்னேன். “பரவாயில்லை; சான்ஸ் கிடைப்பது கஷ்டம். உன் பெயரில் செய்” என்று அனுமதி கொடுத்தார்.

பஞ்சு சார், தன் தம்பி சுப்புவை தயாரிப்பாளராகப் போட்டு இந்த படத்தை எடுத்தார்.

செல்வராஜ் ஏற்கனவே சொல்லியிருந்த ஒரு கிராமத்து மருத்துவச்சி கதையை கேட்டு, சில மாற்றங்கள் செய்து, திரைக்கதையையும், வசனத்தையும் பஞ்சு சார் எழுதினார். இதை தேவராஜ் – மோகன் டைரக்ட் செய்தார்கள்.

பாடல்களை எல்லாம் எந்த இடத்தில் வைக்க வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. இதை டைரக்டர் தேவராஜிடம் விளக்கிக்கூறி, ஏற்கனவே கம்போஸ் செய்யப்பட்ட பாடல்களை அவரை கேட்கவைத்தார் பஞ்சு.

அன்னக்கிளி

உத்தமபாளையம் பகுதியில் பாடப்படுகின்ற நாட்டுப்பாடல். ஏற்கனவே சிறுவயதிலிருந்து நான் கேட்டு வந்த “புள்ளிபோட்ட ரவிக்கைக்காரி” என்று தொடங்கும் ஒரிஜினல் பாடலை, நான் வேறுவகையாக மாற்றி அமைத்தேன்.

அதுதான் “அன்னக்கிளி உன்னைத்தேடுதே” என்ற பாடலாகும். அந்த அன்னக்கிளி என்ற பெயரே படத்தின் பெயரானது.

அடுத்து “மச்சானை பார்த்தீங்களா” என்ற பாடலை ஏற்கனவே அமர் (கங்கை அமரன்) எழுதி டைரக்டர் கே.சுப்பிரமணியத்தின் மகன் எஸ்.வி.ரமணன் ஸ்டுடியோவில் பதிவு செய்து வைத்து இருந்தோம். அதை “அன்னக்கிளி” படத்தில் பயன்படுத்த தீர்மானித்தோம்.

பூஜை தினத்தன்று இந்த 2 பாடல்களையும் பதிவு செய்ய முடிவு செய்யப்பட்டது. பாடல்களை கவிஞர் கண்ணதாசன் பாடல்களை எழுதுவார் என்று பஞ்சு சொன்னார்.

அந்த நாளை ஆவலோடு எதிர்பார்த்துக் காத்து இருந்தேன்.

**“அன்னக்கிளி” தயாரானபோது இளையராஜா சந்தித்த சோதனைகள் நீக்குவதற்கு நடந்த முயற்சிகள் முறியடிப்பு**

“அன்னக்கிளி”யின் இசை அமைப்பாளராக இளையராஜா தேர்வு செய்யப்பட்டபின், அவரை படத்தில் இருந்து நீக்க பல முயற்சிகள் நடந்தன. எதிர்பாராத சோதனைகளும் வந்தன. அவற்றை எல்லாம் முறியடித்தார், இளையராஜா.

இதுபற்றி இளைய ராஜா கூறியதாவது:–

“பஞ்சு சாரின் கதை – வசனத்தில் ஹிட் ஆகியிருந்த “உறவு சொல்ல ஒருவன்”, “மயங்குகிறாள் ஒரு மாது” என்ற 2 படங்களுக்கும் விஜயபாஸ்கர் இசையமைத்திருந்தார்.

அவரிடம் வேலை செய்த குருபாதம் என்ற இன்சார்ஜ், அவருக்கு வரவேண்டிய படத்தை நான் தட்டிப்பறித்து விட்டேன் என்ற தவறான எண்ணத்தோடு தயாரிப்பாளர் சுப்புவிடம் போனார்.

“பஞ்சுசார், விஜயபாஸ்கர் கூட்டணி ஹிட் ஆகும் கூட்டணி சார். அவர் ஸ்டாரும், இவர் ஸ்டாரும் நன்றாக ஒத்துப்போயிருக்கு. அதை ஏன் மாத்துறீங்க” என்றார்.

இதில் சுப்பு குழம்பிவிட்டார். கூடவே பஞ்சுசாரின் இன்னொரு தம்பி லட்சுமணன் வேறு. அவருக்கும் கேள்விக்குறிகள்.

“சார்! இந்த ராஜா ஜி.கே.வி.கிட்டே கிட்டார் வாசிக்கிறவர் சார். ஏற்கனவே அன்லக்கி மியூசிக் டைரக்டர் என்று பெயர் எடுத்திருக்கார். அவர் மியூசிக் பண்ணி பூஜை போட்ட படம் எல்லாம் நின்று போயிடும்” என்று பலவிதமாக சொல்லி, பயத்தை ஏற்படுத்திவிட்டார். சுப்புவும் பயந்து விட்டார்.

இசையமைப்பாளரை மாற்றுங்கள்

பஞ்சுசாரிடம் நேராக சென்ற சுப்புவும், லட்சுமணனும், “எதுக்கு நமக்கு ரிஸ்க்? விஸ்வநாதன் சார் பிரமாதமாக மியூசிக் போடுகிறார். நம்ம படத்திற்கு ஒரு மெரிட் இருக்கும். டிஸ்டிரிபியூட்டரும் படத்தை வாங்குறதுக்கு ஒரு பேரும் இருக்க வேண்டாமா?” என்று சொன்னார்கள்.

“அதைப்பற்றி ஒன்றும் பேசவேண்டாம், முடிந்து போன விஷயம். ராஜாதான் மி யூசிக்!” என்று பஞ்சு சார் ஒரேயடியாக அடித்து சொல்லிவிட்டார்.

இதைக்கேட்டு அவர்களது தம்பிகளும் பேசாமல் இருந்தார்கள்.

பூஜைதேதியும் குறிக்கப்பட்டது. கவிஞர் கண்ணதாசனிடம் பாட்டெழுத கேட்ட நேரத்தில் அவர் சிங்கப்பூர் போவதாக சொல்லிவிட்டார்.

“எப்போது திரும்பி வருவார்?” என்று கேட்டதற்கு, “படத்தின் பூஜை முடிந்த பிறகு தான் திரும்பிவருவார்” என்று பதில் வந்தது.

எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது.

அதேநேரம் "பூஜையை நிறுத்தவேண்டாம். நானே பாட்டு எழுதிவிடுகிறேன்" என்று பஞ்சு சார் கூறிவிட்டார்.

அதன்படி பாடலை எழுதித்தந்தார்.

ஒத்திகை

ரிகர்சல் நாள்வந்தது. கவிஞர் வீட்டின் அருகில் இருக்கும் பாலாஜி கல்யாண மண்டபத்தில் ஒரு ஞாயிற்றுக்கிழமை எல்லா ஆர்க்கெஸ்ட்ராவும் வந்தது.

காலையில் "அன்னக்கிளி உன்னைத்தேடுதே" பாடலுக்கு ரிகர்சல் செய்தோம்.

அவர்களுக்கெல்லாம் புதிய அனுபவமாக இருந்தது. எனக்கும் உற்சாகமாக இருந்தது. இரண்டாவதாக, "மச்சானை பார்த்தீங்களா" பாடலை ரிகர்சல் செய்தோம். மதிய உணவுக்குப்பின் மாலை 4 மணிக்கு பாடகி எஸ்.ஜானகி வந்தார்.

பெரும்பாலும் பாடகர்கள் பெரிய இசையமைப்பாளருக்குத்தான் முக்கியத்துவம் கொடுப்பார்கள்.

ஆனால் ஜானகி ஜி.கே.வி. ரெக்கார்டிங்கில் என்னிடம் பழகி இருக்கிறார்.

தவறாக பாடினால் ஜீ.கே.வி. என்னை விட்டு சரியாக சொல்லிக் கொடுக்கச் சொல்லும் போது, நான் பாடி சரிசெய்வதை தெரிந்தவர்.

ரிசர்சலுக்கு வந்து ஒத்துழைத்தார். பாடல் சொல்லிக்கொடுக்கும் போதே, அதனுடைய ஜீவனைப் புரிந்து கொண்டார். இது மிகவும் புதிது என்று தெரிந்து மி கவும் கவனத்தோடு கற்றுக்கொண்டார்.

சுப்புவுக்கும், லட்சுமணனுக்கும் என் மீது இருந்த சந்தேகம் தீர்ந்து போனது.

"நீ நன்றாகப்பாடுவாய் என்று நம்பிக்கை இருந்தது. ஆனால் அது இவ்வளவு புதுசாக இருக்கும் என்று எதிர்பார்க்க வில்லை" என்று இரட்டிப்பு சந்தோஷத்தோடு பஞ்சுசார் சொன்னார்.

அடுத்த நாள் பூஜை. நானும், பாஸ்கர், அமர் ஆகியோரும் 6 மணிக்கு திருவேற்காடு போய்விட்டு, ஸ்டுடியோவுக்கு 7 மணிக்கு முன் வந்து விட்டோம்.

பூஜை முடிந்து, ரிகர்சல் தொடங்கியது.

மின்சாரத்தடை

ஆர்க்கெஸ்ட்ராவெல்லாம் அமர்ந்து, "ரெடி, ஒன், டூ, த்ரி" என்று நான் சொன்ன அந்த நொடியில் "மின்சாரம் கட்" ஆகி விளக்குகள் அணைந்து விட்டன. எனக்கு சப்த நாடியும் அடங்கி விட்டது.

டோலக் வாசிக்கும் பாபுராஜ் 'ம்... நல்ல சகுனம்' என்றார், கேலியாக.

மனம் உடைந்த நான், ஸ்டுடியோவில் பாடுபவர்களுக்கு இருக்கும் ரூமின் பின் கதவைத் திறந்து தனியாக உட்கார்ந்திருந்தேன். சிறிதுநேரம் அப்படியே கழிந்தது.

தம்பி அமரும், பாஸ்கரும் என்னைத் தேடிவந்து, “டைரக்டர் மாதவன் சார் வந்திருக்கார். உன்னைப் பார்க்கவேண்டுமாம்” என்றனர்.

நான் உடனே எழுந்து போனேன், அவர் “கருமாரியம்மன் கோவிலுக்கு போயிட்டு வந்தேன், இந்தா பிரசாதம்” என்று என் கையில் கொடுத்தார்.

பின்னர், “நான்தான் உனக்கு சான்ஸ் கொடுக்கணும்னு நினைத்தேன். ஆனா பஞ்சு முந்திவிட்டார்” என்றார்.

அது உடைந்த மனதுக்கு ஆறுதலாக இருந்தது. போன மின்சாரமும் வந்தது.

தேங்காயில் கற்பூரம் ஏற்றி சாமிக்கு காட்டிவிட்டு வெளியே சிதறுகாய் எறிந்து உடைக்கப்பட்டது.

“சைலன்ஸ்! டேக்..ரன்னிங்” என்ற குரல் ஒலிக்க, கோவர்தன் மாஸ்டர், “ஒன் டூ கொடுக்க, ஜானகி ஆ...ஆ... என்று ஹம்மிங் தொடங்க, பாடல் நன்றாக வந்தது.

என்ஜினீயர் சம்பத், ஒன்ஸ்மோர் என்று கேட்கப்போனார்.

“முதல் டேக் டேப்பை போட்டுக்காட்டினால், ஆர்க்கெஸ்ட்ராவின் தவறுகளை அவர்களே கேட்டுத் திருத்திக் கொள்வார்களே” என்று நான் கூறினேன்.

எல்லோரையும் உள்ளே அழைத்தேன். சம்பத்தோ, “என்ன இது? இந்தபையன் இப்படிச் செய்கிறானே?” என்று நினைத்தார். “ராஜா! இன்னும் ஒரு டேக் எடுத்திடலாமே” என்றார்.

“எடுக்கலாம் சார்! ஆனா இதப்போட்டுக்கேட்டா, அவங்க தவறி வாசிச்சதை அவங்களே திருத்தி வாசிப்பாங்க” என்றேன்.

பதிவாகவில்லை

‘சரி’ என்று டேப்பை ரிவைண்ட் செய்தார். அதன் பின்னர் டேப்பை ஆன் செய்தார். டேப் ஓடியது. இப்போது வரும், இப்போது வரப்போகிறது என்று எல்லோரும் ஆவலோடு எதிர்பார்க்க, எதிர்பார்க்க டேப் ஓடியதே தவிர, அதிலிருந்து ஒரு சப்தமும் வரவில்லை.

காரணம் பாடல் பதிவாகவில்லை! ரெக்கார்ட் மூடில் மெஷினே ஓட்டவில்லை என்பது சம்பத்துக்கு தெரிந்து போய்விட்டது. உடனே, “சார், சார்! பாட்டு பதிவாகலை சார்,
ஒன் மோர் டேக் சார்!” என்றார்.

சுப்புசாரின் முகம் மாறியது. ஒரு மாதிரியாகி வெளியே எழுந்து போய்விட்டார்.

மீண்டும் பாடல் பதிவு தொடங்கியது.

“டேக் நம்பர் ஒன்று இரண்டு” என்று நம்பர்களை ஏற்றிக்கொண்டே போனார்கள். 12 டேக் ஆனது.

பஞ்சு சார் மட்டும் இத்தனை கலாட்டாக்களுக்கு நடுவிலும் அமைதியாக இருந்தார்.

பாரதிராஜா மட்டும் பூஜைக்கு வரவில்லை. அது எங்களுக்குள் இருந்த அந்த போட்டியை எனக்கு நினைவு படுத்தியது.

2–வது பாடல், "மச்சானைப்பார்த்தீங்களா" பதிவாகியது. "சொந்தமில்லை பந்தமி ல்லை" பாடலை சுசீலா பாட ரெக்கார்டு செய்தோம்.

'அன்னக்கிளி உன்னைத்தேடுதே' பாடல், சோகப்பாடலாக மறுபடியும் ஒருமுறை வந்தால் நன்றாக இருக்கும் என்று பஞ்சுசாரும், டைரக்டர் தேவராஜ் மோகனும் விரும்பினார்கள். அந்த பாடலை டி.எம்.சவுந்திரராஜன் நன்றாக பாடிக்கொடுத்தார்.

பாடல்கள் எல்லாம் பதிவாகி முடிந்தன. அதன்பின் படத்தின் சூட்டிங் நடந்தது."

இவ்வாறு இளையராஜா கூறினார்.

**இளையராஜா இசை அமைத்த முதல் படம்**
**"அன்னக்கிளி" மகத்தான வெற்றி!**
**எல்லாப் பாடல்களும் 'ஹிட்'**

இளையராஜா இசை அமைத்த "அன்னக்கிளி" மாபெரும் வெற்றி பெற்று 200 நாட்கள் ஓடியது. ஒரே படத்தின் மூலம் புகழின் சிகரத்தை அடைந்தார் இளையராஜா.

பலருடைய எதிர்ப்பையும் மீறி, "அன்னக்கிளி" படத்துக்கு இசை அமைக்கும் வாய்ப்பை இளையராஜாவுக்கு பட அதிபரும், கதாசிரியருமான பஞ்சு அருணாசலம் வழங்கினார்.

கடைசி நேர சோதனை

படம் வெளிவரும் வரை இளையராஜாவுக்கு சோதனைகள் தொடர்ந்த வண்ணம் இருந்தன. படப்பிடிப்பு எல்லாம் முடிந்து, பின்னணி இசை சேர்ப்பு வேலை ("ரீரிக்கார்டிங்") நடந்தபோதுகூட "இளையராஜாவுக்கு ரீரிகார்டிங் தெரியவில்லை. படத்தைக் கெடுக்கிறார்" என்று சிலர் கூறினார்கள்.

பஞ்சு அருணாசலத்துக்கும், டைரக்டர் தேவராஜுக்கும் இளையராஜாவின் ரீரிக்கார்டிங் பிடித்திருந்தது. எனவே, இளையராஜா பற்றி குறை சொன்னவர்களிடம் "உங்கள் வேலையைப் பார்த்துக்கொண்டு போங்கள். இந்தப்பக்கம் வராதீர்கள்" என்று கண்டிப்புடன் சொல்லி அவர்களை விரட்டி அடித்தார், பஞ்சு அருணாசலம்.

பஞ்சு அருணாசலத்தின் தம்பி லட்சுமணன், ஸ்டுடியோவுக்கு வந்த எம்.எஸ்.விஸ்வநாதனிடம், இளையராஜாவின் ரீரிக்கார்டிங் பற்றி குறை கூறியிருக்கிறார். அதற்கு எம்.எஸ்.வி, "அந்தப் பையனை எனக்குத் தெரியும். என் ரெக்கார்டிங்கில் வாசித்து இருக்கிறான். அவனுக்கு இசை பற்றி எல்லாம் தெரியும். தொந்தரவு செய்யாமல் அவனை விட்டு விடுங்கள். படத்துக்கு என்ன வேண்டுமோ அது வந்துவிடும்" என்று சூடான பதில் கூறியிருக்கிறார்.

பெயர் மாற்றம்

இளையராஜாவின் இயற்பெயர் ராஜையா. அதை "ராஜா" என்று மாற்றியவர் தன்ராஜ் மாஸ்டர்.

இப்போது "அன்னக்கிளி" டைட்டிலில் பெயரை எப்படிப் போடுவது என்று கேள்வி எழுந்தது. கச்சேரிகளில் பாவலர் பிரதர்ஸ் என்ற பெயர் பிரபலமாகியிருந்ததால், அந்தப் பெயரையே பயன்படுத்தலாம் என்று கூறினார் இளையராஜா.

"அது, ஆலத்தூர் பிரதர்ஸ், டி.கே.எஸ். பிரதர்ஸ் என்பது மாதிரி ரொம்பப் பழைய ஸ்டைல்!" என்று பஞ்சு அருணாசலம் கூறினார். சற்று நேரம் யோசித்து விட்டு, "உன் பெயர் ராஜா. ஏற்கனவே, சினிமாவில் ஏ.எம்.ராஜா இருக்கிறார். பின்னணி பாடுவதுடன், சில படங்களுக்கு மியூசிக் டைரக்ஷனும் செய்திருக்கிறார். அவர் பெரிய ராஜா. நீ இளையராஜா! உன் பெயரை இளையராஜா என்று வைத்துவிடுவோம்" என்றார்.

அவர் சூட்டிய வேளை நல்ல நேரமாகவும், பெயர் ராசியான பெயராகவும்

அமைந்தது. ஒருசில நாட்களிலேயே "இளையராஜா" என்ற பெயர் தமிழக மக்களின் செல்லப் பெயராக அமைந்தது.

பெரிய வெற்றி

சிவகுமாரும், சுஜாதாவும் ஜோடியாக நடித்த "அன்னக்கிளி" 14–5–1976ல் ரிலீஸ் ஆயிற்று.

எம்.ஜி.ஆரும், சிவாஜியும் கொடிகட்டிப் பறந்த காலக்கட்டம் அது. எனவே, "அன்னக்கிளி"க்கு பெரிய எதிர்பார்ப்பு இல்லை. ஆரம்பத்தில் பெரிய கூட்டம் இல்லை. சில ஊர்களில் ஒரே வாரத்தில் படத்தை எடுத்து விட்டார்கள்.

படத்தைப் பார்த்தவர்கள் வெளியே வந்து, "படம் மிகவும் சிறப்பாக இருக்கிறது. குறிப்பாக, இளையராஜா என்ற புதிய இசை அமைப்பாளர் பாடல்களுக்கு போட்டுள்ள மெட்டுகள் அருமையாக உள்ளன" என்று கூறியது, ரசிகர்களிடையே பரவியது. பத்திரிகைகளும் படத்தையும், இசையையும் பாராட்டி விமர்சனங்கள் எழுதின.

இதனால், தியேட்டர்களில், நாளுக்கு நாள் கூட்டம் அதிகமாகியது. ஒரே வாரத்தில் படத்தை எடுத்த தியேட்டர்களில், மீண்டும் "அன்னக்கிளி" திரையிடப்பட்டது.

15 நாட்களில் "அன்னக்கிளி" திரையிடப்பட்ட தியேட்டர்களில் கூட்டம் அலைமோதியது. ஒவ்வொரு காட்சியும் "ஹவுஸ்புல்" ஆனது.

"அன்னக்கிளி" இசைத்தட்டு வெளிவந்து சக்கைபோடு போட்டது. "அன்னக்கிளி ஒன்னைத்தேடுது", "மச்சானைப் பார்த்தீங்களா", "நம்ம வீட்டுக் கல்யாணம்" முதலான பாட்டுகள் ரேடியோவில் மாறி மாறி ஒலித்தன.

"அன்னக்கிளி" 200 நாட்கள் ஓடி வெற்றி விழா கொண்டாடியது.

"இளையராஜா அனுபவம்

"அன்னக்கிளி" வெளியானபோது ஏற்பட்ட அனுபவங்கள் பற்றி, இளையராஜா கூறியதாவது:—

"அன்னக்கிளி இசைத்தட்டுக்கு பெரிய வரவேற்பு இருந்தது. கடைகளில் முன்பதிவு செய்து, இசைத்தட்டை வாங்கினார்கள்.

அப்போது டெலிவிஷன் கிடையாது. ரேடியோ தான். அந்த சமயம் அன்னக்கிளி பாடலை ரேடியோவில் ஒலிபரப்பினால் ஒரு வீட்டில் பாடலை வைப்பார்கள். அது அடுத்த வீடு, அடுத்த வீடு என்று தொடர்ந்து தெரு முழுவதும் ஒலித்துக்கொண்டிருக்கும். இதை நான் மலயப்பநாயகன் தெருவில் வாக்கிங் செல்லும் போது பார்த்திருக்கிறேன். அதுவும் 6 மாதங்களுக்கு மேலாக நானே நேரடியாக கண்டு இருக்கிறேன்.

அன்னக்கிளிக்கு நான்தான் இசை அமைத்தேன் என்பது இரண்டு மூன்று வீடுகளைத்தவிர வேறு யாருக்கும் தெரியாது.

மக்கள் அந்த பாடல்களை கேட்க, கேட்க 'எந்த பாடல் நன்றாக இருந்தாலும் அதை

ரசிப்பார்கள்' என்று எண்ணினேனே தவிர, கர்வப்படவில்லை. சந்தோஷப்பட்டேன்.

என் பெயர் வெளியில் பெரியதாக பேசப்பட்டாலும், இன்று ஒரு படம் ஹிட் ஆகிவிட்டால், அவர்களையே சுற்றிவரும் கூட்டம்போல் அன்று இல்லை.

நானும் பெயர் வந்து விட்டது என்பதற்காக ஜி.கே.வி.யை விட்டு வெளியே வந்துவிட வேண்டும் என்று எண்ணவில்லை. கிட்டாரைத் தூக்கிக்கொண்டு, அவர் எங்கு போனாலும் பின்னால் போய்க்கொண்டிருந்தேன்.

கூட்டம்

போடிநாயக்கனூரில் ஒரு கச்சேரிக்கு சென்றிருந்தோம். அப்போது நாங்கள் தங்கியிருந்த வீட்டின் முன்பு என்னைப்பார்க்க அதிகமான கூட்டம். கூட்டம் கலைய வேண்டும் என்றால் நான் வந்து எனது முகத்தை காட்ட வேண்டும் என்று கூறினார்கள்.

நானும் கூட்டத்தினர் முன்பு வந்து நின்றேன். ஆனால் கூட்டத்தினரோ எனக்கு பின்னால் பார்த்துக்கொண்டு இருந்தனர். 'என்னங்க! இன்னமும் இளையராஜாவை காணோம்' என்று ஒருவர் கேட்டார்.

என் அருகில் இருந்தவர், 'இதோ இவர்தான்!' என்று என்னை சுட்டிக்காட்டினார்.

உடனே கூட்டத்தினர் கையை முகவாய்கட்டையில் வைத்து, "ஹூம்... இந்த பையன்தானா!" என்று உற்சாகம் குறைந்தவர்களாக, காற்றுப்போன பலூன் மாதிரி ஆனார்கள்.

பெயருக்கு ஏற்றபடி ஒரு பெரிய அழகான வாலிபனாக எதிர்பார்த்தவர்களுக்கு, சின்னப்பையனாய்... பேண்டும், சட்டையும் கிராப்புமாய் இருந்தவனை 'இளையராஜா' என்று ஏற்றுக்கொள்ள முடியவில்லை! அதனால்தான் அவர்களுக்கு இவ்வளவு ஏமாற்றம்!"

**"அன்னக்கிளி" இசை அமைப்பு:**
**இளையராஜாவுக்கு ராஜ்குமார் பாராட்டு**

"அன்னக்கிளி"க்கு பிரமாதமாக இசை அமைத்த இளையராஜாவை, கன்னட சூப்பர் ஸ்டார் ராஜ்குமார் பாராட்டினார்.

"அன்னக்கிளி" வெளியானபோது ஏற்பட்ட அனுபவங்கள் பற்றி, இளையராஜா கூறியதாவது:–

"அன்னக்கிளி" ரிலீஸ் ஆனபோது, மூகாம்பிகை கோவிலுக்குப் போகத் திட்டமிட்டேன். முடியவில்லை. 100–வது நாளுக்கும் போகமுடியவில்லை. 150–வது நாள், 175–வது நாள் (வெள்ளி விழா) எதற்கும் போக இயலவில்லை. 'இனி அம்மா கூப்பிட்டால்தான் போகமுடியும்' என்று தீர்மானித்து, முயற்சி செய்வதை விட்டுவிட்டேன்.

ஷெனாய் மேதை பிஸ்மில்லாகான்

ராஜ்குமார் ஷெனாய் வித்வானாக நடித்த "ஷெனாதி அப்பண்ணா" என்ற படத்துக்கு ஜி.கே.வெங்கடேஷ் இசை அமைத்தார்.

இந்தப் படத்தில், ஷெனாய் வாசிக்க பிரபல ஷெனாய் இசை மேதை பிஸ்மில்லாகான் வந்திருந்தார். அவர் இதுவரை எந்த சினிமா படத்துக்கும் ஷெனாய் வாசித்ததில்லை. ஷெனாய் வித்வானைப்பற்றிய கதை என்பதால், அவர் ஒப்புக்கொண்டிருக்கலாம்.

அந்தப் படத்திற்கு நான் ஜி.கே.வி.யுடன் பணியாற்றியபோது, என்னை பிஸ்மில்லாகானுக்கு ஜி.கே.வி. அறிமுகப்படுத்தி வைத்தார். "என் சிஷ்யன்; இப்போது இசை அமைப்பாளராக ஆகி இருக்கிறார்" என்றார்.

நான், பிஸ்மில்லாகானின் காலில் விழுந்து வணங்கினேன். அவர் ஆசி கூறினார்.

அந்தக் காலக்கட்டத்தில், எல்லா நேரமும் ஜெமினி ஸ்டூடியோவிலேயே கிடந்தேன். இசை ஆறாக – நதியாக ஓடி, சங்கீத சாகரத்தில் கலக்கும் அழகை ரசித்தேன்.

பிஸ்மில்லாகான் மெய்மறந்து வாசித்துக் கொண்டிருப்பார். திடீரென்று நிறுத்திவிடுவார். ஒரு துண்டை விரித்து நமாஸ் (தொழுகை) செய்வார். ஒரு நாளில் 6 முறை தொழுகை நடத்தும் ஒழுக்கத்தை அவர் கடைப்பிடித்து வந்தார். ஒருநாள்கூட, இந்த வழக்கத்தை அவர் மாற்றிக்கொண்டது இல்லை.

ராஜ்குமார் வந்தார்

ஒருநாள், ராஜ்குமாரின் பாடலை பதிவு செய்ய பிரசாத் ஸ்டூடியோவில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

சற்று நேரத்தில் ராஜ்குமார் அண்ணா வந்துவிட்டார். பாடலை கையில் வாங்கிக்கொண்டார்.

ஜி.கே.வி. ஆர்மோனியத்துடன் உட்கார்ந்திருக்க, அவருக்கு நேரே எதிர்த்தாற்போல்

ராஜ்குமார் அமர்ந்திருந்தார். ஜி.கே.வி.யின் வலது புறம் நான். மறுபுறம் தபேலா கன்னையா, 'டோலக்' பாலா.

ஜி.கே.வி. பாட ஆரம்பித்தார். ராஜ்குமார் அண்ணா, பாடலை கவனிக்கவே இல்லை. என்னையே பார்த்துக் கொண்டிருந்தார்.

எனக்கு கூச்சமாக இருந்தது. ஜி.கே.வி.யின் பாடலுக்கு தக்கபடி நான் வாத்தியம் வாசிக்க அது இடையூறாகவும் இருந்தது.

ராஜ்குமார் "எல்லாம் கடவுள் செயல்" என்பது போல மேலே கையைக்காட்டி, கன்னத்தில் போட்டுக்கொண்டார். பிறகு, "எல்லிநோடிதரு நின் ஹெசுரே கனோ" (எங்கு பார்த்தாலும் உன் பெயர்தானப்பா) என்றார்.

எனக்குக் கூச்சம் அதிகமாயிற்று. "அண்ணா! பாட்டைப் பார்க்கலாம் அண்ணா!" என்றேன்.

அப்போது ராஜ்குமாரைப் பார்த்து ஜி.கே.வி, "ஆமா, ஆமா முத்துராஜ்! பேரு பெரிய பேருதான்" என்றார்.

பிறகு ஒரு வழியாக, ராஜ்குமார் பாடுவதற்குத் தயாரானார்.

அவர் பாடலை பதிவு செய்தோம்.

"அன்னக்கிளி" மிகப்பிரபலமான போதிலும், நான் இசை அமைப்பாளர்கள் இடையே பத்தோடு பதினொன்றாக இருப்பேன் என்றுதான் நினைத்தேன். அதற்கு மேல் நினைக்கவில்லை.

குழந்தை பிறந்தது

"இரண்டாவது படம் வந்தால் மூகாம்பிகை போகலாம்" என்று நினைத்தேன்.

இந்த சமயத்தில், மனைவி ஜீவா, இரண்டாவது பிரசவத்துக்காக ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டாள். இந்த முறை அடிக்கடி போய் பார்த்துக்கொண்டேன். பெண் குழந்தை பிறந்தது.

இந்த நேரம், "பாலூட்டி வளர்த்த கிளி" என்ற படத்துக்கு இசை அமைக்க, எனக்கு டைரக்டர் மாதவனிடம் இருந்து அழைப்பு வந்தது. "பெண் குழந்தை பிறந்த ராசி" என்று அம்மா கூறினார்கள்.

அருண்பிரசாத் மூவிஸ் பேனரில் இப்படம் தயாராகியது. பாடலை கவிஞர் கண்ணதாசன் எழுதினார். கதாநாயகி ஸ்ரீபிரியா பாடுவதுபோல் "கொலை கொலையா முந்திரிக்கா" என்ற பாடலை எழுதிக் கொடுத்தார்.

"அண்ணே! எனக்காக நீங்கள் எழுதும் முதல் பாட்டு இது!" என்று நினைவூட்டினேன்.

"அதனால்தான், இந்தப் பாடலின் நடுவே, 'வா, ராஜா வா' என்று வருமாறு எழுதியிருக்கிறேன்" என்றார், கவிஞர்.

“உங்கள் ஆசி அண்ணே” என்று மகிழ்ச்சியோடு கூறினேன்.

பி.மாதவன் தயாரித்த இந்தப் படத்தை, தேவராஜ் – மோகன் இயக்கினர். விஜயகுமார் – ஸ்ரீபிரியா நடித்தனர். வசனம்: கோமல் சாமிநாதன்.

20–8–76 அன்று வெளிவந்த “பாலூட்டி வளர்த்த கிளி” சரியாக ஓடவில்லை. “கிளியின் அருமையான இசை” என்றெல்லாம் மாதவன் சார் விளம்பரம் செய்து பார்த்தார், பலன் இல்லை.

**"அன்னக்கிளி" படத்துக்குப் பிறகும்**
**தொடர்ந்து இசை பயின்றார், இளையராஜா**

"அன்னக்கிளி", "பாலூட்டி வளர்த்தகிளி" ஆகிய படங்களுக்கு இசை அமைத்து பிரபல இசை அமைப்பாளர் ஆன பிறகும், இசை கற்பதில் ஆர்வம் காட்டினார், இளையராஜா.

அவரது இரண்டாவது படமான 'பாலூட்டி வளர்த்த கிளி' சரியாகப் போகவில்லை. என்றாலும், அந்தப் படத்தில் இடம் பெற்றிருந்த "கொலை கொலையா முந்திரிக்கா" பாடல் ஹிட்டாகி, இளையராஜா பெயரை தக்க வைத்துக்கொண்டது.

இசை ஆர்வம்

இரண்டாவது படம் வெளியான பிறகும் இளையராஜா தொடர்ந்து 'இசை' கற்றுக் கொள்வதில் தீவிரமாக இருந்தார். இதற்கென சுவாமி தட்சிணாமூர்த்தி என்ற இசை அமைப்பாளரிடம் கற்றுக்கொள்ள முடிவு செய்தார்.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:—

"சினிமாத்துறையில் காலெடுத்து வைத்த நேரத்திலேயே சுவாமி தட்சிணாமூர்த்தியின் சங்கீதம் மீது எனக்கு ஈர்ப்பு உண்டு. இப்போது இரண்டு படங்களுக்கு இசையமைத்துவிட்ட நிலையிலும் அவரிடம் கற்றுக்கொள்ளும் ஆசை எனக்குள் இருந்தே வந்தது. இனியும் தள்ளிப்போடலாகாது என்ற முடிவுக்கு வந்து, சென்னை மந்தைவெளியில் இருந்த அவரது வீட்டுக்குப்போய் கேட்டேன்.

என் ஆர்வம் புரிந்து கொண்டவர், "நாளையில் இருந்து பாடம் தொடங்கலாம்" என்று சொல்லிவிட்டார்.

மறுநாளே பூ, பழம், கற்பூரம், ஊதுபத்தி, வெற்றிலை பாக்கு தட்டுடன் போனேன்.

அவர் அதிகாலையில் எழுந்து நீராடி பூஜை முடித்து, எனக்கு பாடம் தொடங்கினார்.

ஆரம்பப் பாடமான சரளி வரிசையில் இருந்து பாடத்தை ஆரம்பிப்பார் என்று எதிர்பார்த்தேன்.

அவரோ ஏதோவொரு கீர்த்தனையைத் தொடங்கி விட்டார். அவர் சொல்லித் தரும் பாடங்களை குறித்துக்கொள்ள 'நோட்டு' கொண்டு போயிருந்தேன். கீர்த்தனையில் இருந்து தொடங்கி விட்டதால் எழுதும் வேலை ஒன்றும் இல்லை.

பாடினார். அதையே என்னைத் திரும்பப் பாடச் சொன்னார். அவர் பாடிய மாதிரி வரவில்லை.

சரி செய்தார். மறுபடியும் பாடினேன்.

ஊஹூம். அவர் மாதிரி வரவேயில்லை. அன்றைய பாடம் இப்படியே முடிந்தது.

6 மாதம்

அன்று மட்டுமில்லை. அடுத்து நான் போன மூன்று மாதங்களிலும் இதே தான் என் நிலை. அவர் பாடியதில் நூற்றில் ஒரு பங்கு கூட எனக்கு வரவில்லை என்பது தெரிந்து போயிற்று. என்றாலும் அவர் பாடுவதும், அவர் பாட்டுக்கு நான் பாடிப்பார்ப்பதுமாக 6 மாதங்கள் ஓடிப்போயிற்று.

சுவாமி அப்போது, “நந்தா என் நிலா”, “ஒரு ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது” போன்ற படங்களுக்கு இசையமைத்துக் கொண்டிருந்தார்.

நானும் இரண்டொரு படங்களுக்கு இசையமைப்பை தொடர்ந்ததோடு, ஜி.கே.வி.யிடமும் பிசியாக இருந்தேன்.

இதற்கிடையே சுவாமி ஒருநாள் என்னிடம் தனது படம் ஒன்று பின்னணி இசை சேர்ப்புக்கு (ரீரிகார்டிங்) வந்துவிட்டதாகவும், அதற்கு ‘காம்போ’ (இசைக் கருவி) வாசிக்க யாரும் கிடைக்கவில்லை என்றும் என்னிடம் சொன்னார்.

நான் கொஞ்சம் கூட யோசிக்காமல், “அதனாலென்ன சுவாமி! நான் இல்லையா? நீங்க சொல்றப்போ வந்துடறேன்” என்றேன்.

அதிசயம்

சொன்னது போலவே அவரது படத்துக்கு ‘கம்போ’ வாசிக்கப்போனேன். படங்களுக்கு இசையமைக்கும் ஒரு இசையமைப்பாளராக என்னை உணர்ந்தவர்களுக்கு, நான் ஒரு உதவியாளர் நிலையில் காம்போ வாசிக்க வந்தது அதிர்ச்சியாக இருந்தது போலும். அங்கிருந்த எல்லாரும் என்னை ஆச்சரியமாக பார்த்தார்கள்.

ஸ்டூடியோவில் வேலை செய்வோருக்கும் ஷூட்டிங் புளோருக்கு வந்தவர்களுக்கும், பக்கத்து ஸ்டூடியோவில் ரெக்கார்டிங் வந்தவர்களுக்கும் தகவல் பரவ, என்னை வேடிக்கை பார்க்க வந்துவிட்டார்கள். நான் “காம்போ” வாசித்த நாலு நாட்களும் இந்த வேடிக்கை தொடர்ந்தது.

இப்படி பார்த்துப் போனவர்களில் ஒருவரான டைரக்டர் எஸ்.பி.முத்துராமன் இன்று என்னைப் பார்த்தால்கூட அந்த சம்பவம் பற்றி வியந்து பேசுவார்.

சுவாமிக்கும் என் மீது பிரியம் அதிகமாகிவிட்டது. ‘இத்தனை பெயர் வாங்கியிருந்தாலும் இன்னும் இந்தப் பையன் பெரியவர்களை மதிக்கும் பண்போடு இருக்கிறானே என்று ஏற்பட்ட ஆச்சரியம்தான் என்மேல் அவருக்கான அன்பை கூட்டிற்று என்றும் சொல்லலாம்.

அப்புறம் அந்த இசைப் பயிற்சி என்னாயிற்று என்று கேட்பீர்கள். அது அவ்வளவுதான்.

குருவுடன் சந்திப்பு

இந்த நேரத்தில் மாஸ்டர் தன்ராஜை பார்க்க விரும்பினேன். தன்னிடம் இசை கற்றுக்கொண்டவர்களில் ஒருவராவது தன்னை வந்து பார்க்கவில்லை என்று அவர் குறைப்பட்டுக் கொள்வதை கவனித்திருக்கிறேன்.

ஜோசப்பிடம் கற்றுக்கொள்ள ஆரம்பித்ததில் இருந்து மாஸ்டரின் தொடர்பு நின்று

போனது. இருந்தாலும் அவர் மீதான மரியாதையும் அன்பும் குறையவே இல்லை.

ஒருநாள் கையில் ஒரு ஐயாயிரம் ரூபாய் பணத்தை எடுத்துக்கொண்டு அவரைப் பார்க்கப்போனேன்.

என்னைப் பார்த்ததும் மகிழ்ச்சியை வெளிப்படுத்தியவர், "நீ ரொம்பவும் பிசியா இருப்பதை கேள்விப்பட்டேன். இருந்தாலும் இசையில் மேற்கொண்டு தெரிஞ்சுக்க வேண்டிய விஷயங்கள் எவ்வளவோ இருக்குங்கறதை மறந்துடக்கூடாது. உனக்கு இதுக்காக எப்ப 'டைம்' ஒதுக்கி வர முடியுமோ வா. நான் இருக்கிறேன்" என்றார்.

அவர் கையில் ஐயாயிரம் ரூபாய் பணத்தை வைத்தேன். இப்போது அவர் மிகவும் உணர்ச்சிவசப்பட்டவர் போலானார். "என்கிட்ட எத்தனையோ பசங்க கத்துக்கிட்டு சினிமாவில் நல்லா சம்பாதிக்கிறானுக. இதில் ஒருத்தன்கூட என்னை கவனிக்கணும்னோ, பார்க்கணும்னோ நினைச்சது கிடையாது. பிசியா இருக்கிற நீ என்னை பார்க்க வந்ததே பெரிசு. பணம், காசு கிடக்கட்டும். ஆனா ராஜா நீ 'கிரேட்'டுடா!"

இப்படி அவர் சொன்னது எனக்கு ஆசீர்வாதமாகவே பட்டது."

இவ்வாறு இளையராஜா கூறினார்.

சிக்கல்

தொடர்ந்து வந்த படங்களுக்கான இசையமைப்பின்போது "ஒரு நாள் உன்னோடு ஒரு நாள்" என்ற பாடல், ஒத்திகையின்போது சின்னதாய் ஒரு சிக்கலை ஏற்படுத்தியது இளையராஜாவுக்கு.

அதுபற்றி கூறுகிறார்:

'அன்னக்கிளி' டைரக்டர்கள் தேவராஜ் – மோகன், "பாலூட்டி வளர்த்த கிளி" படத்துக்குப் பிறகு "உறவாடும் நெஞ்சம்" என்ற படத்தை இயக்கினார்கள். இதே நேரத்தில் பஞ்சுவின் "அவர் எனக்கே சொந்தம்" படமும், காரைக்குடி நாராயணனின் 'துர்காதேவி' படம் சங்கரய்யர் டைரக்ஷனிலும் தொடங்கியது.

"உறவாடும் நெஞ்சம்" படத்தில் "ஒருநாள், உன்னோடு ஒரு நாள்" பாடல் பதிவாகும் போது அதிக நேரத்தை எடுத்துக்கொண்டது. பின்னணி இசையில் வயலினோடு ஆர்க்கெஸ்ட்ராவுக்கு கம்போஸ் செய்யப்பட்ட இசை, ஒரு ஒத்திகையிலும் சரியாக வரவில்லை. நேரம் வேறு ஆகிக்கொண்டிருந்தது.

கோவர்த்தன் மாஸ்டர், "சரிய்யா, டேக் போகலாம். அதற்குள் எப்படியாவது பிராக்டீஸ் செய்து வாசிப்பார்கள். சரியாக வந்துவிடும்" என்று நம்பிக்கை கொடுத்தார்.

'டேக்' போய் விட்டோம். எஸ்.பி.பாலசுப்பிரமணியமும் – ஜானகியும் பாடிக்கொண்டிருந்தார்கள். நிறைய டேக்குகள் ஆகிக்கொண்டிருந்ததே தவிர, மி யூசிக் சரியாக வரவில்லை.

கடைசியாக ஒரேயொரு டேக்கில் மிகவும் சரியாக வாசித்து விட்டார்கள். அதுதான் இசைத் தட்டில் இன்றும் இருப்பது.

இதுபோல எத்தனை பாடல்களில் ஒரேயொரு டேக்கில் மட்டும் சரியாகப் பாடியிருப்பார்கள் என்பது எனக்கு மட்டுமே தெரியும்."

**இளையராஜாவை**
**3 படங்களுக்கு ஒப்பந்தம் செய்தார், ஏவி.எம்.**

இளையராஜாவை, தனது 3 படங்களுக்கு இசை அமைக்க "ஏவி.எம்" அதிபர் மெய்யப்ப செட்டியார் ஒப்பந்தம் செய்தார்.

"அன்னக்கிளி" படத்திற்குப் பிறகு இளையராஜாவின் இசையில் வெளிவந்த சில படங்கள், எதிர்பார்த்த வெற்றியைப் பெற+வில்லை. என்றாலும் இசையமைப்புப் பணியில் தீவிரமாகவே இருந்தார் இளையராஜா.

ஏவி.எம். அழைப்பு

இந்த நேரத்தில் அவர் கொஞ்சமும் எதிர்பார்த்திராத சம்பவம் நடந்தது. அது ஏவி.எம். பட அதிபர் மெய்யப்ப செட்டியாரிடம் இருந்து வந்த அழைப்பு.

அதுபற்றி இளையராஜா கூறுகிறார்:

"இசையமைத்த பாடல்கள் பேசப்பட்டாலும், அந்தப் படங்கள் வெற்றிகரமாக ஓடினால்தானே படைப்பாளிக்கான திருப்தி கிடைக்கும். "அன்னக்கிளி"க்கு அடுத்து பெரிய வெற்றியை எதிர்பார்த்த நேரத்தில்தான் ஏவி.மெய்யப்ப செட்டியாரிடம் இருந்து எனக்கு அழைப்பு வந்தது. ஏவி.எம். ஸ்டூடியோவில் அவரை சந்திக்கப் போனேன்.

என்னைப் பார்த்ததும் "நீங்கள்தான் இளையராஜாவா?" என்று கேட்டவர், நேரடியாக விஷயத்துக்கு வந்தார். "நீங்கள் ஏவி.எம். சம்பந்தப்படும் மூன்று படங்களுக்கு இசையமைக்க வேண்டும்" என்றார்.

ஏவி.எம். அவர்களே கேட்கிறார். என்ன சொல்வது என்று யோசனையில் இருந்தபோது, அவரே "என்ன சம்பளம் வாங்குகிறீர்கள்?" என்று கேட்டார்.

இதற்கும் என் பதில் வருவதற்குள் அவரே தொடர்ந்தார். "நாங்கள் எடுக்கும் முதல் படத்துக்கு இவ்வளவு தருகிறோம்" என்று ஒரு தொகையைச் சொன்னார். இரண்டாவது படத்துக்கு அதைவிட ஐயாயிரமும், மூன்றாவது படத்துக்கு இன்னும் ஐயாயிரமும் சேர்த்துத் தருகிறோம்" என்றார். இப்படிச் சொன்னதோடு, "மூன்று படத்துக்குமாக இதை அட்வான்சாக வைத்துக் கொள்ளுங்கள்" என்று ஒரு தொகையை என் கையில் வைத்தார். ஐயாயிரம் ரூபாய் இருந்தது.

சந்தோஷமாக விடைபெற்று வந்தேன்.

ராஜ்கண்ணு

இதற்கிடையே பாரதிராஜா, கிருஷ்ணன் நாயர், சங்கரய்யர், அவினாசி மணி போன்ற பல டைரக்டர்களிடம் உதவியாளராக இருந்து, அந்த அனுபவத்தில் சொந்த ஊரான பொள்ளாச்சியில் இருந்து படம் தயாரிக்கும் ஆர்வத்துடன் வந்திருக்கிறார் ராஜ்கண்ணு.

வந்த வேகத்தில் பாரதிராஜாவை சந்தித்து தன் விருப்பத்தை சொன்னார்.

பாரதிராஜா ஏற்கனவே என்.எப்.டி.சி. நிதி உதவியுடன் தயாரிக்க தயார் நிலையில் வைத்திருந்த "மயில்" படத்தின் கதையைச் சொல்ல, ராஜ்கண்ணுவுக்கு பிடித்துவிட்டது. "மயில்" கதையை படமாக்கும் முடிவுக்கு வந்தார். இந்தப்படம் மூலமாக டைரக்டராகிவிட்ட பாரதிராஜாவுடன், நான் இசையமைப்பாளராக கைகோர்ப்பேன் என்பது நானே எதிர்பார்த்திராத விஷயம்.

சிவாஜி படம்

அப்போது நடிகர் திலகம் சிவாஜியை வைத்து, நடிகர் பாலாஜி தொடர்ச்சியாக படங்கள் எடுத்து வந்தார். பாலாஜி ஒரு மலையாளப்படத்தை தமிழில் எடுக்கப்போவதாகவும், நான் இசையமைக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். மலையாளப்படத்தை எனக்கு திரையிட்டுக் காட்டினார்.தமிழில் அதற்கு "தீபம்" என்று பெயர் சூட்டினார்கள். ஏ.எல்.நாராயணன் வசனம் எழுதினார். இவர் பார்ப்பதற்கு என் அண்ணன் 'பாவலர்' போலவே இருப்பார். சிரிப்பது, பேசுவது எல்லாமே எனக்கு அண்ணனை ஞாபகப்படுத்தும். என்னவொரு வித்தியாசம் என்றால் அண்ணன் கறுப்பு.

இந்த 'தீபம்' படம்தான் என் இசை வாழ்வில் எனக்கு இரண்டாவது வெற்றிப்படமாக அமைந்தது.

அதுவரை அண்ணன் சிவாஜியை பார்த்ததில்லை. வாகினி ஸ்டூடியோவில் 'தீபம்' பட பூஜை நடந்தபோது, சிவாஜி வந்திருந்தார். பாலாஜியும், ஏ.எல்.நாராயணனும் என்னை சிவாஜியிடம் அறிமுகப்படுத்தினார்கள்.

அப்போது எனக்கு டைரக்டர் மகேந்திரன் (அப்போது அவர் டைரக்டர் ஆகியிருக்கவில்லை) சொன்ன ஒரு சம்பவம் நினைவுக்கு வந்தது.

அப்போது, சிவாஜி நடித்து வெற்றிகரமாக ஓடிய "தங்கப்பதக்கம்" படத்தின் வசனகர்த்தா, மகேந்திரன்.

அவரும் கதாசிரியர் – டைரக்டர் குகநாதனும் சிவாஜியை பார்த்துவர அவரது வீட்டுக்குப் போயிருக்கிறார்கள். அவர் அவர்களிடம் பேசினாரே தவிர, உட்காரச் சொல்லவில்லை.

அதே நேரத்தில் வசனகர்த்தா பாலமுருகன் வந்திருக்கிறார். அவரைப் பார்த்ததும் "வாடா பாலமுருகா! உட்கார்!" என்று உட்காரச் சொல்லியிருக்கிறார்.

பாலமுருகனோ மகேந்திரன் நிற்பதைப் பார்த்து "உட்காருங்கள்" என்று சொல்லிய பிறகே சிவாஜி "உட்கார், மகேந்திரா!" என்று சொன்னார்.

பாலமுருகன் வசனம் எழுதி சிவாஜி நடித்த "ராஜபார்ட் ரங்கதுரை" தோல்வி அடைந்திருந்த நேரம் அது.

சிவாஜியின் எண்ண ஓட்டத்தைப் புரிந்து கொண்ட மகேந்திரன், "இல்லண்ணே! நான் இப்படியே நிற்கிறேன்" என்று சொல்லியிருக்கிறார்.

சிவாஜியை "தீபம்" பட செட்டில் பார்க்கப் போகிற நேரத்தில் மகேந்திரன் சொன்ன சம்பவம் நினைவுக்கு வர, இதோ மேக்கப் ரூமில் இருந்த சிவாஜியை நெருங்கி விட்டேன். பாலாஜி என்னை சிவாஜியிடம் அறிமுகப்படுத்தினார். உடனே அவர்,

பாலாஜியையும், ஏ.எல்.நாராயணனையும் உட்காரச் சொன்னார். அவர்கள் உட்கார்ந்தார்கள். அவர்களுடன் நானும் ‘படக்’கென உட்கார்ந்துவிட்டேன். அதிலிருந்து என்னை எங்கே கண்டாலும் உடனே உட்காரச் சொல்லிவிடுவார்.

பிற்காலத்தில் இதை நினைத்து வருத்தப்பட்டிருக்கிறேன். அவர் முன் நின்றால் என்ன தவறு? உட்கார்ந்தால் மட்டும் சிவாஜியோடு சரி சமம் ஆகிவிடுவேனா! என்று என்னையே நான் பலமுறை கேட்டுக் கொண்டிருக்கிறேன்.

பெரியவர்களுக்கு மரியாதை அளிக்கும் பண்பு இளைய தலைமுறையிடம் எப்படி மழுங்கடிக்கப்பட்டிருக்கிறது என்பதற்கு இதுவே உதாரணம். அதாவது ‘அன்றைய’ நானே உதாரணம்!

தீபம் படம் 100 நாள் ஓடி சாந்தி தியேட்டரில் விழா எடுக்கப்பட்டது.

வாலியின் பாடல்

இதைத்தொடர்ந்து டைரக்டர் ஏ.சி.திரிலோகசந்தரிடம் இருந்து வந்ததே “பத்ரகாளி” படத்துக்கான அழைப்பு.

இங்கேதான் முதன்முதலாக கவிஞர் வாலி என் இசையமைப்பில் பாடல் எழுதினார். அப்போது எனக்கும், அவருக்குமான ஒரு பழைய சம்பவத்தை வாலி நினைவுபடுத்தினார்.

பிரசாத் புரொடக்ஷன்ஸ் தயாரிப்பில் ‘பிதாயி’ என்ற இந்திப்படம் வந்தது. இந்தப்படத்தை தமிழில் எடுக்க முடிவு செய்தார் தயாரிப்பாளர். படத்துக்கு ‘பிரியாவிடை’ என்று பெயர் வைக்கப்பட்டது.

இசை ஜி.கே.வெங்கடேஷ். இந்திப்படத்தின் ஒரு பாடல் காட்சியில் ‘ஒரு சீட்டுக்கட்டு ராஜாராணி’ போல நாயகன் – நாயகியை மாற்றி, முழுக்க முழுக்க ‘ஸ்லோமோஷனில்’ பாடல் முழுவதையும் உதட்டசைவு மாறாத வகையில் படமாக்கி இருந்தார். இந்த இந்திப்பாடல் ‘ஹிட்’ ஆனதால் அதே மெட்டை தமிழிலும் போட எல்.வி.பிரசாத் விரும்பினார். ஜி.கே.வெங்கடேஷும் “ஓ.கே” சொன்னார்.

பாட்டெழுத கவிஞர் கண்ணதாசன் வந்து விட்டுப் போனார். அந்தப்பாடல் டைரக்டருக்கும், எல்.வி.பிரசாத்துக்கும் பிடிக்கவில்லை. அதனால் வாலியை பாட்டெழுத அழைத்தார்கள். அவரும் வந்தவுடன் டியூனை கேட்டுவிட்டு, “ராஜாவைப் பாருங்க” என்று பல்லவியை தொடங்கி விட்டார். இது எல்லாருக்கும் பிடிக்க ஓ.கே. சொல்லிவிட்டார்கள்.

நான் மட்டும் வாலி அண்ணனிடம், “அண்ணா! வரிகள் டியூனுக்கு சற்று மாறி வந்திருக்கிறது” என்றேன்.

“எப்படி?” என்று திருப்பிக் கேட்டார் வாலி.

“டியூனின் சத்தம் ‘தானா தானானா’, ‘தானானத் தானானா’ என்று வருகிறது. இதில் முதல் ‘சந்தம்’ தானா என்று தான் வருகிறது. நீங்கள் ‘ராஜாவை’ என்று தொடங்கியதால் சந்தம் ‘தானானா’ என்று மாறி வருகிறது” என்றேன்.

“இன்னொரு தடவை சொல்லு” என்றார் வாலி.

“தானா தானானா தானானத் தானானா” என்று பாடினேன்.

உடனே அவர், “ராஜா பாருங்க! ராஜாவைப் பாருங்க என்று வைச்சுக்கோ” என்றார்.

“இது சரியாக இருக்கிறது” என்றேன்.

மோதல்

அன்றிரவு எம்.எஸ்.விஸ்வநாதனின் பிறந்த நாள் பார்ட்டியில் ஜி.கே.வெங்கடேஷை பார்த்த வாலி, “யோவ்! சாதாரண கிட்டார்காரனைவுட்டு சந்தத்துக்கு சரியா பாட்டெழுதலைன்னு சொல்லவெச்சு என்னை அவமானப்படுத்திட்டேயில்ல?” என்று சத்தம் போட்டிருக்கிறார்.

ஜி.கே.வி.யும் விட்டுக் கொடுக்காமல், “அதெல்லாம் இல்ல வாலி! சரியா வர்றதுக்குத்தானே எல்லாரும் சொல்வாங்க. அதிலென்ன தப்பு?” என்று சொல்லி சமாதானப்படுத்தியிருக்கிறார்.

இந்த சம்பவத்தை இப்போது என்னிடம் நினைவு கூர்ந்த வாலி, “இப்போ, பத்ரகாளி படத்துக்கான பாட்டு என்ன சிச்சுவேஷன்?” என்று கேட்டார்.

சிச்சுவேஷனை வசனகர்த்தா ஆரூர்தாஸ் சொல்ல, நான் டியூனை பாடிக்காட்டினேன். தம்பி கங்கை அமரன் எழுதி, பக்திப்பாடலாக்க முயற்சி செய்த டியூன் அது.

அதை வாசித்தேன். கேட்டு விட்டு “கண்ணன் ஒரு கைக்குழந்தை” என்று ஆரம்பித்து முழுப்பாடலையும் முடித்தார்.

அடுத்த பாடல்தான் “வாங்கோன்னா, அட வாங்கோன்னா.”

இந்தப் படத்தில் நாயகியாக நடித்த ராணி சந்திரா விமான விபத்தில் மரணமடைந்து விட்டார். திரிலோகசந்தர் ஒருவழியாக சமாளித்து படத்தை முடித்தார். படம் பெரிய வெற்றி.

இந்தப்படத்தின் பின்னணி இசையமைப்பின்போதுதான் இரண்டாவது தடவையாக மூகாம்பிகை போகமுடிந்தது.

இது என் மூன்றாவது வெற்றிப்படம்.”

**பாரதிராஜாவின் "16 வயதினிலே"**
**இசை அமைக்க இளையராஜா மறுப்பு!**
**ஜி.கே.வெங்கடேஷ் தலையிட்டு, சம்மதிக்க வைத்தார்**

பாரதிராஜா டைரக்ட் செய்த முதல் படம் "16 வயதினிலே." ஏற்கனவே பாரதிராஜாவிடம் செய்திருந்த சபதம் காரணமாக, இந்தப் படத்துக்கு இசை அமைக்க இளையராஜா மறுத்தார். கடைசியில், குரு ஜி.கே.வெங்கடேஷ் தலையிட்டு, இளையராஜாவை சம்மதிக்க வைத்தார்.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:—

"16 வயதினிலே கதையைக் கேட்டு ராஜ்கண்ணு 'ஓ.கே' சொன்னதும், கதாநாயகனாக யாரைப்போடலாம் என்று கேட்டார். அப்போது சிவகுமார் நடித்த "அன்னக்கிளி" போன்ற படங்கள் நன்றாகப் போனதால் ராஜ்கண்ணு பாரதிராஜாவிடம், "சிவகுமாரைப் போடலாமே" என்று கூறியிருக்கிறார்.

கமலஹாசன்

பாரதிராஜாவோ திட்டவட்டமாக மறுத்து, "இந்தக் கதைக்கு கமலஹாசன்தான் சரியாக இருப்பார்" என்று தன்பக்க காரணங்களை எடுத்து வைத்திருக்கிறார். அதனால் "கமலஹாசனே நடிக்கட்டும்" என்று ராஜ்கண்ணு கூறிவிட்டார்.

பாரதி சொன்னது சரிதான். சிவகுமார் நன்றாகவே செய்திருக்கலாம். கமலஹாசன் இடத்தில் சிவகுமாரை இப்போது நம்மால் கற்பனைசெய்து பார்க்க முடியுமா?

இசையமைப்பாளர் யார்?

அடுத்து இசையமைக்க யாரைப் போடலாம் என்ற பேச்சு வந்தபோது, பாரதி, "இளையராஜாவைப் போடலாம்" என்று என் பெயரை சொல்லியிருக்கிறார்.

"என்ன பாரதி! விளையாடறீங்களா? இளையராஜாவாவது கிடைக்கிறதாவது? அவர் இருக்கிற பிஸியில இதுமாதிரி படத்துக்கெல்லாம் வருவாரா?" என்று கேட்டிருக்கிறார், ராஜ்கண்ணு.

"இல்லையில்லை. இளையராஜா என் நண்பன்தான்" என்று பாரதி சொல்ல, ராஜ்கண்ணு நம்பவே இல்லை.

உடனடியாக நம்ப வைக்க ஏதாவது செய்தாக வேண்டுமே என்று எண்ணிய பாரதி, என் அண்ணன் பாஸ்கரை அழைத்துக்கொண்டு ராஜ்கண்ணுவை போய் பார்த்திருக்கிறார்.

"வாங்க பாரதி" என்றவர், "இவர் யாரு?" என்று பாஸ்கரை கேட்டிருக்கிறார். "இவர் இளையராஜாவின் அண்ணன் பாஸ்கர்" என்று பாரதி சொல்ல, உடனே பாஸ்கருக்கு ராஜமரியாதை கிடைத்திருக்கிறது. இப்போது 'உண்மையிலேயே இளையராஜா பாரதிராஜாவின் நண்பர்தான் போலிருக்கிறது' என்று நம்ப ஆரம்பித்திருக்கிறார்.

ராஜ்கண்ணு பாஸ்கரிடம், "தம்பியிடம் சொல்லி படத்துக்கு இசையமைக்க ஏற்பாடு செய்யவேண்டும்" என்று சொல்லியிருக்கிறார்.

“அதுக்கென்ன சார்! இதில் ஒரு பிரச்சினையும் இல்லே. தம்பிகிட்ட நான் சொல்றேன்” என்று பாஸ்கரும் தன் பங்குக்கு படுகூலாக சொல்லிவிட்டார்.

அதே வேகத்தில் என்னிடம் வந்து, “டேய்.. பாரதிக்கு படம் வந்திருக்கிறது. நாமதான் மியூசிக்” என்று சொன்னார்.

நான் அண்ணனிடம், “பாரதியின் இந்தப் படத்திற்கு நான் இசையமைக்கப்போவதில்லை” என்றேன்.

அண்ணன் அதிர்ந்து போனார். “என்னடா சொல்றே?” என்று, தன் அதிர்ச்சியை வார்த்தைகளிலும் வெளிப்படுத்தினார்.

பாரதிக்கும், எனக்கும் ஏற்கனவே இருந்த பந்தயம் பற்றி அண்ணனிடம் விவரித்தேன். “பாரதியின் முதல் படத்துக்கு அண்ணன் ஜி.கே.வெங்கடேஷ்தான் இசையமைக்க வேண்டும். இரண்டாவது படத்துக்குகூட நான் இசையமைக்கும்படி ஜி.கே.வி.தான் சொல்ல வேண்டும்” என்றேன்.

பாஸ்கருக்கு என் பிடிவாத குணம் தெரியும். ஒரு முடிவெடுத்தால் அதில் இருந்து என்னை மாற்றிக்கொள்ள மாட்டேன் என்பதை அறிவார். அதனால் பாரதியை சந்தித்தவர், “விடு! எங்கே போயிடப்போறான்? இரண்டு மூணு நாள் விட்டுப் பிடிச்சா எல்லாம் சரியாப் போயிடும்” என்று சமாதானம் சொல்லியிருக்கிறார்.

அவர் சொன்ன மூன்று நாள் மட்டுமல்ல... மூன்று வாரம் போனபோதும் என் நிலை அதுவாகத்தான் இருந்தது.

வாரங்கள் ஓடி மாதங்களானபோது, சகோதரர்களுக்குள் பிரச்சினை ஆகிவிட்டது. பாஸ்கரும், அமரும் (கங்கை அமரன்) என்னை பாரதி படத்துக்கு இசையமைக்க வற்புறுத்தினார்கள்.

பாரதியோ, இந்த காலக்கட்டத்தில் என்னைப் பார்க்க வரவேயில்லை. நானும் இறங்கி வருவதாக இல்லை.

ராஜ்கண்ணுவோ, “என்னாச்சு? என்னாச்சு?” என்று என் விஷயமாய் அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தார்.

ஜி.கே.வி. சமரசம்

இனியும் பொறுப்பதில்லை என்ற முடிவுக்கு வந்த பாஸ்கர், நேராக ஜி.கே.வி.யிடம் போய்விட்டார். அவரிடம் முழு விஷயத்தையும் சொல்லியிருக்கிறார்.

ஜி.கே.வி. என்னை கூப்பிட்டு அனுப்பினார். என்னிடமும் விஷயத்தைக் கேட்டுக்கொண்டவர், “சரிடா! போ! வேலையைச் செய்” என்றார்.“இல்லண்ணா! நான் சொன்னா சொன்னதுதான்” என்றேன்.

“என்ன, சொன்னா சொன்னதுதான்! நான் இசையமைக்கச் சொன்னாத்தான் பாரதி படத்துக்கு இசையமைப்பேன்னு சொல்லியிருக்கே அதானே?” ஜி.கே.வி. கேட்க, “ஆமா! அதுமட்டுமில்ல. பாரதிக்கு முதல் படம் நீங்கதான் இசையமைக்கணும். இரண்டாவது படத்தைக்கூட நீங்க சொன்னாத்தான் நான் இசையமைக்கறதா

ஐடியா.”

அவருக்கு கொஞ்சம் கோபம் எட்டிப் பார்த்தது. “என்னடா இதெல்லாம், சின்னப்பசங்க மாதிரி! நான்தான் சொல்றேனில்லே... போடா, போய்ச் செய்” என்றார். இதற்குப்பிறகும் மறுக்க முடியவில்லை. ஒத்துக்கொண்டேன்.

பாடல் பதிவுடன் பூஜை என்று முடிவு செய்யப்பட்டது. கம்போசிங்கிற்காக ராஜ்கண்ணுவின் ஆபீசுக்குப் போனேன்.

பூஜைப் பாடலாக, சப்பாணியை வெறுத்து வந்த மயிலுக்கு மனமாற்றம் ஏற்பட்டு, அந்த மனமாற்றம் சப்பாணிக்கும் தெரிய வருகிற ஒரு பாடலை கம்போஸ் செய்யலாம் என்று பாரதி சொன்னார்.

மெட்டு பற்றி பிரச்சினை

இதற்கிடையில், என்னுடைய ஒரு டியூனை என்னைக் கேட்காமல் பாரதியிடம் பாஸ்கர் பாடிக்காட்டி, “ஓ.கே”யும் செய்து வைத்திருக்கிறார். இது எனக்குத் தெரியாது. கம்போசிங் தொடங்கும் முன்பு அதைப் பாடிக்காட்டச் சொன்னார்கள்.

‘சும்மா கேட்பதற்காகத்தான் போலிருக்கிறது’ என்று எண்ணி நான் அந்த டியூனை பாடிக்காட்டினேன்.

“இதுவே போதும். இது ஓ.கே” என்றார் பாரதி.

அந்த டியூனை பஞ்சு சார் (பஞ்சு அருணாசலம்) ஏற்கனவே அவரது ‘கவிக்குயில்’ படத்துக்கு “ஓ.கே” செய்து இருக்கிறார்.

இப்போது இவர்களும் “ஓ.கே” சொல்லியிருக்கிறார்கள்!

எனக்கு மனசுக்கு கஷ்டமாயிருந்தது. என் இக்கட்டான நிலையை பாரதியிடம் விளக்கினேன்.

பாரதியோ, “பாஸ்கர் இதை பாடிப்பாடி அதற்கேற்ப எப்படி எப்படி ‘ஷாட்ஸ்’ எடுக்கவேண்டும் என்று மனதில் நிறைய கற்பனைகளை செய்து வைத்துவிட்டேன்” என்றார். அதோடு, “நான் நினைத்திருக்கும் அந்தக் காட்சிக்கு இதுபோல எந்த டியூனுமே அமையாது” என்றும் உறுதிபடக் கூறிவிட்டார்.

நான் விடவில்லை. “அது எப்படி பாரதி? நான் பஞ்சு சார் செலக்ட் பண்ணின டியூனை ‘இது பாரதிக்கு வேணுமாம்’ என்று எப்படிச் சொல்வேன்? இதைவிட நல்லா டியூனா உனக்குப் போடறேன்” என்றேன்.

பாரதி வேண்டா வெறுப்பாக, “ம்... ம்... உன் இஷ்டம்” என்றார்.

டியூன் கம்போஸ் செய்யத் தொடங்கியபோது, உற்சாகமின்றி உட்கார்ந்திருந்தார். என்ன பாடினாலும் கவனிக்காமல் சிரத்தையின்றி இருந்தார். கடைசியாக ஒரு டியூனை அடிக்கடி பாடிக்காட்டி “இது நல்லா வரும்” என்றேன்.

பாரதி அரை மனதுடன்தான் அந்த டியூனுக்கு ‘ஓ.கே’ சொன்னார். பாடலை எழுத கவிஞர் கண்ணதாசனை அழைக்கலாம் என்று

சொன்னேன்."கவிஞருக்கு எவ்வளவு பணம் கொடுக்க வேண்டுமோ? அதற்கு புரொடியூசர் என்ன சொல்வாரோ?" என்றார், பாரதி. "அதை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றேன்.

கவிஞர் அப்போது ஒரு பாட்டுக்கு ஆயிரமோ ஆயிரத்து ஐநூறோ வாங்கிக் கொண்டிருப்பார். நான் கவிஞரின் உதவியாளர் கண்ணப்பனிடம், "இது சின்னக் கம்பெனி படம். பாட்டுக்கு 750 ரூபாய் வாங்கிக்கச் சொல்லுங்க" என்றேன்.

**“16 வயதினிலே” பாடல் பதிவு**
**எஸ்.பி.பாலசுப்பிரமணியத்துக்கு பதிலாக மலேசியா வாசுதேவன்**

“16 வயதினிலே” படத்தில், எஸ்.பி.பாலசுப்பிரமணியம் பாடவேண்டிய ஒரு பாடலை, அவருக்கு தொண்டை கட்டிக்கொண்டதால் மலேசியா வாசுதேவன் பாடினார்.

“16 வயதினிலே” படத்தின் பாடல் பதிவு அனுபவம் பற்றி இளையராஜா தொடர்ந்து கூறியதாவது:–

“பட்ஜெட் படம் என்னும்போது செலவுகளை ஆரம்பத்தில் இருந்தே மட்டுப்படுத்தியாக வேண்டும். அதை மனதில் வைத்தே என் இசை சம்பந்தப்பட்ட பாட்டு விஷயத்தில் நானும் முயற்சி செய்தேன். அந்த அடிப்படையில்தான் கவிஞரின் உதவியாளர் கண்ணப்பனிடம் பாட்டுக்கான சம்பளத்தை பாதியாக குறைத்துக்கொள்ளச் சொன்னேன்.

நான் கேட்டுக்கொண்ட சம்பளக் குறைப்பு பற்றி கண்ணப்பன் கவிஞரிடம் சொல்லியிருக்கிறார். அவரோ, “பணம் என்னடா பணம்! அதெல்லாம் ஒரு விஷயமா! வா, ராஜாவுக்கு நாம பாட்டு எழுதிட்டு வரலாம்” என்று புறப்பட்டு நேராக வந்துவிட்டார்.

கவிஞர் எழுதிய பாடல்கள்

பாடல் வரவேண்டிய இடத்துக்கான காட்சியை கவிஞரிடம் பாரதி விவரித்து சொன்னார். உடனே என்னைப் பார்த்த கவிஞர் “என்ன டியூன்?” என்று கேட்டார்.

நான் பக்கவாத்தியங்களோடு அந்த மெட்டை பாடிக்காட்டினேன். பாரதி, அரைகுறை மனதுடன் “ஓகே” செய்த மெட்டு அது.

“16 வயதினிலே” கிராமத்து பின்னணியில் அமைந்த படம் என்பதை மனதில் கொண்ட கவிஞர், சிறிது நேரம் யோசித்துவிட்டு, “செவ்வந்திப்பூ முடிச்ச சின்னக்கா ஹோய் சின்னக்கா” என்று எழுதினார்.

பாடல் திருப்தியாக வந்தது.

இரண்டாவது பாடல், மயிலிடம் சப்பாணி பாடுவதுபோல் வருகிறது. சந்தைக்குப் போகும் சப்பாணியும் மயிலும் நடந்து போகும் வழியில் பாடும் பாட்டு. மயில் வருத்தத்தில் இருக்க அவளை சப்பாணி சந்தோஷப்படுத்த முயற்சிக்கிற மாதிரியான பாட்டு.

இதில் சப்பாணி (கமலஹாசன்) பாடிக்கொண்டே போக, இடையில் ஒரு ஹம்மி ங்கோடு ஒரு பெண் குரல் ஒன்று ஒலிக்கிறது.

மயிலும் சப்பாணியும் எங்கிருந்து வருகிறது அந்தப் பெண் குரல் என்று தேடித்தேடி பார்க்கிறார்கள். கடைசியில் ஒரு கிழவி பாடுவதாக காட்டப்படும் என்று பாரதி, கவிஞரிடம் விளக்கினார்.

சரஸ்வதி கடாட்சம்

நானும் பாரதியும் ஏற்கனவே இந்தப் பாட்டி பற்றி யோசித்து வைத்திருந்தோம். “என்ன பாட்டி! மஞ்சக் குளிச்சிருக்கியே!” என்று கேட்டு, “பழைய நினைப்புடா பேராண்டி” என்று சொல்லும் கிராமத்துப் பேச்சை நினைவில் வைத்திருந்தோம். அதாவது, இப்படி கிழவி சொல்கிற மாதிரி முடிந்தால் நன்றாக இருக்கும் என்பது எங்கள் கருத்து. ஆனால் அதை கவிஞரிடம் சொல்லவில்லை.

கவிஞரோ பாடலை “ஆட்டுக்குட்டி முட்டையிட்டு” என்று தொடங்குவதாக அமைத்து கிழவி காட்டப்படும்போது “பழைய நினைப்புடா பேராண்டி... பழைய நினைப்புடா!” என்று அவள் சொல்வது போல் முடித்தார்.

நாங்கள் சொல்லாமலே, கவிஞர் எங்கள் மனதில் இருந்ததை எழுதியது எங்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. கவிஞருக்கு இருந்த சரஸ்வதி கடாட்சம் அது.

பாலுவுக்கு யோசனை

மறுநாள் பூஜை.

“செவ்வந்தி பூ முடிச்ச” பாடலை எஸ்.பி.பாலசுப்பிரமணியத்தை பாட வைக்கலாம் என்று முடிவு செய்து, ரிகர்சலுக்கு அழைத்தோம். பாலு வந்தார். ரிகர்சல் எல்லாம் முடிந்து கிளம்பும்போது பாலுவை தனியாக அழைத்தேன். “பாலு ராத்திரியெல்லாம் வெளியே சுத்தறதை விட்டுடு. நண்பர்களுக்காக வெளியே போனேன். விடிய விடிய ஊர் சுத்தினதுல தொண்டை கட்டிக்கிட்டுதுன்னு சொல்லாதே. இல்லேன்னா இந்தப் பாடல் வேறு யாருக்காவது போய்விடும்” என்று சொன்னேன்.

பாலுவும் ‘சரி’ என்று சொல்லிப் போனதோடு சரி.

மறுநாள் காலை 7 மணிக்கு ஏவி.எம்.மில் பாடலுக்கான மியூசிக்கையெல்லாம் கம்போஸ் செய்து விட்டேன். ‘டிபன் பிரேக்’கை தொடர்ந்து காலை 9 மணிக்கு மேல் பூஜை தொடங்கியது.

ரிகர்சல் தொடங்கி பாடலுக்கான வடிவங்களை தயார் செய்த நிலையில் 11 மணி.

பாலு அப்போதும் வரவில்லை. ஆளாளுக்கு தேடினோம். 11–30 மணிக்கு பாலு என்னிடம் நேராக வந்து, “டேய்! தொண்டையெல்லாம் கட்டிப் போச்சுடா...” என்று, கட்டைக்குரலில் விஷயத்தை சொன்னான்.

“பார்த்தியா? நேத்தே நான் சொன்னேன் இல்லையா? அதையே செஞ்சிட்டு வந்து நிக்கறியே” என்றேன்.

என்னிடமும் பாரதியிடமும் ‘சாரிடா’ என்று சொல்லிவிட்டு பாலு கிளம்பிவிட்டான்.

எல்லாம் ரெடியாகிவிட்டது. ஜானகி கோரஸ் ரிகர்சல் கூட முடிந்து விட்டது.

பாலுவுக்குப்பதிலாக யாரை பாட வைப்பது? அப்போது ‘டிராக்’கை தனியாக ரெக்கார்டு செய்யும் பழக்கம் கிடையாது. மேலும் அது பூஜையின்போது பதிவு செய்யப்படும் பாட்டு. பாடுபவர் இருக்க வேண்டும்.

மலேசியா வாசுதேவன்

யோசித்தேன். என் கண்ணில் பூஜைக்கு வந்த மலேசியா வாசுதேவன் பட்டார்.

மலேசியா வாசுதேவனை அழைத்தேன். “இந்தப் பாட்டை கத்துக்கோ” என்று பாடலை சொல்லிக் கொடுத்தேன்.

அதன்படி வாசுவும் பாட, பாடலை பதிவு செய்தேன்.

மதிய உணவுக்குப்பிறகு, “ஆட்டுக்குட்டி முட்டையிட்டு” பாடலை பதிவு செய்யவேண்டும்.

இதை சப்பாணி போலவே பாட வைக்க வாசுவை தயார் செய்தேன்.

ஆனால் வாசுவோ ரிகர்சலில் எல்லாம் சரியாக பாடிவிட்டு, “டேக் போகும்போது மாற்றி பாடிவிட்டார். ‘பாடத் தெரியாதவன் போல் பாடினால் நமக்கு பாடத்தெரியாது என்று எல்லோரும் நினைத்து விடுவார்களோ’ எனப்பயந்து, சாதாரண பின்னணி பாடகர் போல பாடிவிட்டார். இதுவரை வராத பாடலாக இருக்க வேண்டும் என நான் எடுத்த முயற்சியெல்லாம் இப்போது விழலுக்கிறைத்த நீராகிவிட்டது.

இப்போதும் அந்தப் பாடலை நீங்கள் கேட்டுப் பாருங்கள். ஒரு அறியாத பட்டிக்காட்டான் பாட்டில் வரும் எளிமைத்தனம் அதில் இருக்காது. விவரம் புரிந்த கிராமத்தான் பாடுவது போல்தான் இருக்கும்.

இதுபோன்ற இழப்புகள் ஒரு இசையமைப்பாளர் என்ற முறையில் ஏராளம்.

அடுத்த பாடல் ரெக்கார்டிங் செய்யவேண்டிய நேரம் வந்தது.

மயில் (ஸ்ரீதேவி) தன் கற்பனையில் தனக்கு வரும் காதலன் எப்படி இருப்பான் என்று கனவு காணும் மனநிலையில் பாடும் பாட்டு என்று பாரதி சொன்னார்.

அப்போதெல்லாம் எந்த டைரக்டரும் இசையமைப்பாளரிடம் ‘இந்தப்பாடல் இதுபோல இருக்கலாம். அல்லது இந்த மாதிரி இருக்கலாம்’ என்று அபிப்ராயமோ, ஆலோசனையோ சொல்வது கிடையாது. பாடல் சூழ்நிலையை விளக்கிவிட்டு, அத்துடன் விட்டுவிடுவார்கள். இசையமைப்பாளரும், கவிஞரும் என்ன கொடுக்கிறார்களோ, அதை அப்படியே ஏற்றுக்கொள்வார்கள்.

தேவைப்பட்டால் சிறுசிறு மாற்றம் வேண்டுமென்று கேட்பார்கள். அதை அவர்களும் உடனே செய்து விடுவார்கள்.

அந்தப் பாடல் காட்சிக்கு சில டியூன்களை போட்டேன். எதுவும் பாரதிக்கு பிடித்த மாதிரி தெரியவில்லை. பின்னர் ஒரு டியூனை போட்டு, “பாரதி! இது நன்றாக இருக்கும்” என்று வற்புறுத்தினேன். அதுதான் “செந்தூரப்பூவே...” பாடல் மெட்டு. மெட்டு நன்றாக அமைந்துவிட்டதால் மேற்கொண்டு ‘டியூன்’ எதுவும் கம்போஸ் செய்யாமல் விட்டுவிட்டேன். அதனால் அந்த டியூன்தான் அந்தக் காட்சிக்கென்று முடிவாகிவிட்டது.

“இந்த மெட்டுக்கு கவிஞரை வைத்து பாட்டு எழுதச் சொல்லலாமா?” என்று பாரதியிடம் கேட்டேன். “புதிதாக யாரையாவது வைத்து எழுதலாம்” என்றார் பாரதி. அதோடு நில்லாமல், “ஏன் அமரனே எழுதட்டுமே” என்றார்.

அமர் உள்பட எங்கள் எல்லோருக்குமே கவிஞர் கண்ணதாசன் மட்டுமே கவிஞராகத் தெரிந்தாரேயன்றி, வேறு யாரையும் கவிஞராகக் கருத முடியவில்லை. ‘அமரன் எழுதட்டும்’ என்று பாரதி சொன்னதற்கு நான் பதில் ஒன்றும் சொல்லவில்லை. அமரன் வேண்டாம் என்று தடுக்கவும் இல்லை.

**இளையராஜா இசை அமைப்பில்**
**'செந்தூரப்பூவே' பாடலை எழுதினார், கங்கை அமரன்**
**சினிமா பாடலாசிரியராக அறிமுகம்**

பாரதிராஜா இயக்கத்தில் "16 வயதினிலே" படத்தில், திரைப்பட பாடலாசிரியராக அறிமுகமானார், கங்கை அமரன். இவர் எழுதிய 'செந்தூரப்பூவே' பாடல் படத்தில் பிரபலமானதோடு, பாடிய ஜானகிக்கும் தேசிய விருது பெற்றுத்தந்தது.

இதுபற்றி இளையராஜா கூறுகிறார்:—

"அதுவரையில் நான் இசையமைத்த படங்களில்கூட பாடல் உருவாகும் சந்தர்ப்பங்களில் கங்கை அமரன் பற்றிய நினைவே வரவில்லை. இத்தனைக்கும் எல்லா கம்போசிங்கின்போதும், ரெக்கார்டிங்கிலும் அவன் கூடவே இருந்தான். அவனை என்னோடு இருக்கும் ஒருவனாகத்தான் எண்ணினேனே தவிர, அவனுக்கு பாடல் கொடுக்க வேண்டுமென்று நினைக்கவே வாய்ப்பில்லாமல் போயிற்று.

ஆனால், பாரதி அப்படியில்லை. உடனிருப்பவர்களை விட்டுவிடாது, அவரவர் திறமைக்கேற்ப அவர்களையும் உற்சாகப்படுத்தி வேலை வாங்க வேண்டும் என்ற நல்லெண்ணம் அவருக்குள் ஓடிக்கொண்டிருந்ததை வெளிப்படுத்தினார். அந்த வெளிப்பாடுகளில் ஒன்றுதான் அமருக்கு பாட்டெழுத அவர் கொடுத்த வாய்ப்பு.

அமரும் டியூனைக் கேட்டுவிட்டு "செந்தூரப்பூவே" பாடலை எழுதினான். பாடுவதற்கு, டியூனோடு நன்றாக இருந்தது.

"செந்தூரப்பூவே" பாடலை எஸ்.ஜானகி அருமையாகப் பாட, பாடல் பதிவாகியது.

விவாதம்

செந்தூரம் என்றால் குங்குமம். ஆனால் செந்தூரப்பூ என்றால்? அப்படியொரு பூ இருக்கிறதா?

இப்படியொரு கேள்வி எனக்கும், பாரதிக்கும் தோன்றியபோது அதையே அமரிடம் கேட்டோம். அவனோ அவன் பாணியில் விளக்கங்கள் சொல்ல ஆரம்பித்து விட்டான்.

"சரி சரி! அப்படியே இருக்கட்டும். செந்தூரப்பூ என்று ஒரு 'பூ' இருப்பதாக ஒத்துக்கொள்கிறோம் என்று 'செந்தூரப்பூ' சர்ச்சையை அத்துடன் முடித்துக்கொண்டு, அந்தப் பாடலை பதிவு செய்தோம். இந்த வகையில் கங்கை அமரனை திரைப்பட பாடலாசிரியர் ஆக்கிய வகையில், அவன் ஜென்ம ஜென்மத்துக்கும் நன்றிக்கடன் செலுத்தவேண்டியது பாரதிக்குத்தானே தவிர, எனக்கல்ல.

பிரமிப்பு

படம் ஷூட்டிங் முடிந்து எடிட்டிங்கும் நிறைவு பெற்று, பின்னணி இசை சேர்ப்புக்கு வந்தது.

படத்தைப் பார்த்தேன்.

‘அடடே! பாரதிக்குள் இவ்வளவு பெரிய கலைஞன் இருக்கிறானா?’ என்று பிரமி த்துப் போனேன்.

அவர் கூடவேதான் இருந்தோம்; ஒன்றாகத்தான் வளர்ந்தோம். ஆனால் திரையில் இப்படி ஒரு எளிமையான, அழகான, உயிரோட்டமான படத்தை வடித்திருக்கிறாரே என்று வியந்து போனேன்.

இந்தப்படம் ‘ரெயான்ஸ் டாட்டர்’ என்ற ஆங்கிலப் படத்தின் தழுவல் என்று கமல் உள்பட பலர் கூறுவதை கேட்டிருக்கிறேன். ஆனால் அது, பண்ணைபுரம் கிராமத்தில் வாழ்ந்த மூன்று கதாபாத்திரங்களை மட்டும் வைத்துக்கொண்டு வடிக்கப்பட்ட கற்பனைக் கதைதான். அங்கே கூட அது உண்மையாக நடந்த கதை இல்லை. அதோடு ஆங்கிலப் படத்தின் தழுவலும் இல்லை.

இசையில் மாற்றம்

இந்தப்படம் எனக்குள்ளும் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தியது. இத்தனை நாள் தொழிலாக அமைந்த இசைப்பாணியை பின்பற்றி இசையமைத்து வந்த எனக்கு, இந்தப்படம்தான் நமது பாணியை மாற்ற ஏதுவான படம். இந்தப்படத்தில் இருந்து மாற்றிக்கொள்ள வேண்டியதுதான் என்ற முடிவை எடுக்க வைத்தது.

இந்தப் படத்தில் இருந்துதான் பின்னணி இசையைப் பற்றிய எனது அணுகுமுறையே முற்றிலும் மாறியது. இது அடுத்த சாதாரண படங்களிலும்கூட, வித்தியாசமான பரிசோதனை முறையிலான இசையை கொடுத்துப் பார்க்க வித்திட்டது என்றே சொல்லவேண்டும்.

16 வயதினிலே படத்தில் பார்த்தீர்களானால் ஒரு காட்சியில் கமல் அங்கும் இங்குமாக போய்ப் பேசுவார்.

கேமரா டிராலி கமலுடனே இடது பக்கத்தில் இருந்து வலது பக்கமும், வலது பக்கத்தில் இருந்து இடது பக்கமும் போகும். இதற்கு எந்த இசையும் போடவில்லை.

அந்த ரீலுக்கு மற்ற இடங்களில் இசையமைத்து ரிகர்சல் பார்த்துக் கொண்டிருந்தேன். எல்லாம் சரியாக இருந்தது.

அமர் சொன்ன மாறுதல்

இசையில் யாரும் மாற்றம் செய்யச் சொன்னால் எனக்குப் பிடிக்காது. தாறுமாறாக கோபம் வரும். ஒரு காட்சியில் இசையமைத்துக் கொண்டிருந்தேன். சிறிது நேரம் கழித்து பக்கத்தில் இருந்த அமர், “அண்ணா அந்த இடத்துல கொஞ்சம் இப்படி இருந்தா, அதாவது அடுத்த ஷாட்டில் மியூசிக்கை ‘ஸ்டார்ட்’ பண்ணினா...” என்று சொல்ல வந்தான்.

பதிலுக்கு நான், “என்ன... என்ன? என்னடா எந்த இடத்துல?” என்று வேகமாய் கேட்க, என் கேள்வியின் தோரணை அவனை கொஞ்சம் தயங்க வைத்துவிட்டது.

அமர் தயங்கியபடி “இல்லே! இப்ப ஸ்டார்ட் பண்ணின ஷாட்டுக்கு அடுத்த ஷாட்டில்...” என்று நிறுத்த...

அவன் சொன்னது நல்ல ஐடியாவாகப்பட்டது.

“இது உன் ஐடியாவா?”

“இல்ல... பாரதியுடையது!”

திரும்பிப் பார்த்தேன். என்ஜினீயர் ரூமிற்குப் போகும் கதவருகில் பாரதி நின்றிருந்தார். நான் பாரதியிடம், “ஏன்யா! ஐடியா நல்லாத்தானே இருக்கு. அப்பவே சொல்றதுக்கு என்ன?” என்று கேட்டேன்.

“ஒங்கிட்டயா? நானா? சொன்னா சும்மா விட்டுருவியாக்கும்? உனக்கு என்னய்யா மியூசிக் பற்றி தெரியும் என்று இவ்வளவு பேருக்கு முன்னால் கேட்டால் நான் என்ன பண்ணுவேன்! மானம் போயிடாது!” என்று சொன்னார், பாரதி.

**“16 வயதினிலே” படத்தின் மூலம் பாரதிராஜா தொடங்கி வைத்த புதிய வரலாறு இளையராஜா புகழாரம்**

“16 வயதினிலே” படத்தின் மூலம், தமிழ் சினிமா உலகில் புதிய வரலாற்றை பாரதிராஜா தொடங்கி வைத்தார் என்று இளையராஜா கூறினார்.

“16 வயதினிலே” படமாக்கப்பட்டபோது ஏற்பட்ட அனுபவங்கள் பற்றி இளையராஜா தொடர்ந்து கூறியதாவது:–

“16 வயதினிலே” படத்தில், மயிலின் (ஸ்ரீதேவி) கன்னத்தில் சப்பாணி (கமலஹாசன்) அறையும் காட்சி முடிந்ததும், “செவ்வந்திப்பூ முடிச்ச சின்னக்கா” என்ற பாடல் காட்சி வரும்.

பாடலுக்கு முன்னால் வரும் அந்த சீனுக்கு, மியூசிக் கம்போஸ் நடந்தது. குறிப்பிட்ட ‘ஷாட்’டுகளுக்காக போடப்பட்ட இசை, அந்த ஷாட்டுகளில் அமையவில்லை.

அது கொஞ்சம் முன்னால் போய்விடும். அல்லது அந்த ஷாட் முடிந்து லேட்டாகி விடும். இதை ‘கண்டக்ட்’ செய்து கொண்டிருந்த கோவர்த்தன் சாரிடம், “அண்ணே! நீங்க உள்ளே வாங்க, நானே ‘கண்டக்ட்’ செய்கிறேன்” என்று உள்ளே போனேன்.

ஒரு ரிகர்சல் ‘கண்டக்ட்’ செய்தேன். எல்லாம் அதனதன் இடத்தில் உட்கார்ந்தது. ஆர்க்கெஸ்ட்ராவுக்கு குஷி.

டேக் தொடங்கியது.

கட்... கட்...

கண்டக்ட் செய்யத் தொடங்கிய கொஞ்ச நேரத்தில் டப்பிங் தியேட்டரில் உட்கார்ந்திருந்த யாரோ ஒருவர், “கட்! கட்!” என்றார்.

நான் திரும்பிப் பார்த்தேன். பாரதி டென்ஷனாகி உள்ளே வந்துவிட்டார்.

“யாருய்யா கட் சொன்னது?” என்று பாரதியிடம் கோபமாக கேட்டேன்.

பாரதிக்கு, அவரது அசிஸ்டெண்ட் யாரோ ‘கட்’ சொன்னது தெரிந்து போயிற்று. அந்த அசிஸ்டெண்ட் யாரென்பதும் தெரிந்து போயிற்று.

நான் அவரிடம், “எதுக்குய்யா கட் சொன்னே?” என்று கேட்டேன்.

அவரோ என்னையும், பாரதியையும் மாறி மாறிப் பார்த்தார். பிறகு, “டேக்கில் டயலாக் வரலை சார். டயலாக் இல்லாம டேக் எப்படி சார்?” என்றார்.

அவர் இப்படிச் சொன்னதும் அந்தக் கோபத்திலும், எல்லாரும் விழுந்து விழுந்து சிரித்தோம்.

அதாவது ரிகர்சல் பார்க்கும்போது திரையில் டயலாக் போகும். அதோடு இசைக் குழுவினரை வாசிக்க வைத்துப் பார்ப்போம்.

டேக் போகும்போது அந்த ஸ்கிரீனுக்கு பின் இருக்கும் ஸ்பீக்கரில் டயலாக் வந்தால், அதுவும் மைக்கில் பிக்அப் ஆகி, வாத்தியங்களில் இசை கேட்காமல் போகும் அல்லவா? அதற்காக அதை 'கட்' பண்ணி கண்டக்டரின் ஹெட்போனில் மட்டும் கொடுப்பார்கள். அதைத்தான் இவர் டேக்கில் டயலாக்கை கட் பண்ணிவிட்டார்கள் என்று எண்ணி, 'கட்' சொல்லியிருக்கிறார் என்பது புரிந்தது.

பாரதி அவரைப் பார்த்து, "இங்கே இருக்காதே! உள்ளே போய் உட்கார்!" என்று உள்ளே அனுப்பி வைத்தார்.

பிறகு அந்த உதவியாளர் பற்றி பாரதி பேசும்போது, "எக்ஸ்போஸ் பண்ணின பிலிம் டப்பாவை ஷூட்டிங் ஸ்பாட்டிலேயே திறந்து பார்க்கப் போனவன் இவன்!" என்று சொல்லி, அதுபற்றி விவரித்தார்.

படப்பிடிப்பு முடிந்து வந்த பிலிம்கேனை திறந்து, படம் பிடித்த எல்லாக் காட்சிகளும் இருக்கிறதா என்று பார்க்கப்போனவராம் இவர்! நல்லவேளையாக பாரதி இதைப் பார்த்துவிட, பிலிம் ரோல் தப்பியிருக்கிறது.

இப்படி பாரதியிடம் திட்டு வாங்கியவர் வேறு யாருமல்ல; பிற்காலத்தில் பெரிய டைரக்டராக உயர்ந்த கே.பாக்யராஜ்தான்!

கணிப்பு

"16 வயதினிலே" படம் 15–9–1977–ல் ரிலீசானது.

வழக்கமாக வரும் படங்களைப் போல இல்லாமல் மாறுபட்டு இருந்ததால், படத்தைப்பற்றி என்ன கருத்து சொல்வது என்று சினிமா வட்டாரத்தினருக்குப் புரியவில்லை.

கமலஹாசனின் உதவியாளராக இருந்த சேஷு என்பவர் "இந்தப் படம் ஒருவாரம்தான் ஓடும். மிட்லண்ட் தியேட்டரில் படம் பார்க்கும் ஜனங்கள் கிண்டல் செய்கிறார்கள். இது போதாதென்று, டைட்டிலிலேயே சினிமாவுக்குப் பொருத்தம் இல்லாத குரலில் இசையமைப்பாளர் இளையராஜா பாடியிருக்கிறார். இது ஜனங்களுக்கு வேடிக்கையாக இருக்கிறது" என்று படத்தை கிண்டல் செய்து பேசிக்கொண்டிருந்தார்.

ஆனால் ஒரு இரும்புக் கதவை ஒரு சாதாரண சோளக் குச்சியால் தகர்த்த மாதிரியாகிவிட்டது. அதாவது "16 வயதினிலே" படம் இமாலய வெற்றி பெற்றுவிட்டது.

அதுவரை, ஸ்டூடியோவிலேயே செயற்கையான செட்டுகளில் படங்களை எடுத்துக்கொண்டிருந்த முறையை அடியோடு மாற்றி இப்படத்தை எடுத்திருந்தார், பாரதி.

விரிந்து கிடந்த அழகான மூலை முடுக்குகளை கலை நயத்தோடு மக்களுக்கு காட்டி, அவர்களின் இதயங்களில் அழியாத இடம் பிடித்தார்.

பாரதிராஜாவை, மாபெரும் கலைஞனாக உலகம் ஏற்றுக்கொண்டது.

புதிய வரலாறு

இந்தக் காலக்கட்டத்தில் இருந்துதான், திரை உலகில் பெரிய மாற்றங்கள் தொடங்கின. இதை ஒரு புதிய சினிமா வரலாற்றின் தொடக்கம் என்றும் குறிப்பிடலாம்.

இன்றைய மாற்றங்களுக்கெல்லாம், அன்றே அடிக்கல் நாட்டியவர் பாரதிராஜா. நான் அவரை வெளிப்படையாக புகழ்ந்து இதுபோல் பேசியதே இல்லை. அது பேசப்படாமலே போய்விடக்கூடாது என்பதற்காகத்தான், இப்போது சொல்கிறேன்.

அதே நேரம் இதுபோன்ற முயற்சிகளுக்கு அடித்தளம் இட்டது 'அன்னக்கிளி' படம்தான். அந்த அடித்தளம் வேண்டுமானால் சிறிய அளவில் இருக்கலாம். ஆனால் அதை இல்லை என்று தள்ளுவதற்கில்லை.

அன்னக்கிளியில் ஒரு சாதாரண பள்ளி ஆசிரியரும், கிராமத்து மருத்துவச்சியும்தான் நாயகன்— நாயகி.

இதேபோல் "16 வயதினிலே" படத்தில் கிராமத்து இளம்பெண், கால்நடை மருத்துவர், சப்பாணி, வெட்டியாக ஊரைச்சுற்றும் இளம் சண்டியர்கள் என சாதாரணமானவர்களே பாத்திரப் படைப்புகள். அதோடு திரையுலகம் சந்தித்திராத திரைக்கதை வடிவமைப்பு. இன்றும் இந்தப் படத்தைப் பார்த்தால் எவருக்கும் சலிப்பு ஏற்படாது.

தேசிய விருது

இந்தப்படத்தில் அமரன் எழுதி எஸ்.ஜானகி பாடிய "செந்தூரப்பூவே" பாட்டுக்கு இன்னொரு பெருமையும் உண்டு. ஜானகிக்கு சிறந்த பாடகி என்ற தேசிய விருதை பெற்றுத்தந்தது இந்தப்பாட்டு.

கவிக்குயில்

தயாரிப்பாளர் பஞ்சு அருணாசலம் "கவிக்குயில்" என்று ஒரு படம் எடுத்தார். அதில் கதாநாயகி தன் மனதில் ஒரு ராகம் இருப்பதாகவும், அதை கதாநாயகனால் இசைத்துக்காட்ட முடியுமா என்றும் சவால் விடுவார்.

நாயகனோ அந்த இசையை புல்லாங்குழலில் வாசித்து, பிறகு பாட்டாகவும் பாடிக்காட்டி நாயகியின் மனதில் இடம் பிடிப்பான்.

இதற்கு ஒரு டியூன் கம்போஸ் செய்தேன். அதைக்கேட்ட பஞ்சு சார், "இதை பாலமுரளிகிருஷ்ணா போன்ற பெரிய பாடகர்கள் பாடினால் நன்றாக இருக்கும்" என்று சொன்னார்.

தொடர்ந்து பாலமுரளிகிருஷ்ணாவிடமும் பேசி நிச்சயித்து விட்டார்கள்.

'பாலமுரளிகிருஷ்ணா பாடப்போகிறார்' என்று கேட்டது முதலே எனக்கு பயம். காரணம், அவருக்கு தெரிந்த அளவுக்கு இசை எனக்குத் தெரியாது.

**இளையராஜா இசை அமைப்பில்**
**பாலமுரளிகிருஷ்ணா பாடினார்!**
**"சின்னக்கண்ணன் அழைக்கிறான்...!"**

பிரபல கர்நாடக இசைப்பாடகர் பாலமுரளிகிருஷ்ணா, இளையராஜா இசையில் ஒரு பாட்டு பாடினார். பாடி முடித்ததும் அவர் இளையராஜாவை பாராட்டினார்.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:-

இசை மேதையாக ரசிகர்கள் கொண்டாடும் பாலமுரளிகிருஷ்ணா எனது இசையில் பாடப்போகிற விஷயம் தெரியவந்ததுமே எனக்கு கொஞ்சம் கவலையாகி விட்டது. எல்லாம் நல்லபடியாக நடந்து முடியவேண்டுமே.

ரிகர்சலுக்கு வந்தார். பயத்தோடு பாடலைச் சொன்னேன். அவர் எழுதிக்கொண்டார்.

"என்ன டியூன்?" என்றார்.

பாடிக்காட்டினேன்.

ஸ்வரத்தை பாடலின் வரிகள் மேல் எழுதிப் பாடினார். அதுதான் "சின்னக்கண்ணன் அழைக்கிறான்" என்ற பாட்டு.

பாடலைப் பாடியவர், "இதுதான் புதிது. சரணத்தில் உச்சஸ்தாயியில் இரண்டாவது வரிக்கு அமைந்திருக்கும் இசையில் 'ஸகரிக மரினி' என்று ஆரோகணபரமான பிரயோகத்தை - அவரோகணத்தில் அமைத்திருக்கிறீர்களே! அதை எவ்வளவு வேண்டுமானாலும் பாராட்டலாம். சாதாரணமாக கர்நாடக கச்சேரிகளில் கூட வித்வான்கள் இந்த ராகத்தை நீண்ட நேரம் பாடமாட்டார்கள். அதை இவ்வளவு இனிமையான பாடலாக அமைத்து விட்டீர்களே" என்று மனம் விட்டுப் பாராட்டினார். என் இசைப் பயணத்தில் முக்கியமானதொரு ஊக்குவிப்பாக அமைந்து என்னை உற்சாகப்படுத்திய நிகழ்ச்சி இது.

ஓரளவு படங்கள் வந்து, ஓய்வில்லாத வேலைகள் தொடர்ந்தன. இருந்தாலும் நானும், பாஸ்கரும் குழந்தைகளுடன் ஒரே வீட்டில்தான் இருந்து வந்தோம்.

ரெக்கார்டிங்குக்கு நான், அமர், பாஸ்கர் மூவரும் டாக்சியில்தான் போவோம்.

சின்னப்பதேவர்

ஒருநாள் வீட்டில் இருந்து மூவரும் டாக்சியில் கிளம்பினோம். மந்தைவெளி வழியாக, நந்தனம் மவுண்ட்ரோடு கிராசிங்கில், சிக்னலுக்காக காத்திருந்தோம். காலை 6-30 மணி இருக்கும். அப்போது பக்கத்தில் ஒரு கார் வந்து நின்றது.

அதில் முன் சீட்டில் சாண்டோ சின்னப்பதேவர் கையை கார் கதவில் வைத்தபடி உட்கார்ந்திருந்தார். அப்படியே பக்கத்தில் நின்றிருந்த எங்கள் டாக்சியை கவனித்தார். என்னை பின்சீட்டில் பார்த்து ஆச்சரியப்பட்டு, "ஏய் கேவலப்படுத்தாதீங்கப்பா" என்றார்.

எங்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. தொடர்ந்து அவரே பேசினார்.

“என்னப்பா நீங்க! இவ்வளவு பெரிய பேர் எடுத்திட்டு டாக்சியிலே போறீங்களேப்பா! கேவலப்படுத்தாதீங்க. சீக்கிரமா ஒரு கார் வாங்குங்கப்பா” என்றார்.

இதற்குள் சிக்னல் கிடைத்துவிட, “சரிங்க அய்யா” என்று விடைபெற்றோம்.

அதற்கும் முதல் வாரம்தான் முதல்—அமைச்சர் எம்.ஜி.ஆர் கையால் ‘கலைமாமணி’ விருது வாங்கியிருந்தேன்.

அங்குதான் தேவர் அவர்களிடம் என்னை பட அதிபர் கலைஞானம் அறிமுகம் செய்து வைத்தார்.

நான்தான் இளையராஜா என்று அவரால் நம்பமுடியவில்லை. என்னை மேலும் கீழுமாக பார்த்துக் கொண்டே இருந்தார்.

அப்போது பார்த்து நடிகை கே.ஆர்.விஜயா அங்கு வர, “ஏம்மா, இங்க பார்த்தியா? இவருதான் இளையராஜாவாம்மா” என்று ஆச்சரியப்படும் பாணியில் அறிமுகப்படுத்தினார்.

எம்.ஜி.ஆருடன் சந்திப்பு

கலைமாமணி விருது விழாவில் நிகழ்ச்சிக்கு அரை மணி நேரம் முன்னதாகவே எம்.ஜி.ஆர். வந்துவிட்டார். எங்களை தனியாக சந்தித்து பேசிக்கொண்டிருந்தார்.

அவரைப் பார்த்ததும் வணக்கம் போடுபவர்களும், மரியாதை செலுத்தும் அதிகாரிகளுமாய் வந்து போய்க்கொண்டிருந்தாலும் எங்களுடன் சர்வசாதாரணமாக பேசிக்கொண்டிருந்தார்.

பழகுவதில் அவரது எளிமை கண்டு எனக்குள்ளும் அவரிடம் சகஜமாகப் பேசும் ஆர்வம் எழுந்தது. நானும் சாதாரணமாக, “அண்ணே! உங்ககூட ரெயிலில் வந்தது ரொம்ப ரொம்ப மோசம்ணே” என்றேன்.

“ம்... என்ன சொல்றே?” தனது ஆச்சரியத்தை கேள்விக்குறியாக்கினார் எம்.ஜி.ஆர்.

“ஆமாண்ணே! அன்னைக்கு மதுரை பாண்டியனில் நீங்க மதுரைக்குப் போனப்போ, அதே வண்டியில் நானும் இருந்தேண்ணே.”

“ஆமாமா? எனக்கும் சொன்னாங்க” என்று சொன்ன எம்.ஜி.ஆர், “ஆமா அதுல என்ன மோசம்” என்று திருப்பிக் கேட்டார்.

“இல்லண்ணே! நீங்க அந்த ரெயிலில் வர்றது வெளியே தெரிஞ்சு, காலையில் ரெயில் சோழவந்தான் விட்டுக் கிளம்பும்போது, ரசிகர்கள், வண்டி கிளம்பவும் செயினைப் பிடித்து இழுத்து நிறுத்தி உங்களைப் பார்க்க ஆர்வத்தோடு அவங்க செய்த கலாட்டா...”

நான் சொல்லி முடிப்பதற்குள் எம்.ஜி.ஆர். குறுக்கிட்டார். “ம்... ம்... அப்புறமா?” என்று கேட்டார்.

“இரண்டு கிலோ மீட்டர் தூரத்துக்கு ஒருமுறை செயினைப் பிடித்து இழுத்து

வண்டியை நிறுத்துவதும், நீங்கள் கையைக் காட்டியவுடன் விட்டு விடுவதுமாக இருந்தார்கள். இப்படி காலையில் 6 மணியில் இருந்து 7 மணிக்குள் மதுரை வரவேண்டிய பாண்டியன் எக்ஸ்பிரஸ் அன்றைக்கு காலை 10 மணிக்குத்தானே மதுரைக்கே வந்து சேர்ந்தது."

நான் இப்படிச் சொன்னதும், "ஆமா தம்பி... மக்கள் அவ்வளவு ஆர்வமா இருந்தா நாம என்ன செய்யமுடியும்?" என்று மக்கள் தன் மீது வைத்திருந்த அன்பை சிலாகித்தபடி சொன்னார் எம்.ஜி.ஆர்.

இதற்குள் விழா தொடங்கி விட்டது. எம்.ஜி.ஆர். கையால் கலைமாமணி விருது வாங்கினேன்.

தேவர் அன்றைக்கு என்னைப் பார்த்தவர், இப்போது வாகனப் பயணத்தின்போது மறுபடியுமாக என்னைப் பார்க்கிறார். டாக்சியில் நாங்கள் வருவதைப் பார்த்ததும், சொந்தமாய் கார் வாங்கும் எண்ணத்துக்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்து விட்டார்.

அடித்தளம் என்று உறுதியாக சொல்லக் காரணம் உண்டு.

சொந்தக்கார் விஷயத்தை நான் சாதாரணமாக எடுத்துக்கொண்டு 'நேரம் வரும்போது அமைவது அமையும்' என்று இருந்துவிட்டேன்.

ஆனால் பாஸ்கரும், அமரும் அதை சீரியசாக எடுத்துக்கொண்டார்கள். ஜி.ராமநாதனின் உதவியாளராக இருந்த ராமச்சந்திரனின் தம்பி டி.பி.துரைமணி ரிலையன்சில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். அவரிடம் போய் கார் வாங்குவதற்கான ஏற்பாடுகள் அனைத்தையும் செய்துவிட்டார்கள்.

அது டி.எம்.டபிள்யூ 3335 என்ற அம்பாசிடர் கார்.

என் ஆர்மோனியம் பெட்டி போல எனது இன்னொரு உடன் பிறப்பு.

உதவியாளர்

படங்கள் அதிகமானதால் உதவியாளர் தேவைப்பட்டது. பாஸ்கரின் நண்பர் ஒருவர் வந்தார்.

இத்தனை காலங்களும் எங்கள் குடும்பத்தின் முக்கியமான நிகழ்ச்சிகளில் எல்லாம் கலந்து கொண்டு வந்த என் இளவயது உயிர்த்தோழன் எம்.சுப்பிரமணியன் அவ்வப்போது என்னைப் பார்த்துப்போக வருவதுண்டு.

அப்படி வந்த ஒரு நாள் அவரிடம், "ஏம்ப்பா! உனக்கு காலேஜில் என்ன சம்பளம்?" என்று கேட்டேன். நான் இப்படிக் கேட்பது – சுப்பிரமணியனுக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியிருக்கக் கூடும். "ஐயாயிரம் ரூபாய் வாங்கறேன். என்னப்பா திடீர்னு இப்ப இந்தக் கேள்வி?" என்று கேட்டார்.

"அதை நான் தந்தால் என்னிடம் மானேஜராக வேலை செய்ய முடியுமா?" என்று கேட்டு விட்டேன்.

"ஏய்! என்னப்பா இது?"

“ஆமாப்பா. நாமெல்லாம் ஒண்ணா இருந்தா நல்லாயிருக்கும் இல்லையா?” என்றேன்.

அவருக்கு திருமணமாகி குழந்தையும் இருந்தது.

அவர் ஆவடியில் உள்ள என்ஜினீயரிங் கல்லூரியில் புரொபசராக இருந்தார். நான் கேட்டதற்காக வேலையை விட்டுவிட்டு உடனே எங்களிடம் வந்துவிட்டார்.

தமாசுக்காக அவரை, “என்ன மானேஜர் ரெடியா? போகலாமா? அடுத்து என்ன புரோகிராம்?” என்று நான், அமர், பாஸ்கர் மூவருமே கிண்டல் செய்வோம்.

அம்மாவும் வெற்றிலைப்பாக்கு போட்ட வாயோடு கன்னத்தில் கை வைத்தபடி எங்களை ஆச்சரியமாய் பார்ப்பார்கள். அதோடு, “அட போங்கப்பா! உங்களை பண்ணைபுரத்துல பார்த்த மாதிரி அப்படியே இருக்கு. இப்படியே கடைசிவரை இருங்கப்பா” என்பார்கள்.

**இசை அமைப்பில் புதுமைகள் செய்தார்**
**ஏராளமான பட வாய்ப்புகள் தேடி வந்தன**

இளையராஜா, திரைப்பட இசை அமைப்பில் பல புதுமைகளை செய்தார். ஏராளமான பட வாய்ப்புகள் அவரைத் தேடி வந்தன. அதனால் தினமும் 4 மணி நேரமே அவர் தூங்கினார்.

தன் வாழ்க்கைப்பாதையைப் பற்றி இளையராஜா கூறியதாவது:–

புது வீடு

"எனக்கு கார்த்தி, பவதா, யுவன் என மூன்று குழந்தைகள். அண்ணன் பாஸ்கருக்கு பார்த்தி, வாசுகி, ஹரி என மூன்று குழந்தைகள். குடும்பம் பெரிதான சூழலில் ஒரே வீட்டில் இரண்டு குடும்பங்களும் இருப்பது சிரமமாக இருந்ததை பாஸ்கர் உணர்ந்து கொண்டார். இதனால் தனியாக வீடு பார்த்தார்.

ஒரு வீடு அவருக்கு பிடித்துப்போக, என்னிடம் வந்தார். "ராஜா! நீ வந்து பார்த்து சரி என்று சொன்னால் நான் மாறிக்கொள்கிறேன்" என்றார்.

நானும் பார்க்கப்போனேன். பார்த்த வீடு எனக்குப் பிடித்துப்போயிற்று. நான் பாஸ்கரிடம், "வீடு நன்றாக இருக்கிறது. இதில் நான் குடியிருந்து கொள்கிறேன். நீ வேறு வீடு பார்த்துக்கொள்" என்றேன்.

பாஸ்கரும், "சரி; நீயே இருந்து கொள். நான் வேறு இடம் பார்க்கிறேன்" என்று கூறிவிட்டார்.

ராசி

தி.நகர் வடக்கு உஸ்மான் சாலையில் அந்த வீடு இருந்தது. வீட்டு எண் 157.

"வீட்டின் கூட்டுத்தொகை 13 வருகிறது. அதனால் இந்த வீடு வேண்டாம். அதோடு கவியரசர் கண்ணதாசன் இந்த வீட்டில்தான் அவருடைய சினிமாக் கம்பெனியை தொடங்கி பெரும் கடனுக்கு உள்ளானார். அதனால் ராசி இல்லாத இந்த வீட்டுக்குப் போகவேண்டாம்" என்றார்கள் நண்பர்கள்.

எனக்கோ வீட்டைப் பார்த்தவுடன் பிடித்துப்போனதால், அந்த வீட்டுக்கே குடிபெயர்ந்தேன். அம்மா என்னுடனே வந்துவிட்டார்கள்.

இவ்வாறு இளையராஜா கூறினார்.

கர்நாடக இசை

சினிமாவில் வளர்ந்து வந்த நிலையிலும் கர்நாடக சங்கீதத்தை முழுமையாக கற்கும் ஆர்வம் இளையராஜாவை விட்டுவிடவில்லை. இதனால் பிரபல கர்நாடக இசைப்பாடகர் டி.வி.கோபாலகிருஷ்ணனிடம் இசை கற்க விரும்பினார்.

அதுபற்றி கூறியதாவது:–

ஏற்கனவே டி.வி.கோபாலகிருஷ்ணனிடம் கர்நாடக இசை கற்கும் ஆவல் எனக்குள் நீடித்து வந்தது. புது வீட்டுக்கு வந்த பிறகுதான் அதற்கான வாய்ப்பு அமைந்தது. டி.வி.கோபாலகிருஷ்ணன் அப்போது பெசன்ட் நகரில் இருந்தார். காரணீஸ்வரர் கோவில் தெருவில் இருக்கும்போது பத்து நிமிடத்தில் அவர் வீட்டுக்கு நடந்தே போய் விடலாம். இப்போதோ பெசன்ட் நகர் போய்வரவே அரை மணி நேரமாவது ஆகும்.

அவரிடம் மறுபடியுமாக என் கற்றல் ஆர்வம் சொன்னபோது, "நீங்கள் எந்த நேரத்தில் வந்தாலும் நான் சொல்லித்தர தயாராயிருக்கிறேன். உங்களுக்கு எந்த நேரம் சவுகரியமோ அதைச் சொல்லுங்கள்" என்றார்.

எனக்கு இருந்த வேலைகளுக்கிடையே சரியான நேரத்தை எப்படி அமைப்பது என்று யோசித்தேன். அவரோ எந்த நேரமானாலும் பரவாயில்லை என்று சொன்னதால் விடிகாலை நேரத்தை தேர்ந்தெடுத்தேன்.

எப்போதும் விடிகாலை 4 மணிக்கு நான் எழுந்து பழக்கப்பட்டவன். சமீபகாலமாக அது கொஞ்சம் நின்று போயிருந்தது. இப்போது மீண்டும் அந்த நேரத்துக்கு மாறினேன். நான்கு மணிக்கு சமஸ்கிருத பாடம் அரை மணி நேரமும், பிறகு குளித்து விட்டு 5 மணிக்கு பெசன்ட் நகரில் டி.வி.கோபாலகிருஷ்ணனிடம் கர்நாடக சங்கீத பாடமும், 6 மணிக்கு உடற்பயிற்சியும், தியானமும், பூஜையுமாக தொடர்ந்தது.

7 மணிக்கு ரெக்கார்டிங் ஸ்டூடியோ. இல்லையேல் கம்போசிங். தினசரி இரண்டு பாடல்கள் இருக்கும்.

ரெக்கார்டிங் இரவு 9 மணிக்கு முடிய, வீட்டுக்கு வந்து மீண்டும் டி.வி.கோபாலகிருஷ்ணனிடம் பெசன்ட் நகரில் சங்கீதப் பாடம் முடித்துவிட்டு வர இரவு 12 மணி ஆகிவிடும்.

இந்த அன்றாட நிகழ்ச்சி நிரலில் பெரும்பாலும் மாற்றமிருக்காது. எங்காவது வெளியூர் கோவிலுக்கு போனால் மட்டுமே மாறும். இந்த வகையில் தினசரி என் தூக்கம் 4 மணி நேரம்தான்.

ஓரளவே நான் கற்றுக்கொண்ட சங்கீதம், டி.வி.கோபாலகிருஷ்ணனின் ஒத்துழைப்பால்தான் எனக்கு சாத்தியமாயிற்று. ஆயினும் அது எனக்கு அந்த அளவேனும் வந்ததே என்பதில் திருப்தியைக் காட்டிலும், அத்தனையையும் கற்றுக்கொள்ள இயலாமையால் ஏற்பட்ட வருத்தமே அதிகம் மேலோங்கி இருந்தது.

இசை அணுகுமுறை

ஜி.கே.வி.யிடம் இருந்தபோது ரெக்கார்டிங் ஓய்வு நேரத்தில், நான் எழுதிய இசைப் பகுதிகளை அங்கிருக்கும் கலைஞர்களை வாசிக்க வைத்துக் கேட்கும் பழக்கம் எனக்கிருந்தது.

அவர்கள் கருத்தை வைத்து, எனது இந்த இசை அணுகுமுறை சினிமா சங்கீதத்துக்கு ஒத்துவராது என்ற முடிவுக்கு வந்திருந்தேன்.

ஆனால் அதை உபயோகிக்க, தரத்தில் உயர்ந்த ஒரு படம் வரும்போதுதான் சரியாக இருக்கும். எனவே, புதிதாக நான் கற்றுக்கொண்டவைகளை எப்படி பயன்படுத்துவது என்று ஆலோசித்து, அவ்வப்போது அதை நடைமுறைக்கு கொண்டு வரவும் செய்தேன்.

மேல்நாட்டு இசையில் 'கவுண்டர் பாயிண்ட்' என ஒரு விஷயம் இருக்கிறது. ஒன்றுக்கு மேற்பட்ட வேறு வேறு டியூன்கள் ஒரே நேரத்தில் இசைக்கப்படுவதுதான் அது. அதில் 'ஹார்மோனி' என்ற அம்சம் உள்ளடங்கி இருக்கவேண்டும்.

இதை எனது இரண்டாவது படமான "பாலூட்டி வளர்த்த கிளி" படத்தில் "நான் பேச வந்தேன்" என்ற பாடலின்போதே தொடங்கிவிட்டேன். அந்தப் பாடலின் இடையே வரும் இசையின் ஹம்மிங்கில் எஸ்.பி.பாலசுப்பிரமணியம் ஒரு டியூன் 'ஹம்' செய்ய, எஸ்.ஜானகி வேறு டியூனில் ஹம்மிங் செய்து பதில் சொல்வது போல அமைத்திருந்தேன்.

இது படத்தின் டைரக்டருக்கோ, இசைக் குழுவில் வாசித்தவர்களுக்கோ தெரிந்திருக்க வாய்ப்பில்லை. இசைக் குழுவில் அட்வான்ஸ் ஆக இருக்கும் ஓரிரு கலைஞர்களுக்கு வேண்டுமானால் தெரிந்திருக்கலாம்.

காற்றினிலே வரும் கீதம் என்ற பாடலிலும் இந்த யுக்தியை பாடலின் கடைசியில் கையாண்டிருந்தேன். இது பாடலின் அதே டியூனை அப்படியே 'ரிபீட்' செய்யும் 'இமி டேஷன்' என்ற விதிக்குள் அடங்கும்.

பின்னால் "சிட்டுக்குருவி" என்ற படத்தை தேவராஜ் – மோகன் இயக்கியபோது அதற்கு கம்போஸ் செய்ய நேரமே இல்லாமல் போனது.

அப்போது "துர்காதேவி" என்ற படம் சங்கரய்யர் டைரக்ஷனில் வளர்ந்து கொண்டிருந்தது. அதற்கு பின்னணி இசை நடந்து கொண்டிருந்ததால் எங்கும் நகர முடியவில்லை.

இதற்கிடையே சிட்டுக்குருவி படத்துக்கு தேவராஜ் – மோகன் ரெக்கார்டிங்கிற்கு தேதி குறித்துவிட்டார்கள்.

ரெக்கார்டிங் இரவு 9 மணிக்கு முடியும். பத்து மணிக்கு தயாரிப்பாளர் அலுவலகத்தில் ஏதாவது சாப்பிட்டுவிட்டு, மறுபடியும் கம்போஸ் தொடரும். அது முடிய விடிகாலை 3 மணி வரை ஆகிவிடும்.

அதற்குப் பிறகு 4 மணிக்கு படுப்பதெங்கே? அடுத்த நாள் தொடங்கி விடும்."

**மூகாம்பிகை மீது கன்னடப் பாடல்கள்!**
**இளையராஜா பாடினார்**

மூகாம்பிகை மீது 4 பக்திப் பாடல்களை, இளையராஜா இசை அமைத்துப் பாடினார்.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:—

"டைரக்டர்கள் தேவராஜ் — மோகன் இரட்டையர்களில், தேவராஜ் எப்போதும் ஏதாவது பரிசோதனையாக செய்ய முயற்சிப்பார். "சிட்டுக்குருவி" படத்தில் காதலனும், காதலியும் தங்கள் காதலை எப்படி வெளிப்படுத்துவது என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருப்பார்கள். அப்படியொரு சூழ்நிலையில் ஒரு பஸ்சில் இருவரும் அருகருகே அமர்ந்து போகிறார்கள். இப்போது காதலனின் உள்ளமும், காதலியின் உள்ளமும் கலந்து பாடுவது போல, ஒரு பாடலுக்கு அடித்தளம் அமைத்துக்கொடுத்தார்.

இது ஒரு புது விஷயமல்லவா? இதற்கு மேல் நாட்டு இசையின் 'கவுண்ட்டர் பாயிண்ட்'டை உபயோகிக்க முடிவு செய்தேன்.

இதுபற்றி தேவராஜிடம் விளக்கி சம்மதமும் வாங்கிவிட்டேன்.

புதுமையான பாட்டு

கவிஞர் வாலி, இரவு நேரம் என்றும் பாராமல் ஒத்துழைத்து தினமும் வந்தார். அவரிடம் இதை விளக்கியபோது டியூனை வாசிக்கச் சொல்லி கேட்டார். "ஒன்றுக்கு மேற்பட்ட இரண்டு டியூன்கள் ஒரே நேரத்தில் இசைத்தால் முரணாகத் தோன்றாதா?" என்று கேட்டார்.

நான் அவரிடம், "அண்ணே! இரண்டு டியூனும் தனியாக பாடப்பட்டால் அதனதன் தனித்தன்மை மாறாமலும், ஒரு டியூனுக்கு இன்னொரு டியூன் பதில் போலவும், அமையவேண்டும். அந்த பதில் டியூனும் தனியாகப்பாடினால் அதன் தனித்தன்மை மாறாமல் இருக்க வேண்டும். இரண்டையும் சேர்த்து பாடினால், ஒட்ட வைத்தது போல இல்லாமல் ஒரே பாடலாக ஒலிக்கவேண்டும்" என்றேன்.

பதிலுக்கு வாலி, "என்னய்யா நீ! இந்த நட்ட நடு ராத்திரியில 'சிட்டுக்குருவிக்கு சிட்டப் பிச்சுக்கிற மாதிரி ஐடியா கொடுக்கிறே! முதல்ல ஒரு "மாதிரி" பாடலை சொல்லு!" என்றார்.

உடனே வேறு ஒரு பாடலைப்பாடி விளக்கினேன். நான் ஒரு டியூனையும், அமர் ஒரு டியூனையும் பாடி அவருக்கு இன்னும் தெளிவாக்கினோம்.

ஆண்: பொன்

பெண்: மஞ்சம்

ஆண்: தான்

பெண்: அருகில்

ஆண்: நீ

பெண்: வருவாயோ?

– இப்படி பாடிக்காட்டினோம். அதாவது ஆண் பாடுவதை தனியாகவும், பெண் பாடுவதை தனியாகவும் பிரித்துப் படித்தால் தனித்தனி அர்த்தம் வரும்.

அதாவது 'பொன் தான் நீ' என்கிறான் ஆண்.

'மஞ்சம் அருகில் வருவாயோ' என்கிறாள், பெண்.

சேர்ந்து பாடும்போது 'பொன் மஞ்சம் தான் அருகில் நீ வருவாயோ' என்று பொதுவாக இன்னொரு அர்த்தம் வரும்.

'சரி' என்று புரிந்ததாக தெரிவித்த வாலி, கொஞ்சம் யோசித்தார். பிறகு கையில் பேடை எடுத்தவர் யாருக்கும் காட்டாமல் அவர் எழுதும் பாணியில் மளமளவென எழுதினார்.

பாடல் என் கைக்கு வந்தது.

இரண்டு பேரும் பாடும்போது தனித்தனி அர்த்தங்களும், மொத்தமாய் பாடும்போது பொதுவான அர்த்தமும் வருவது மாதிரியே வாலி எழுதியிருந்ததில் எல்லோருக்குமே பிடித்துப்போயிற்று.

புதிய பிரச்சினை

இந்தப் பாடலை ரெக்கார்டு செய்யும்போது இன்னொரு பிரச்சினை வந்தது. ஒரு குரலில் காதலன் பாட, இன்னொரு குரலில் காதலனின் உள்ளமும் பாடவேண்டும் அல்லவா.

இதை எப்படி ரெக்கார்டு செய்வது?

ஏவி.எம். சம்பத் சாரிடம் "ஒரு குரல் பாடுவதை மட்டும் முதலில் ரெக்கார்டு செய்வோம். மற்றொரு குரல் பாடும் இடத்தை வெறுமனே விட்டு விடாமல் இசைக்கருவிகளை இசைப்போம். இப்படி முழுப்பாடலையும் பதிவு செய்து விட்டு, அதை மறுபடி "பிளே" செய்து இன்னொரு குரலை அதனுடன் பாட வைப்போம். பிறகு இன்னொரு ரெக்கார்டரில் மொத்தமாக இரண்டையும் பதிவு செய்வோம் என்று முடிவு செய்து தொடங்கினோம்.

டைரக்டர்கள் தேவராஜ் – மோகன் இருவரில், மோகன் சாருக்கு கம்போசிங் சமயத்தில் இருந்தே இதற்கு உடன்பாடில்லை. இந்தப் பாடலும் பிடிக்கவில்லை. பாடல் பதிவு நேரத்திலும் எதுவும் பேசாமல் "உம்"மென்றே காணப்பட்டார்.

'எப்படி வருமோ?' என்று அடிக்கடி சந்தேகம் எழுப்பிக் கொண்டிருந்தார்.

தேவராஜோ உற்சாகமாக இருந்தார். "இந்த மாதிரி ஐடியா வருவதே கஷ்டம். புதிதாக ஏதாவது செய்வதற்கு எப்போது சந்தர்ப்பம் கிட்டும்? இப்படிச் செய்கிற நேரத்தில் அதைப்பாராட்டாவிட்டாலும், புதிய முயற்சி என்று ஊக்குவிக்கவில்லை என்றால் 'கலைஞனாக' இருப்பதற்கு அர்த்தம் என்ன?" என்று பேசினார்.

இந்தப் பாடலின் இடையிடையே, பஸ்சில் கண்டக்டர் "தேனாம்பேட்டை சூப்பர் மார்க்கெட்... இறங்கு!", "இந்தாம்மா கருவாட்டுக்கூடை! முன்னாடி போ!" என்று பேசுகிற மாதிரி வரும். இதற்கு அண்ணன் பாஸ்கரை பேச வைத்தேன்.

அந்தப் பாடல் ரசிகர்களிடையே அதற்குரிய வரவேற்பை பெற்றது."

– இப்படிச் சொன்ன இளையராஜா, மூகாம்பிகை அம்மன் பேரில் கொண்ட பக்தியால் 4 பாடல்களை அதுவும் கன்னடப் பாடல்களை பாடி அன்றைய இசை உலகை திரும்பிப் பார்க்க வைத்தார். அதுபற்றி கூறியதாவது:–

மூகாம்பிகை பக்தி

"என்னதான் பாடல்கள் இசையமைப்பு, பாட்டுப் பயிற்சி என்று பிசியாக இருந்தாலும் அம்மா மூகாம்பிகை மீது எனக்கு ஒரு கவனம் எப்போதுமே இருந்து கொண்டிருந்தது. அவ்வப்போது மூகாம்பிகை போவதும், யார் வந்தாலும் என் செலவில் அழைத்துப்போவதும் தொடர்ந்தது.

இந்த நேரத்தில் அம்மாவைப் பற்றி கன்னடத்தில் பக்திப்பாடல் பாடி வெளியிட வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. உடனே தாமதமின்றி கன்னடப் பாடலாசிரியர் உதயசங்கரை சந்தித்தேன். "மூகாம்பிகை அம்மன் பற்றி 4 பக்திப்பாடல்கள் எழுதித்தர வேண்டும்" என்று கேட்டேன்.

அவரோ பிசியாக இருப்பதாகவும், இன்னொரு நாள் எழுதித் தருவதாகவும் சொல்லிவிட்டார்.

உறுதி

நான் அவரை விட பிசியாக இருந்தும், குறிப்பிட்ட அந்த நாளில் அந்த 4 பாடல்களையும் ரெக்கார்டு செய்தே தீருவது என்பதில் உறுதியுடன் இருந்தேன்.

என் பிடிவாதம் தெரிந்து கொண்ட உதயசங்கர், "எப்படியாவது பாடல்களை எழுதித்தந்து விடுகிறேன். ஆனால் நான் ரெக்கார்டிங்கிற்கு வரமுடியாது. என்னுடைய உதவியாளரை அனுப்புகிறேன். ஆனால் உன்னால் கன்னடத்தில் பிழையின்றி பாடமுடியுமா என்று எனக்கு சந்தேகமாக இருக்கிறது. ஏன் இப்படிச் சொல்கிறேன் என்றால், கன்னடம் சரியில்லை என்றால் யாரும் ஒத்துக்கொள்ள மாட்டார்கள்" என்றார்.

"பரவாயில்லை; முயற்சி செய்து பார்க்கிறேன்" என்று சொல்லிவிட்டு குறிப்பிட்ட நாளில் ரெக்கார்டிங் தொடங்கி விட்டேன். டைரக்டர் கே.சுப்பிரமணியத்தின் புதல்வர் கே.எஸ்.ரமணனின் "ஜெயஸ்ரீ ரெக்கார்டிங் தியேட்டரில்", குறைந்த வாத்தியங்களை வைத்துக்கொண்டு பாடினேன்.

அப்போது என் மனமெல்லாம் அம்பாளின் திருவடியிலேயே ஒன்றியிருந்தது. பாடும்போது உடலெங்கும் ஒரு அதிர்வு இருந்து கொண்டிருந்தது.

பாராட்டு

4 பாடல்களையும் ரெக்கார்டு செய்து முடிக்கும் நேரம் உதயசங்கர் வந்தார்.

பாடலின் கன்னட உச்சரிப்பில் தவறு ஏதும் இருக்கிறதா என்பதை கேட்பதற்காக வந்தார்.

பாடலைக் கேட்டவர்: “கன்னடப் பாடகர்களே பாடினாலும் இத்தனை தெளிவான கன்னடமாக இருக்காது. அவ்வளவு நன்றாக பாடிவிட்டீர்கள்” என்று பாராட்டினார்.

அந்த டேப்பை ஜி.கே.வி.யிடம் போட்டுக்காட்ட அவர் வீட்டுக்குப்போனேன். என்னைப் பார்த்ததும், “வாடா ராஜா!” என்றார். அவருக்கு பாடல்களை போட்டுக் காட்டினேன். “இது நீ பாடலைடா? அம்பாளே வந்து பாடியிருக்கா” என்று பாராட்டினார்.

அண்ணியும் (ஜி.கே.வி.யின் மனைவி) உடனிருந்து பாடலை கேட்டார். “அண்ணி! எப்படி இருக்கிறது?” என்று கேட்டேன்.

“ஐயோ அதைக் கேட்காதப்பா? எனக்கு உடம்பெல்லாம் சிலிர்த்தது” என்றார்கள்.

**படுத்த படுக்கையில் இருந்த**
**தன்ராஜ் மாஸ்டருக்கு இளையராஜா உதவி**

தனக்கு மேற்கத்திய இசையை கற்றுத்தந்த தன்ராஜ் மாஸ்டரை தன் இசைக் குருவாகவே கருதினார், இளையராஜா. மாஸ்டருக்கு உடல் நலக்குறைவு என்று கேள்விப்பட்டதும், அவரை ஆஸ்பத்திரியில் சேர்த்து 3 நாட்கள் தங்கியிருந்து அவரை கவனித்துக் கொண்டார்.

தனது இசை வாழ்வு அனுபவங்கள் பற்றி இளையராஜா கூறியதாவது:–

"மூகாம்பிகை மீது நான் பாடிய கன்னடப் பாடல்களை, சினிமாவில் எனக்கு இசையமைப்பாளர் அங்கீகாரம் கொடுத்த பஞ்சு அருணாசலம் சாரிடமும் போட்டுக்காட்ட விரும்பினேன்.

தெய்வீகப் பாடல்கள்

அப்போதே இரவு 10–30 மணி ஆகியிருந்தது. இருந்தாலும் போனேன். பாடல்களைக் கேட்டவர் பிரமை பிடித்தவர் போலானார். "பக்திப்பாடல் இப்படிக்கூட ஜீவனை உலுக்குவதாக அமையுமா என்ன? இதுபோல பக்திப்பாடல் வருவது இதுதான் முதல் தடவை. இது முற்றிலும் உண்மையான தெய்வீக நிலையில் பாடிய பாடல்கள் என்றார்.

அங்கேயே அண்ணி (பஞ்சு அருணாசலத்தின் மனைவி) இருவருக்குமாக டிபன் எடுத்துக்கொண்டு வந்து பரிமாறினார்கள். சாப்பிடத் துவங்கும்முன் அவரிடம், "அண்ணி! இந்தப் பாடல்களை கேட்டீர்களா?" என்று கேட்டேன்.

"அய்யோ! கேட்கும்போதே உடம்பெல்லாம் என்னவோ பண்ணுது" என்றார்.

நான் அவர்களிடம், "அண்ணி! அது யாருன்னு நினைச்சீங்க? அது என் அம்மா" என்றேன். அதோடு நில்லாமல், "நான் கூப்பிட்டால் இப்ப இங்கே வருவாங்க" என்று விரலை சொடுக்கினேன்.

நான் விரலை சொடுக்கிய அந்த வினாடியில் அண்ணிக்கு ஆவேசம் வந்துவிட்டது. சத்தமாக "ஏய் நான்தாம்ப்பா அது" என்று குரல் கொடுத்தார்கள்.

அவர்கள் சத்தமாக 'ஏய்' என்ற நொடியில் என் கைகள் தானாக கூப்பியது. கண்களில் இருந்து தாரை தாரையாக நீர் கொட்டியது. உள்ளம் கரைந்து கசிந்தது. சிறிது நேரம் அப்படியே இருந்து மனம் சாந்தமானதும் வீட்டுக்குப் புறப்பட்டேன்.

கோவில் சந்நிதியில்

இந்தப் பாடல்களை வருடத்தின் முதல் நாள் அம்மாவின் சன்னதியில் ஒலிக்கச் செய்யவேண்டும் என்று விரும்பினேன். இதற்காக டிசம்பர் 31–ந்தேதி மூகாம்பிகை போய்விட்டேன். இரவு தங்கி காலை 4 மணிக்கு சவுபர்ணிகாவில் குளித்து, நிர்மால்ய சேவை பார்த்துவிட்டு காலை 6 மணிக்கு மீண்டும் கோவிலுக்கு டேப் ரிக்கார்டருடன் போனேன்.

அங்கே தரிசனத்துக்கு நிற்கும் பகுதியையொட்டிய திண்ணையில் ஒரு பக்கத்தில்

டேப் ரிக்கார்டரை வைத்து அந்த பாடலில் இரண்டு பாடல்களை போட்டேன். சிறிதளவே பக்தர்கள் இருந்த அந்த சூழ்நிலையில் மனம் ரம்மியமானது. உள்ளம் அன்னையிடம் ஏங்கியது. "அம்மா! இந்தப் பாடலை நீ ஏற்றுக்கொண்டாயா என்பதை எனக்குப் புரியுமாறு நீ தெரிவிக்க வேண்டும்" என வேண்டிக்கொண்டேன்.

இந்நிலையில் இரண்டாவது பாடல் முடிந்து 'டேப்'பை 'ஆப்' செய்தேன்.

ஆனால் நான் பாடிய ஸ்ருதி மட்டும் என் காதுகளில் கேட்டுக் கொண்டேயிருந்தது. இது எங்கிருந்து கேட்கிறது என்று யோசித்தேன். அப்போதுதான் கோவிலில் காலை 7 மணியை அறிவிக்கும் கோவில் மணியை அடிக்கிறார்கள்; அந்த ஓசை அடங்காது அப்படியே கேட்டுக்கொண்டே இருக்கிறது என்பது புரிந்தது.

அடடா! அம்மா அல்லவா என் வேண்டுகோளுக்கு பதில் சொல்லி இருக்கிறாள். "பார்த்தாயா நீ பாடிய ஸ்ருதி என் கோவிலின் மணிச்சுருதியில் இருந்து இம்மிகூடப் பிசகாமல் அப்படியே பின்னிப் பிணைந்திருப்பதை!" என்று எனக்கு உணர்த்துவதைப் போலிருந்தது.

மெதுவாக கேட்ட அந்த கோவில் மணி ஓசையின் ஸ்ருதியை என் பாடலுடன் இணைத்துப் பார்த்தேன். ஆச்சரியம். எள்ளளவும் பிசகாத அதே ஸ்ருதி.

அம்மாவின் கருணையை எண்ணி ஆனந்தமானேன்."

இவ்வாறு கூறினார், இளையராஜா.

இசை குரு தன்ராஜ் மாஸ்டர்

தனது இசை குரு தன்ராஜ் மாஸ்டருக்கு சேவை செய்த அனுபவம் பற்றி இளையராஜா கூறியதாவது:—

"தன்ராஜ் மாஸ்டருக்கு உடல் நிலை சரியாக இல்லை என்ற செய்தி வந்தது. நானும் 'வயலின்' கல்யாணமும் போனோம். அவர் உட்கார பயன்படுத்தும் ஈஸி சேரில் எழுந்திருக்க முடியாத நிலையில் படுத்திருந்தார். அதிலேயே 'பாத்ரூம்' வேறு போயிருந்தார். கைத்தாங்கலாக பிடித்து அருகில் இருந்த பெஞ்சில் படுக்க வைத்தோம்.

நோய் உபாதையிலும் இசைக்குள் ஆழ்ந்துபோன அவரது குணநலன் வெளிப்பட்டது. அவரைத் தூக்கும்போது 'மெதுவாக மெதுவாக' என்பதற்கு பதில் 'அன்டான்டே அன்டான்டே' என்றார். இது, "இசையில் மெதுவாக வாசிக்கவும்" என்பதை குறிக்கும் இத்தாலிய மொழிச்சொல்.

இசையை மட்டுமே அறிந்த அவர், உடல் செயலிழந்து போனாலும், உயிரில் கலந்து போன இசையைக்கொண்டே தனது தேவையை சொன்னபோது நெகிழ்ந்து போனேன்.

அவரை பெஞ்சில் படுக்க வைத்து ஈஸி சேரை சுத்தம் செய்து காயப்போட்டோம். ரூமில் இருந்த பேனை வேகமாக ஓடவிட்டோம். காலை அமுக்கிவிடச் சொன்ன வார்த்தைகள் முனகல் போல கேட்டது. கண்களை மூடியபடியே படுத்திருந்தார்.

வலது காலை நானும், இடது காலை கல்யாணமும் ஆளுக்கொரு பக்கம் அமர்ந்து அமுக்கிவிட்டுக் கொண்டிருந்தோம். விரல்களை பிடித்து விடுமாறு சொன்னார். பெருவிரலை பிடித்தேன். 'அன்டாண்டே' என்றார். மெதுவாக பிடித்து விடவேண்டுமாம்!

அப்படியே அடுத்த விரல்களை பிடித்து விட்டேன். "டேய் இ ஸ்ட்ரிங்' என்றார். "சார்" என்றேன். அவர் சொல்ல வருவதை முழுமையாக புரிந்து கொள்ளும் நோக்கில்.

"கிட்டாரில் ஓப்பன் ஸ்ட்ரிங் எது?" என்று கேட்டார்.

"இ ஸ்ட்ரிங் சார்" என்றேன்.

"ம்... அதை பிடித்துவிடு" என்றார்.

அவரது, கால் பெருவிரல்தான் கிட்டாரின் கீழ் ஸ்தாயி கணக்கில் 'இ ஸ்ட்ரிங்'காம். இந்த வகையில் சுண்டு விரல் முதல் ஸ்ட்ரிங்காம். விரல்கள் எல்லாமே கிட்டார் வாத்தியத்தின் தந்திகள் ஆகிவிட்டன!

உலகத்தின் எந்த இசை மேதை வாழ்விலும் இப்படியொரு சம்பவத்தை நான் அறிந்ததில்லை.

நாங்கள் அங்கிருந்த நேரத்தில் சாயி லாட்ஜ் முதலாளி, மாஸ்டரை பார்க்க வந்திருந்தார். அவர் எங்களிடம், "நீங்கள் இவரை அவசியம் ஆஸ்பத்திரிக்கு கூட்டிச்செல்ல வேண்டும். இது சாதாரணமாக வரும் தேக அசவுகர்யம் இல்லை. அதிகமாக குடித்ததால் சேரியில் எங்கேயோ விழுந்து கிடந்திருக்கிறார். சேரி ஆட்கள் தூக்கி வந்து வீட்டில் போட்டு விட்டுப் போயிருக்கிறார்கள். காலில் அடிபட்டிருக்கிறது. கைகளைப் பாருங்கள், சிராய்ப்பு எப்படி இருக்கிறது? ஆஸ்பத்திரிக்குப் போனால்தான் "ஈரல்" ஏதாவது பாதிப்பு இருக்கிறதா என்பது தெரியவரும்" என்றார். தொடர்ந்து அவரே, "உடனடியாக ராயப்பேட்டை மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லுங்கள்" என்றும் யோசனை சொன்னார்.

நாங்களும் தாமதிக்கவில்லை. ஒரு டாக்சியை வரவழைத்தோம். ரூமில் இருந்து அவரை தூக்கி குறுகலான படிகள் வழியாக இறக்கி, டாக்சியில் ஏற்றுவதற்குள்ளாகவே சிரமப்பட்டுப் போனோம்.

மருத்துவமனையில் அட்மிட் செய்துவிட்டு நானும் கல்யாணும் கிட்டத்தட்ட இரண்டு மூன்று நாட்கள் உடனிருந்து மாஸ்டரை கவனித்துக்கொண்டோம்.

மறுபடியும் அவரை சாயி லாட்ஜ் 13–ம் நம்பர் அறையில் கொண்டு போய் சேர்த்தோம்.

உடல் நலிவு சரியாகிவிட்டது. ஆனால் சோர்வாக இருந்தார். ஆனால் இன்னும் அன்டாண்டே, அடாஜியோ போன்ற இத்தாலிய இசைக் குறிப்பு வார்த்தைகள் அவரிடம் இருந்து வந்து கொண்டிருந்தன.

அன்டாண்டே என்றால் 'மெதுவாக' என்று சொல்லிவிட்டேன். அடாஜியோ என்றால் என்னவென்று தெரிய வேண்டுமல்லவா, அதற்கு 'இன்னும் மெதுவாக' என்று அர்த்தம்.

கொஞ்சம் அவர் பழைய நிலைக்கு திரும்பும்வரை சாயி லாட்ஜில் இருந்து விட்டு, டாக்டர் கொடுத்த மருந்துகளை எந்த நேரத்தில் உபயோகிக்க வேண்டும் என்று விளக்கி சொல்லிவிட்டு விடை பெற்றோம். சாயி லாட்ஜ் மானேஜரிடமும் கவனித்துக் கொள்ளும்படி கேட்டுக்கொண்டோம்.''

இவ்வாறு இளையராஜா கூறினார்.

வாழ்க்கையில் மாற்றம்

குரு பக்தி ஒருபுறம் இப்படி என்றால், 'அம்மா' மூகாம்பிகை மீதான பக்தி இன்னொரு புறம் ஆழமாக போய்க்கொண்டிருந்தது. அம்மா மீதான பக்தி மேலீடு அதிகரித்த பிறகு தனது இயல்பான பழக்கவழக்கங்களில் இருந்து முற்றிலும் மாறுபட்டார், இளையராஜா.

அதுபற்றி கூறுகிறார்:–

''அம்மா மீதான என் ஈடுபாடு அதிகரித்த பிறகு திரை வாழ்விலான என் போக்கிலும் மாற்றம் ஏற்பட்டது. அதற்கு முன் யாரிடமும் உற்சாகமாக உரையாடுவது, நகைச்சுவை விஷயங்களை சிலாகித்து மகிழ்வது என்றிருந்த என் போக்கு அடியோடு மாறிற்று. நடை, உடை, பாவனைகளில் கூட மாறுதல் தெரிந்தது.

கதை சொல்ல டைரக்டர் என்று யார் வந்தாலும், கதையுடன் 'பாடல் சிச்சுவேஷன்' கேட்பதோடு சரி. பேச்சுவார்த்தை முடிந்து போகும்.

அம்மா பக்தியில் என் ஆன்ம பலம் கூடியிருந்த போதிலும், திரை வாழ்க்கையில் என் வேலையிலும் கவனமாகவே இருந்தேன். கவிக்குயிலை தொடர்ந்து, அவர் எனக்கே சொந்தம், உறவாடும் நெஞ்சம், பத்ரகாளி என படங்கள் தொடர்ந்தன. ஒவ்வொன்றிலும் புதிதாக செய்வதற்கு வாய்ப்பிருக்கிறதா என்று தேடிக்கொண்டிருப்பேன்.

10 வயது பாடகி

கவிக்குயில் படத்தில் 'சின்னக்கண்ணன் அழைக்கிறான்' பாடல் இருந்தாலும், ''காதல் ஓவியம் கண்டேன்'' என்றொரு பாடலை படத்தின் பிற்பகுதியில் சேர்க்க பஞ்சு சார் விரும்பினார். இந்தப் பாடலை சுஜாதா என்ற 10 வயது சிறுமி யைக்கொண்டு பாட வைத்தோம். குழந்தைதானே தவிர, குரல் என்னவோ பி.சுசிலா, எஸ்.ஜானகி போல பெரியவர்களின் தரத்தை ஒத்திருந்தது.

இந்தப் பாடலில்தான் முதன் முதலாக இசை மேதை 'பாக்'கின் காலத்திய இசையைப்போல கொடுத்து, அதன் மேல் நம் நாட்டு இசையான 'வீணை'யை வாசிக்க வைத்து பாடலை பதிவு செய்திருந்தேன். சினிமா இசையில் இரு வேறு பாணி இசைகள் ஒன்றாக கலந்தது அதுவே முதல் முறை. அது நன்றாகவும் அமைந்ததில் வெற்றி கிடைத்தது.

கேலி – கிண்டல்

ஆனால், இந்தப் பாடலை ஒலிப்பதிவு செய்யும்போதே வினியோகஸ்தர்கள் சிலர் கேட்டுவிட்டு, ''படத்தில் இந்தப்பாடல் வரும்போது, ரசிகர்கள் புகை பிடிக்க

வெளியே போய் விடுவார்கள்" என்று கமெண்ட் அடித்தார்கள்.

அதோடு நின்று விடாமல் "அவர்கள் புகை பிடிப்பதற்காக நாம் ஏன் பாடல் போடவேண்டும்**?**" என்று படத்தின் தயாரிப்பாளர் பஞ்சு சாரிடமும் கேட்டுவிட்டார்கள்.

இது விஷயம் என் காதுக்கு வந்தபோது நொந்து போனேன். புதிய விஷயம் ஒன்று கிடைத்துவிட்டது என்று நான் உற்சாகமாக பணிபுரிந்த நேரத்தில், மட்டமான அவர்கள் பேச்சு என் இதயத்தில் குத்துவது போல் இருந்தது.

**இசை அமைத்த பாடலை**
**'விநியோகஸ்தர்களுக்காக பாடிக்காட்ட மாட்டேன்'**
**இளையராஜா கண்டிப்பு**

"பைரவி" படத்தை பட அதிபர் கலைஞானம் தயாரித்தபோது, மெட்டமைத்த பாடலை விநியோகஸ்தர்களுக்காக பாடிக்காட்டும்படி இளையராஜாவிடம் கேட்டுக்கொண்டார். ஆனால், அவர் மறுத்துவிட்டார்.

கலையுலக அனுபவங்கள் பற்றி இளையராஜா கூறியதாவது:—

புதுமை

"பாடல்களில் புதுமை என்பது எனக்குப் பிடித்த விஷயம். கிடைக்கிற வாய்ப்புகளில், அதற்காக முயற்சிக்கவும் செய்வேன். ஆனால் அம்மாதிரி முயற்சிகளுக்கு வார்த்தைகள் மூலம் முதலிலேயே முட்டுக்கட்டை போடுவதும் தொடர்ந்தே நடந்தது.

ஆரம்பத்தில் ஜி.கே.வி.யிடம் கன்னடப்படங்களுக்கு பணியாற்றியபோதும், இம்மாதிரி நிறைய அனுபவங்கள் உண்டு. அழகான இலக்கியத் தரம் வாய்ந்த பாடல் அமையும்போது, வினியோகஸ்தர்கள் யாராவது தற்செயலாக வந்து கேட்க நேர்ந்தால், அப்போது அவர்கள் அடிக்கும் கமெண்ட் மிகவும் மட்டமாக இருக்கும்.

கன்னடத்தில், "உச்சா ஹாடு நமகு யாத்தக்கே?" (இது மூத்திரப்பாட்டு — நமக்கெதற்கு) என்பார்கள்.

அதாவது, தியேட்டரில் படம் பார்ப்பவர்களை, பாத்ரூமுக்குப் போகவைக்கும் பாட்டாம்.

ஒரு சமயம் பஞ்சு சாரையும், என்னையும் பார்த்த ஒருவர், "இந்த 'மச்சானைப் பார்த்தீங்களா?' மாதிரி ஒரு டாப் கிளாஸ் பாடல் ஒண்ணு போடலாமே" என்றார்.

"அந்தப் பாடலை யாரும் கேட்காமல் நாமே தானே போட்டோம்" என்று நானும் பஞ்சு சாரும் பேசிக்கொண்டோம். அதை இவர் போன்றோருக்கு எப்படிப் புரியவைப்பது?

அதுமாதிரி "கவிக்குயில்" படம் ரிலீசானபோது இந்த கசப்பை நான் அனுபவிக்க நேர்ந்தது. படத்தில் 'காதல் ஓவியம் கண்டேன்' என்ற அந்தப் பாடலை தியேட்டர் ஆபரேட்டரிடம் சொல்லி வெட்டி வைத்து விட்டுத்தான் ஓட்டினார்கள்.

'இவர்கள் இப்படித்தான் மட்டம் தட்டுவார்கள்' என தெரிந்து வைத்திருந்ததால் பொருட்படுத்தாமல் இருப்போம். அதோடு நிறைய வேலை இருந்ததால், இதையெல்லாம் கேட்டு வருத்தப்படவும் நேரமில்லை. நாங்கள் பாட்டுக்கு காட்டு வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படும் சருகு போல, சினிமா வெள்ளத்தில் விழுந்து வெற்றி அலைகளுக்கு எழும்புவதும், தோல்விப் பள்ளங்களில் வீழ்வதும் இல்லாது, மணற்பாங்கான பகுதியில் அமைதியாக ஓடும் ஆறு போல ஒரே சீராக போய்க்கொண்டிருந்தோம்.

எஸ்.பி.பாலசுப்பிரமணியம்

ஆரம்ப காலங்களில் என் நண்பன் எஸ்.பி.பாலசுப்பிரமணியம் பாட வந்தால், மைக் முன்னால் ரிகர்சலின் போது ஒரு காரியம் செய்வான். அன்று அவன் பாட வேண்டிய பாட்டு எந்த ஸ்ருதியில் என்ன ராகத்தில் இருக்கிறதோ, அதே ராகத்தில் எம்.எஸ்.விஸ்வநாதன் அண்ணன் கம்போஸ் செய்த பாடலை பாடிக்காட்டுவான்.

எனக்கோ, இதை நான் எம்.எஸ்.வி.யிடம் இருந்து காப்பியடித்து விட்டேன் என்று சொல்வது போல குத்தும்.

இப்படி நான் நினைக்க காரணமிருக்கிறது. சிறு வயதில் பாவலர் அண்ணன் கச்சேரிகளில் எம்.எஸ்.விஸ்வநாதன் இசை அமைத்த பாடலை வாசிக்க, ஜனங்கள் கை தட்டினால், இந்த கைதட்டல்கள், பாராட்டுகள் எல்லாம் இதை இசை அமைத்தவர்களுக்குத்தான் போய்ச் சேரவேண்டும், ஜனங்கள் எனக்காக கைதட்டவில்லை என்பதில் தெளிவாக இருந்தவன் நான்.

இன்னொருவரின் டியூனை நான் காப்பியடித்தால் அதனால் எனக்கு எப்படி பெயர் வரும்? கம்போஸ் பண்ணியவருக்கல்லவா அது போய்ச்சேரும். அந்த ஸ்ருதியில் இருக்கும் பாடல் என்ற ஒரே காரணத்துக்காக, அதன் காப்பி என்று எஸ்.பி.பி. சொல்கிறானோ என்று மனம் துக்கப்படும்.

பாடல் வெளிவந்து ஜனங்கள் பாராட்டியவுடன் அவனே வந்து, “டேய்! அந்தப் பாடல் ரொம்பப் பிரமாதம், அதைப் பாடும்போது இப்படி வரும் என்று தெரியாது” என்று நல்லபடியாகப் பேசிவிடுவான்.

இசையில் புதுப்புது முயற்சிகளுக்கு நான் தயாராக இருந்ததால், நாளடைவில் எஸ்.பி.பி.யும், எஸ்.ஜானகியும் கூட, ‘ராஜா! உங்க ரெக்கார்டிங்கிற்கு வருவதாக இருந்தால் பரீட்சைக்கு போகும் மாணவன் மாதிரி பயந்து கொண்டே வரவேண்டியிருக்கிறது’ என்று சொல்லியிருக்கிறார்கள். எல்லாம் ஜாலியாகத்தான். புதுமை முயற்சிகளில் வெற்றி கிடைக்கும்போது அவர்களுக்கும்தானே பெயர்!

ஆனால் இன்று வரை நான் யாருக்கும் பரீட்சை வைக்கவில்லை. எனக்கு நானே ஒவ்வொரு படத்திலும் பரீட்சை வைத்துக்கொண்டு, ஒவ்வொரு படத்திலும் கற்றது எவ்வளவு என்று கணக்குப் பார்த்துக் கொள்கிறேன்.”

கலைஞானம்

அண்ணன் பாஸ்கர் அடிக்கடி போய் சந்திக்கும் நண்பர்களில் ஒருவர் கலைஞானம். அவர் அப்போது தேவர் பிலிம்ஸ் கதை இலாகாவில் இருந்தார். அங்கே அவருடன் தூயவன், மகேந்திரன் ஆகியோரும் இருந்தார்கள்.

கலைஞானம் நல்ல கதை ஞானம் உள்ளவர். அவர் ஒரு படம் தயாரிக்கப் போவதாகவும், டைரக்டர் ஸ்ரீதரிடம் உதவியாளராக இருந்த பாஸ்கர் டைரக்ட் செய்யப் போவதாகவும், படத்தில் ரஜினி – ஸ்ரீபிரியா ஜோடியாக நடிப்பதாகவும் கூறினார். இந்தப் படத்துக்கு இசையமைத்துத்தர என்னைக் கேட்டார். ஒப்புக்கொண்டேன்.

படப்பிடிப்பு தொடங்கியது. முதல் நாள் செட்டில் ரஜினியை பார்த்துப் பேசினேன். அன்றைய தினம், கால் நொண்டியானதும் எடுக்க வேண்டிய பகுதிகளை எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

டைரக்டர் கே.பாலசந்தர் சாரிடம் இரண்டு ஹீரோக்களாக கமலும், ரஜினியும் நடித்துக் கொண்டிருந்தவர்கள், தனித்தனியாக நடிக்க முடிவெடுத்த நேரத்தில் ரஜினிக்கு இந்தப் படம் வந்திருந்தது.

இது தனி ஹீரோ படம். அடுத்து "புவனா ஒரு கேள்விக்குறி" என்ற படத்தில் சிவகுமாருடன் சேர்ந்து நடிக்கப் போகிறார் என்றும் ஒரு செய்தி வந்தது.

ரஜினியை ஷூட்டிங்கில் பார்த்தபோது, ஒரு நெருப்பு கனன்று கொண்டிருப்பது போல் தெரிந்தது. எனக்குள்ளும் தான் அப்படியொரு 'நெருப்பு' ஓடிக்கொண்டிருந்தது. எங்கள் இருவருடைய பேச்சும், சாதிக்க வேண்டிய இலக்கு பற்றியே வெறியோடு இருந்தது.

"பைரவி" பட செட்டில் கலைஞானமும் பாஸ்கரும் என்னிடம், "தேவையான பாடலை உடனடியாக ரெக்கார்டு செய்ய வேண்டும்" எனச்சொன்னார்கள்.

கவிதா ஓட்டலில் கவியரசர் கண்ணதாசனுடன் கம்போசிங்கிற்கு போனோம்.

நண்டூருது... நரியூருது...

டைரக்டர் பாடலுக்கான 'சிச்சுவேஷன்' சொல்ல, "நண்டூருது நரியூருது" என்று கிராமப்புறத்தில் பாடப்படும் குழந்தைகளின் விளையாட்டுப் பாடலை பல்லவியாக வைத்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றியது. எனவே டியூனை 'நண்டூருது நரியூருது' என்ற சந்தத்தை வைத்தே தொடங்கியிருந்தேன்.

கண்ணதாசனும் 'நண்டூருது' என்றே தொடங்கி, தங்கையை இழந்து நிற்கும் அண்ணன், தங்கையை கொன்றவர்களை பழிவாங்கத் துடிக்கும் சரணத்தில், உச்சஸ்தாயியில் "ஏழைக்கு வாழ்வு என்று எழுதியவன் எங்கே?" என்று எழுதியவுடன், பாடலின் வல்லமை எங்கேயோ உயரத்துக்குப் போய்விட்டது.

இந்தப் பாடலுக்கான காட்சி படமாக்கப்படும்போது, நான் இருந்தேன். டி.எம்.சவுந்தர்ராஜன் பாடிய அந்த அருமையான ஆண்மைக் குரலின் வார்த்தைகளுக்கு, ரஜினி காலிழந்து கட்டைகளோடு நிற்க, ஒரு டிராலி ஷாட் போட்டு ரஜினியிடம் காமிரா போய் நிற்பதாக எடுத்தார், டைரக்டர் பாஸ்கர்.

எடுக்கும்போதே அந்த 'ஸ்பிரிட்' தெரிந்தது. அது படத்தின் வெற்றிக்கு முக்கியமாக அமைந்தது.

பாட மறுப்பு

இந்தப் படத்திலேயே 'கட்டப்புள்ள குட்டப்புள்ள' என்ற கிராமியப் பாடலையும் டைரக்டரும், கலைஞானமும் போடச் சொன்னார்கள். கவிதா ஓட்டலில் கம்போஸ் நடந்தபோது, கலைஞானம் என்னைக் கேட்காமல் வினியோகஸ்தர்கள் சிலரை வரவழைத்து விட்டார். அதில் குடந்தையைச் சேர்ந்த ஒருவரும் இருந்தார்.

அவர்களைப் பார்த்ததும் ஏற்கனவே கவிக்குயில் பாடல் பதிவின்போது ஏற்பட்ட சம்பவம் நினைவுக்கு வர, இவர்கள் நம் பாடல் இப்படித்தான் வரவேண்டும் என்று தீர்மானம் செய்தால், நாம் புதிதாய் எதுவும் செய்ய முடியாது என்பது புரிந்து போயிற்று. எனவே யாராவது "பாடலை பாடிக்காட்டுங்கள்" என்று கேட்டால், பாடக்கூடாது என்று முடிவு செய்தேன்.

பாடல்களை கவியரசரும் எழுதிவிட்டார். எல்லாவற்றையும் முழுமையாக பாடிவிட்டேன்.

இந்த நேரத்தில் கலைஞானம், வினியோகஸ்தர்களை அழைத்து வந்தார். கவியரசருக்கு அறிமுகப்படுத்தினார். பிறகு என்னைப் பார்த்து "பாடலைக் கொஞ்சம் வாசித்துக் காட்டுங்கள்" என்றார்.

பாடியிருக்கலாம்.

ஆனால், நானோ எல்லாரும் ஆவலுடன் பாட்டை எதிர்பார்த்தும் ஆர்மோனியத்தை மூடிவிட்டு எழுந்து விட்டேன்.

எழுந்தவன் கலைஞானம் அவர்களிடம் கூலாக, "இங்கே பாடினா ஒன்றும் புரியாது. டி.எம்.எஸ் – சுசிலாவை பாட வைத்து மியூசிக்கோடு ரெக்கார்டு செய்து போட்டுக் காட்டிவிடுவோம். அப்போது நன்றாக இருக்கும்" என்றேன்.

நான் இப்படிச் சொன்னதும் அங்கிருந்த யாருக்கும் என்ன சொல்வதென்றே புரியவில்லை.

கண்ணதாசன் இதுபோன்றதொரு நிகழ்ச்சியை பார்த்ததில்லை என்பது அவர் எங்களைப் பார்த்த பார்வையில் இருந்தே புரிந்து போயிற்று.

ரிக்கார்டிங் சமயத்தில் எனக்கும் கலைஞானத்துக்கும் ஒரு தகராறு.

"மூன்று நாளைக்குள் ரிக்கார்டிங்கை முடிக்கத்தான் பணம் இருக்கிறது. அதனால் எப்படியாவது மூன்று நாளைக்குள் முடித்து விடுங்கள்" என்றார், கலைஞானம்.

இதுவரை இதுபோன்றதொரு பிரச்சினையை சந்தித்து இராததால், கலைஞானம் இப்படிச் சொன்னதும் எனக்கு கோபம் வந்துவிட்டது.

**ஆர்மோனியத்தை நண்பர் எடுத்து வாசித்ததால்**
**இளையராஜா ஆவேசம்**
**"இது என் உயிருக்கு சமம்! யாரைக்கேட்டு தொட்டாய்?"**

தனது ஆர்மோனியத்தை உயிருக்கும் மேலாக நேசிப்பவர் இளையராஜா. அவர் வீட்டில் இல்லாத நேரத்தில் அவரது ஆர்மோனியத்தை வாசித்துக்கொண்டிருந்த தனது நண்பரிடம் கடுமையான கோபத்தை வெளிப்படுத்தினார்.

தனது இசைப்பயண அனுபவம் குறித்து இளையராஜா கூறியதாவது:–

"பைரவி படத்தை தயாரித்த கலைஞானம், "மூன்று நாளைக்குள் ரீரிக்கார்டிங்கை (பின்னணி இசை சேர்ப்பு) முடிக்க வேண்டும். அந்த அளவுக்குத்தான் என்னிடம் பணம் இருக்கிறது. எனவே மூன்று நாளைக்குள் ரீரிக்கார்டிங்கை முடித்துவிடுங்கள்" என்று என்னிடம்

சொல்லிவிட்டார்.இதுமாதிரியானதொரு நெருக்கடியை இதுவரை சந்தித்திராதவன் என்ற முறையில், அவர் இப்படிச் சொன்னதும் எனக்கு கோபம் வந்துவிட்டது.

நான் அவரிடம், "படம் மிகவும் சீரியசாக மனதைத் தொடும் விதத்தில் அமைந்திருக்கிறது. எனவே, மூன்று நாளைக்குள் முடியுமா என்பது சந்தேகம். அதோடு மூன்று நாளைத் தாண்டிவிட்டால் யார் பணம் கொடுப்பது?" என்று கேட்டேன்.

அவரோ, "எப்படியும் மூன்று நாளைக்குள் முடித்தாகணும்" என்றார்.

"சம்பளம் வேண்டாம்"

அவர் இப்படிச் சொன்னதும் நான் இன்னும் கோபமாகி, "மூன்று நாட்களுக்கும் மேலாக ரீரிக்கார்டிங் போனால் என் சம்பளப்பணத்தை நீங்கள் தரவேண்டாம். அதை ஆர்க்கெஸ்ட்ராவுக்கு கொடுத்து விடுங்கள்" என்றேன்.

கலைஞானம் பதில் எதுவும் சொல்லாமல் போய்விட்டார்.

ரீரெக்கார்டிங் தொடங்கியாயிற்று. படத்தின் ஆரம்பத்திலேயே கிளைமாக்ஸ் காட்சிகள் போல, ஹீரோவின் தங்கையை கெடுப்பது, அவளின் மரணம், அதன் இறுதிக்காட்சிகள், ஹீரோவின் சபதம், வில்லனின் ஆட்களோடு சண்டை என்று போய்க்கொண்டிருந்தது.

எல்லா ரீல்களிலும் மியூசிக். மூன்று நாட்களுக்குள் முடியவில்லை. "சரி; அப்படியே இரவும் தொடர்ந்து வேலை செய்து முடித்து விடுங்கள்" என்றார், கலைஞானம்.

இதனால் இரவு 9 மணிக்கு முடிக்க வேண்டிய கால்ஷீட்டை முடிக்காது, இரவும் தொடர்ந்து வேலை செய்து அதிகாலை 4–30 மணிக்கு

முடித்தோம்.கலைஞானத்திடம் 'வருகிறேன்' என்றுகூட சொல்லாமல் கிளம்பினேன்.

கையில் பணம்

அப்போது அவர் நான் எதிர்பாராத ஒரு காரியம் செய்தார். என்னுடைய பாக்கி சம்பளத்தை கையில் வைத்தார்.

“நீங்கள்தான் பணம் இல்லை என்றீர்களே?” என்று கேட்டேன்.

“பரவாயில்லை. கலைஞர்கள் வயிறெரியக்கூடாது” என்றார், கலைஞானம்.

நான் அவரிடம், “வேண்டாம். எனக்கு வருத்தமில்லை” என்றேன்.

அவரோ, “இல்லையில்லை, கஷ்டப்பட்டு உழைத்திருக்கிறீர்கள். உங்களுக்கு பேசிய தொகை கொடுத்தால்தான் மரியாதை” என்று சொன்னவர், மேற்கொண்டு என்னை எதுவும் பேசவிடாமல் கையில் பணத்தை வைத்தார்.

ஜெய்சங்கர், ரஜினி, ஸ்ரீதேவி நடித்த படம் காயத்ரி. இதில் “வாழ்வே மாயமா?” என்ற பாடல், நல்ல பாடலுக்கு இசையமைத்தோம் என்ற திருப்தியை தந்தது.

இந்தப் படத்தில்தான் இந்தியத் திரை இசையில் முதன் முதலாக ‘எலெக்ட்ரிக் பியானோ’ உபயோகிக்கப்பட்டது.

தொடர்ந்து டி.என்.பாலு இயக்கிய “ஓடி விளையாடு தாத்தா” என்ற காமெடிப் படத்துக்கு இசையமைத்தேன். இது சோபியா லாரன்ஸ் நடித்த “ரோமன் ஹாலிடே” என்ற ஆங்கிலப்படத்தின் தழுவல்.

பெண் ஜென்மம்

பத்ரகாளியை அடுத்து ஏ.சி.திருலோகசந்தரின் “பெண் ஜென்மம்” படத்திற்கும் என்னையே இசையமைக்க அழைத்தார். இந்தப் படத்தில் ‘செல்லப்பிள்ளை சரவணன்’ என்ற பாடல் எனக்கு பிடிக்கும். இப்போது கேட்டாலும், அதில் மூன்றாவது சரணத்திற்கு முன்வரும் இசையை கேட்கும்போது மெய்சிலிர்க்க வைக்கும்.

ஸ்ரீதேவி நடித்த ‘சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு’ என்ற படம் வித்தியாசமான கதைக் கருவைக் கொண்டது. ஏலக்காய் எஸ்டேட்டுகளில் வேலை செய்யும் தாய்மார்கள், இருட்டும்வரை தங்களிடம் வேலை வாங்கும் முதலாளிகளைப் பார்த்து கெஞ்சுகிற முறையில் பாடும் பாடலான

“தண்ணி கறுத்திருச்சு – மணித்தங்கமே

தவளை சத்தம் கேட்டுருச்சு – ஒயில் அன்னமே

புள்ளையுமே அழுதிருச்சு – மணித்தங்கமே

புண்ணியரே வேலை விடு”

– என்று ஒரு பாட்டு இருக்கிறது.

சூரியன் மறைந்ததால், தண்ணீரில் இருட்டுப்பட்டு கறுப்பாகிவிட்டது. தவளைகள் கூட கத்துகின்றன. தொட்டிலில் தூங்க வைத்த பிள்ளையும் பசியால் அழுகிறது. புண்ணியவானே காலையில் இருந்து இருட்டும் வரை வேலை செய்து விட்டோம்.

இப்போது அந்தக் குழந்தைக்கு பாலூட்டுவதற்காகவாவது செய்த வேலை போதும் என்று சொல்லி, எங்களை விட்டுவிடு" என்று கெஞ்சும் பாடல் இது.

இந்த மெட்டை இந்தப் படத்தில் அதன் வார்த்தைகளை விட்டு விட்டு, வேறு வார்த்தைகளை வைத்து கவிஞர் வாலி பாட்டு எழுதினார். இது ஒரு தாலாட்டுப்பாடல் போல் படத்தில் உபயோகப்படுத்தப்பட்டது.

படம் வெற்றி பெறவில்லை.

"துணையிருப்பாள் மீனாட்சி" என்ற படத்தில் 'சுகமோ ஆயிரம்' என்று ஒரு பாடல் பிரபலம். இந்தப்படம் தொடர்பான ஒரு விஷயம் சொல்லவேண்டும்.

உயிர்

"சரசா பி.ஏ" என்ற படத்தை எடுத்த தயாரிப்பாளர் நடராஜன், திருச்சி ரங்கராஜன் என்பவருடன் சேர்ந்து பி.ஆர்.சோமு டைரக்ஷனில் "உயிர்" என்ற படத்தை ஜெமினி ஸ்டூடியோ உதவியோடு தயாரிக்க இருந்தார்.

ஏற்கனவே திருவையாறு ரமணஸ்ரீதர் – சரளா கச்சேரிகளுக்கு நான் வாசித்திருக்கிறேன்.

ரமணி (ரமணஸ்ரீதர்) இன்றைய நடிகர் ராகவேந்தர். இவர் தயாரிப்பாளர்களுக்கு நண்பர்.

என்னைப்பற்றிசொல்லி இந்தப் படத்துக்கு இசையமைக்க வைக்கலாம் என்று சிபாரிசு செய்திருந்தார்.

அதற்கு அவர்களோ, "முதன் முதலில் அவருக்கு படம் கொடுத்ததே நாம்தானே. அதற்கும் நீதானே சிபாரிசு செய்தாய். ஜெமினிகணேசன் – பத்மினி நடிக்க தாதாமி ராசி டைரக்ஷனில், வாசு ஸ்டூடியோவில் டி.எம்.சவுந்தர்ராஜன் பாட, 'சித்தங்கள் தெளிவடைய சிவனருளை நாடு' என்று அமரன் பாட்டெழுதி ரெக்கார்டு செய்து படம் நின்று போயிற்றே! அந்த ராஜாவைத்தானே சொல்கிறாய்?" என்று ரமணியை கேட்டிருக்கிறார்கள்.

"இல்லையில்லை. அது ஏதோ அசந்தர்ப்பம். அதற்காக திறமை உள்ளவர்களை தள்ளி வைத்தால் எப்படி?" என்று பதிலுக்கு இவர் கேட்டிருக்கிறார்.

இப்படிச் சொன்னதும் அவர்கள், "சரி சரி! ஒரு 5 பாடல்கள் ரெக்கார்டு செய்து கொடுக்கட்டும். ஏனென்றால் ஜெமினி ஸ்டூடியோவின் ஆதரவில் இந்தப்படம் வரவேண்டியிருக்கிறது. அதற்கு அவர்களிடமும் ஒப்புதல் வாங்க இந்தப் பாடல்கள் உதவியாக இருக்கும்" என்று சொல்லியிருக்கிறார்கள்.

ரமணி என்னிடம் வந்து இதைச் சொல்ல, ஸ்டூடியோவுக்கும் ஆர்க்கெஸ்ட்ராவுக்கும் என் கையில் இருந்த பணத்தைப்போட்டு ரெக்கார்டிங்குக்கு ஏற்பாடு செய்தேன்.

எஸ்.பி.பாலசுப்பிரமணியம், வசந்தா, சரளா, ரமணி பாடினார்கள். ஒரே நாளில் 5 பாடல்கள் பதிவாயின. ஜெமினி ஸ்டூடியோவில் கோடீஸ்வரராவ் என்ற என்ஜினீயர் பாடல்களை பதிவு செய்தார்.

பாடல்கள் "ஓ.கே" ஆயின. பூஜைக்கு நாள் குறிக்கப்பட்டது.

இப்போது போல, அப்போதெல்லாம் பூஜைக்கு அழைப்பிதழோ, போஸ்டர்களோ அடிக்கும் பழக்கம் இல்லை.

பூஜை, பாடல் பதிவு அவ்வளவுதான். எல்லாரையும் நேரிலோ, போனிலோ அழைத்து விடுவார்கள்.

ஆர்மோனியம்

பூஜைக்கு முதல் நாள். ரமணி காமராஜர் சாலையில் நாங்கள் இருந்த வீட்டுக்கு வந்திருக்கிறார்.

அப்போது நான் வீட்டில் இல்லை. இந்த ரமணி எப்போதுமே துறுதுறுவென்றிருப்பார். டிபன் சாப்பிட்டு விட்டு ஓட்டலில் இருந்து வெளியே பீடா ஸ்டாலில் பீடா போட்டால், கடைக்காரரை குஷிப்படுத்த சத்தம் போட்டு ஏதாவது ஒரு பாடலைப் பாடுவார். இப்படிப்பாடும்போது ரோட்டில் டிராபிக்கோ, மாணவ, மாணவியரோ, ஜனங்களோ யார் வேடிக்கை பார்த்தாலும் கவலையே படமாட்டார். பாடி முடித்ததும் காசு கொடுத்துவிட்டு 'கண்ணா நான் வரட்டுமா?' என்று கிளம்பிவிடுவார்.

நாங்களெல்லாம் அவர் பாடுவதையும், சிவாஜி போல் நடித்துக் காட்டுவதையும் சிரித்த முகமாய் ரசிப்போம்.

வீட்டுக்கு என்னைப் பார்க்க வந்தவர், காத்துக்கொண்டிருக்க முடியாமல் ஒருவித தவிப்பு நிலையில் இருந்திருக்கிறார். அம்மா அவரை "உட்காரு தம்பி" என்று சொல்லியிருக்கிறார்கள்.

உட்கார்ந்தவர் என் ஆர்மோனியப் பெட்டியை எடுத்து ஏதோ வாசிக்க முயற்சி செய்து கொண்டிருந்தார். அந்த நேரம் பார்த்து நான் வீட்டுக்கு வந்துவிட்டேன்.

உயிருக்கு மேல்

எனக்கோ என் ஆர்மோனியம் உயிருக்கு மேல். அதை யாரையும் தொடவிடமாட்டேன்.

என் ஆர்மோனியத்தை இவர் வாசிப்பதை பார்த்ததும் எனக்கு கோபம் வந்துவிட்டது.

"ஏய்! யாரைக் கேட்டு இதைத் தொட்டாய்?" எப்படி நீ இதைத் தொடலாம்?" என்று கன்னாபின்னா என்று சத்தம் போட்டேன்.

அவர் இதைக் கொஞ்சமும் எதிர்பார்த்திருக்கவில்லை. நான் கத்தியதில் ஏற்பட்ட அதிர்ச்சியையும், அவர் நினைத்துப் பார்த்திருக்க மாட்டார். என்றாலும் அதிர்ச்சியை உள்வாங்கிக்கொண்டு, "ஏய் ராஜா! என்னய்யா இது? இந்த சின்ன விஷயத்துக்கு ஏன் இவ்வளவு கோபம்?" என்று என்னை சமாதானப்படுத்த முனைந்தார்.

ஆனால் நான் சமாதானப்படுத்த முடியாத அளவுக்கு அப்போது இருந்தேன். இதனால் மேலும் கத்திவிட்டேன்.

ஒரு கட்டத்தில் ரமணியால் தாங்கமுடியவில்லை. உடனே அவருக்கும் கோபம் வந்து, "ஏய்! என்னை இந்த (ஆர்மோனியம்) பெட்டியைத் தொடக்கூடாதுன்னு சொல்லி திட்டிட்டே இல்லே? உன் முன்னால் நான் மியூசிக் டைரக்டரா ஆகிக்காட்டலைன்னா நான் ரமணி இல்லை" என்று சபதம் செய்தார்.

நானும் விட்டேனில்லை. "நீ மியூசிக் டைரக்டராகு. பேர் எடு. அதனால எனக்கொண்ணும் இல்லை. என் இடம் எனக்குத்தான். உன் இடம் உனக்குத்தான். ஆனால் நீ ஒரு பாடகனா இந்த சினிமாவில் பேர் எடுக்கவே முடியாது" என்று கண்மூடித்தனமாக வார்த்தைகளை

விட்டுவிட்டேன்.அடுத்த நாள் பூஜையில் "உயிர்" படத்துக்கு ரமணி இசையமைப்பாளர். அவரது இசையில் பாடல் பதிவானது. ரமணி, ரமணஸ்ரீதர் ஆகிவிட்டார்.

இந்தப் படத்துக்கு நான் ஏற்கனவே பதிவு செய்து வைத்திருந்த பாடல்களில் ஒன்றான 'புது நாள் இன்று தான்' என்று அமரன் எழுதி வசந்தா பாடிய பாடல், இப்போது "சுகமோ ஆயிரம்" என்று எஸ்.பி.பி.யும், பி.சுசீலாவும் பாட, 'துணையிருப்பாள் மீனாட்சி' படத்தில் இடம் பெற்றது.

**இளையராஜா இசை அமைப்பில்**
**பாடும்போது கண்ணீர் விட்டு அழுதார், எஸ்.ஜானகி!**
**பாடல் பதிவின்போது பரபரப்பு**

இளையராஜா இசையில் பாடிக்கொண்டிருந்த எஸ்.ஜானகி திடீரென பாட முடியாமல் கண்ணீர் விட்டு அழுதார். இசைக்குழுவினர் திகைத்துப் போனார்கள்.

இதுபற்றி இளையராஜா கூறியதாவது:–

அச்சாணி

காரைக்குடி நாராயணன் கதை வசனம் எழுதிய படங்கள் அப்போது நன்றாக ஓடிக்கொண்டிருந்தன. இதனால் அவரே ஒரு படம் தயாரிக்க முன்வந்தார். படத்துக்கு "அச்சாணி" என்று பெயர் வைத்தார். படத்துக்கு இசையமைக்க என்னைக் கேட்டுக்கொண்டார்.

கதை சொன்னார். எனக்குப் பிடித்திருந்தது.

பூஜையன்றே பாடல் பதிவு.

பாடல்களை கவிஞர் வாலி எழுதினார். கம்போசிங்கும் நடந்து முடிந்தது.

இதில் "மாதா உன் கோவிலில் மணித்தீபம் ஏற்றினேன்" என்ற பாடல், படத்தின் அச்சாணி போல.

ஆனால் பூஜைக்கு முதல் பாடலாக வேறு பாடலை தேர்வு செய்திருந்தேன். பிரசாத் ஸ்டூடியோவில் பூஜை என்று முடிவானது.

குழப்பம்

பூஜை தினத்தில் சவுண்டு என்ஜினீயர் எஸ்.பி.ராமநாதன் ஒரு சிறிய தவறு செய்ய, அது குழப்பமாகி பூஜையன்று எல்லாருக்குமே டென்ஷன்.

எங்களுக்கு கொடுத்த பூஜை தினத்திலேயே உபேந்திரகுமார் என்ற கன்னட இசையமைப்பாளருக்கும் பூஜை வைத்துக்கொள்ளலாம் என்று சொல்லியிருக்கிறார்.

அதாவது இரண்டு பேருக்கும் ஒரே நேரத்தில் ஒரே இடத்தில்.

பூஜைக்காக காலை 7 மணிக்கு பிரசாத் ஸ்டூடியோ போனால் அங்கே வேறு ஆர்க்கெஸ்ட்ரா (இசைக்குழு) இருந்தது.

"இதென்ன! இவர்கள் எங்கள் ரெக்கார்டிங்கில் வாசிப்பவர்கள் இல்லையே?" என்று கேட்டால், அப்புறம்தான் உண்மை தெரிந்தது. எஸ்.பி.ராமநாதன் இரண்டு பூஜைகளுக்கும் ஸ்டூடியோவை கொடுத்து இருப்பது!

ஞாபக மறதியாலோ அல்லது காலை 10 மணிக்குள் ஒரு பாடலை யாராவது முடித்து விட்டால், அடுத்த பாடலை மதியம் ஒரு மணிக்குள் எடுத்து விடலாமே என்று அவரே ஒரு தப்புக்கணக்குப் போட்டிருந்தாரோ என்னவோ தெரியவில்லை.

இப்போது யார் ரெக்கார்டிங் வைத்துக் கொள்வது என்று நான் எஸ்.பி.ராமநாதனைக் கேட்க, அவர் சமாளித்துப் பார்த்தார். பதில் சொல்ல முடியவில்லை.

உபேந்திரகுமாரோ எதுபற்றியும் சட்டை செய்யாமல் அவரது பாடலை ரிகர்சல் செய்யத் தொடங்கி விட்டார்.

இனி இங்கே வேலைக்காகாது என்று தெரிந்து போக, ரெக்கார்டிங் நடத்த ஜேசுதாசின் தரங்கிணி ஸ்டுடியோவை கேட்கச் சொன்னேன். அங்கே நடத்தலாம் என்பது தெரியவந்ததும் ஆர்க்கெஸ்ட்ராவுடன் அங்கே போனேன். அங்கே பூஜையெல்லாம் தொடங்கி முடிந்து, ரெக்கார்டிங் ஆரம்பிக்கும் சமயத்தில் மிஷின் ரிப்பேர் ஆகிவிட்டது.

இதற்குள் நேரம் மதியம் ஒரு மணியை நெருங்கிக் கொண்டிருந்தது.

இதே நேரம் பிரசாத் ஸ்டுடியோவில் நடந்த ‘ரெக்கார்டிங்’ முடிந்து எல்லாரும் போய்விட்டார்கள். அங்கே மாலையில் வேறு ரெக்கார்டிங் இல்லாததால் 2 மணிக்கு மறுபடியுமாக அங்கேயே போனோம்.

ஜானகி வருகை

ஆர்க்கெஸ்ட்ரா தயாரானது. ஜானகி வந்தார். ‘மாதா உன் கோவிலில்’ பாடலையே எடுத்துவிட, ஒத்திகை பார்த்து ‘டேக்’ போகலாம் என்று தொடங்கினோம்.

இரண்டு மூன்று டேக் சரியாக வரவில்லை. நானோ இந்தப்பாடல் முடிந்து இன்னும் ஒரு பாடல் எடுக்க வேண்டும் என்ற டென்ஷனில் இருந்தேன்.

இந்தப் பாடலை எடுத்துக் கொண்டிருக்கும்போதே நிறைய சங்கதிகள் கற்பனையில் வர, ஜானகியிடம் அவ்வப்போது சென்று மாற்றிக்கொண்டே இருந்தேன்.

ஒரு டேக் நன்றாக வந்து கொண்டிருந்தது.

அடுத்து மூன்றாவது பின்னணி இசை சேர்ப்பு தொடங்கவேண்டும். ஆனால் யாரும் வாசிக்கவில்லை. காரணம், ‘கண்டக்ட்’ செய்த கோவர்த்தன் சார் கைகாட்ட மறந்துவிட்டார்.

எனக்கு கோபம். “என்னண்ணே! டேக் நன்றாக வந்து கொண்டிருக்கிறது. பேக்ரவுண்டு மியூசிக்கிற்கு ஏன் கை காட்டவில்லை?” என்றுகேட்டேன்.

அவரோ, “பாட்டில் மெய் மறந்துட்டேன்யா” என்றார், கூலாக.

எனக்கோ, அடடா! இவ்வளவு ஒன்றிய நிலையில் கண்டக்ட் செய்பவரை திட்டிவிட்டோமே என்று வருத்தம் ஆனது.

அடுத்த டேக்.

மூன்றாவது சரணத்தில் ஜானகி பாடும்போது,

“பிள்ளை பெறாத பெண்மை தாயானது

அன்னை இல்லாத மகனை தாலாட்டுது”

– என்ற வார்த்தைகளை அழகாகப் பாடியவர் அதற்கப்புறம் தொடர்ந்து பாடாமல் விட்டு விட்டார்.

“ஐயோ நன்றாக இருந்ததே! ஏன் அடுத்த அடியை விட்டு விட்டீர்கள்?” என்று ஜானகியை கேட்டேன்.

ஆர்க்கெஸ்ட்ராவிலோ யாரும் எதுவும் பேசாமல் அமைதியாக இருந்தார்கள்.

பொதுவாக ‘டேக்’ கட் ஆனாலே “பேன் போடு” என்று சத்தம் போடுபவர்கள், சத்தமே இல்லாமல் இருக்கிறார்களே என்று பார்த்தால், கோவர்த்தன் சார் ‘வாய்ஸ் ரூமை’ கைகாட்டி ஏதோ சொன்னார்.

கண்ணீர்

என்னவென்று புரியாமல் ‘வாய்ஸ் ரூமை’ பார்த்தால், கண்ணாடி வழியே ஜானகி கர்ச்சிப்பால் கண்களை துடைத்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

விஷயம் என்னவென்று பார்த்தால், ஜானகி இப்படிச் சொன்னார்: “டியூனும் வார்த்தையும் கலந்து ‘பாவத்தில்’ ஏதோ ஒன்றை உணர்த்திவிட, அழுகை வந்துவிட்டது. அழுகையோடு பாடவும் முடியாமல், அழுகையை நிறுத்தவும் முடியாமல் விட்டுவிட்டேன்.”

ஜானகி இப்படிச் சொல்லி முடித்ததும் எல்லாரும் உருகி விட்டார்கள்.

கமல் பாட்டு

ருத்ரையா இயக்கத்தில் கமல் நடித்து வெளிவந்த படம் ‘அவள் அப்படித்தான்.’ இதில் என் இசையில் கமல் ஒரு பாட்டு பாடியிருப்பார். கமல் அப்போது மலையாளப்படம் ஒன்றில் நடித்து வந்தார்.

ரெக்கார்டிங்கின்போது ஸ்டுடியோவுக்கு வந்தார். பாடலை பாடிக்காட்டினேன். கேட்டு அவரும் பாடிப்பார்த்தார். நன்றாக வந்தது. அப்படியே பாடவைத்து ரெக்கார்டு செய்து விட்டோம். அது ‘பன்னீர் புஷ்பங்களே’ என்ற பாடல். அமர் (கங்கை அமரன்) எழுதியது.

கோவையில் நடந்த இசை நிகழ்ச்சி ஒன்றில் இந்தப் பாடலுக்கான மெட்டு உதயமானது.

அந்த விழா மேடையில் பஞ்சு சாரும், டைரக்டர் எஸ்.பி.முத்துராமன் சாரும் மேடையிலேயே வந்து பாடலுக்கான ‘சிச்சுவேஷன்’ சொல்ல, மேடையிலேயே கம்போஸ் செய்து ஆர்க்கெஸ்ட்ராவோடு பாடியது.

அந்தப் பாடலுக்கு வேறு வார்த்தைகளை போட்டு அமர் எழுதியதுதான் ‘பன்னீர் புஷ்பங்களே’ பாட்டு.

இந்தப் பாடலை கமல் பாடி முடித்து ரொம்ப நாள் கழித்துத்தான் அதில் இருந்த

தவறு ஒன்று எனக்குத் தெரிந்தது.

கமல் 'பன்னீர் புஷ்பங்களே' என்ற வார்த்தையை 'பன்னீர் புஷ்பங்ஙளே' என்று பாடிவிட்டார். இதுபற்றி அவர் கூறும்போது, "அப்போது மலையாளப் படத்தில் நடித்து வந்ததால் தமிழை மலையாளம் போல பாடிவிட்டேன்" என்றார்.

டைரக்டர் ஸ்ரீதர்

ஒருநாள் டைரக்டர் ஸ்ரீதர் என்னைப் பார்க்க வந்தார்.

யார் மேல் எங்களுக்கு பிரியம் அதிகமோ, யாரை நாங்கள் ஹீரோவாக நினைத்தோமோ, யாரை 'தென்னாட்டு சாந்தாராம்' என்று மக்கள் அழைத்தார்களோ, அந்த ஸ்ரீதர் என்னைப் பார்க்க வந்ததில் அளவு கடந்த மகிழ்ச்சி எனக்கு.

ஸ்ரீதர் சார் இயக்கிய 48 படங்களுக்கு மேல் அண்ணன் எம்.எஸ்.விஸ்வநாதன் இசையமைத்திருக்கிறார். ஒரு படத்தில் கூட அவர் இசையமைத்த பாடல் சோடை என்று சொல்ல முடியாது. அப்படிப்பட்ட அவரையே விட்டு விட்டு, ஸ்ரீதர் சார் நம்மி டம் வருகிறாரே, இதுதான் சினிமா உலகமா? இவரும் சாதாரண சினிமாக்காரர்தானா? இந்த சினிமா உலகம் நாளைக்கு இதுபோல் தான் நம்மையும் விட்டு விடுமோ என்ற எண்ணமும் ஒரு கணம் மனதில் ஓடியது.

ஸ்ரீதர் தனது படத்துக்கு "இளமை ஊஞ்சலாடுகிறது" என்று பெயர் வைத்திருந்தார்.

அப்போது காலை 9 மணியில் இருந்து இரவு 9 மணி வரை ஒரு படத்தின் பின்னணி இசை வேலை நடந்து கொண்டிருந்தது. அதனால் கம்போசிங் காலை 7 மணியில் இருந்து 9 மணி வரைக்கும், இரவு 10 மணியில் இருந்து விடியும் வரைக்கும் நடந்தது.

"ஒரே நாள் உனை நான்நிலாவில் பார்த்தது"

– என்ற பாடல் படத்தின் "தீம் ஸாங்."

"நீ கேட்டால் நான் மாட்டேன் என்றா சொல்வேன் கண்ணா?" என்ற இரண்டு பாடல்களையும் முதலில் பதிவு செய்தோம்.

மூன்றாவதாக "தண்ணி கருத்திருச்சு" என்ற கிராமியப்பாடல் வார்த்தையை வைத்து இசையமைத்தேன். தொடக்கம் மட்டும் அதை வைத்துக்கொண்டு மற்ற வரிகளை கவிஞர் வாலி மாற்றிவிட்டார்.

இந்தப் பாடலை யாரைப் பாட வைத்தால் நன்றாக இருக்கும் என்று யோசித்தபோது, சட்டென ஜி.கே.வெங்கடேஷ் நினைவுக்கு வந்தார். அவரையே பாட வைக்கலாம் என முடிவு செய்தோம்.

அடுத்த நாள் ஏவி.எம்.மில் ரெக்கார்டிங்.

ஜி.கே.வி. பாடலை கற்றுக்கொண்டார். டைரக்டர் ஸ்ரீதர், உதவி டைரக்டர்கள் கோபு, வாசு, சந்தானபாரதி என எல்லோரும் இருந்தார்கள். பல ஒத்திகைகள் நடந்தது. பாடுவதற்கு மைக் முன்னால் போனால், ஒரு அடி பாட, அடுத்த அடியின் டியூன் மறந்து போகும். மறுபடி நினைவுபடுத்திப்பாட, இரண்டாவது ரிகர்சலில் வேறு ஒரு

இடத்தில் மறந்து போகும்.

இப்படியே பஸ் ஒவ்வொரு அடி நகரும்போதும் பிரேக் போட்டு பிரேக் போட்டு போவது போல ஆயிற்று. அங்கேயே நின்று கொண்டிருந்தது பாட்டு.

"சரி டேக்கில் வந்து விடும். டேக்கில் 'ட்ரை' பண்ணலாம்யா" என்று கோவர்த்தன் சார் சொல்ல, டேக் தொடங்கினோம். அது பல்லவியோடு கட் ஆகிவிட்டது!

இப்படியே ஒரு லைன் – பாதி வரி – அடுத்த லைன் – இன் னொரு பாதி வரி என்று 62 டேக்குகளுக்கும் மேலாகிவிட்டது. மணியோ மதியம் இரண்டை நெருங்கிக்கொண்டிருந்தது.

மதியம் எம்.எஸ்.விஸ்வநாதன் அண்ணன் ரெக்கார்டிங். அவர் வேறு வந்துவிட்டார். வந்தவர் ஜி.கே.வி. பாடுவதைக் கேட்டு, "டேய் வெங்கடேசா! நல்லாப் பாடுடா!" என்று தான் வந்திருக்கிறதையும் அறிவித்து உற்சாகப்படுத்தவும் செய்தார்.

ஜி.கே.வி. இன்னும் டென்ஷனாகி விட்டார். 'டேக்' தொடக்கத்தில் ஏற்கனவே அவருக்கு டென்ஷன்.

அப்போது டைரக்டர் ஸ்ரீதர், "இவ்வளவு கஷ்டமாக இருந் தால் இந்தப் பாடல் எதற்கு? வேண்டாம், ராஜா! கேன்சல் செய்து விடுவோம். வேறு டியூன் போட்டுக் கொள்ளலாம்" என்றார்.

**சரியாக வாசிக்காவிட்டால்**
**'அண்ணன் என்றாலும் கோபப்படுவேன்!'**
**இளையராஜா கூறுகிறார்**

"இசைக் கருவிகளை சரியாக வாசிக்காவிட்டால், அண்ணன் என்றாலும் கோபப்படுவேன்" என்று இளையராஜா கூறினார்.

தனது இசைப்பயணம் குறித்து இளையராஜா கூறியதாவது:–

"தண்ணி கறுத்திருச்சு" பாடலுக்கு டைரக்டர் ஸ்ரீதர் வேறு டியூன் போட்டுக்கொள்ளலாம் என்று சொன்னாலும், எனக்கு மனசு கேட்கவில்லை. நான் அவரிடம் "சார்! இது ஹிட் ஆகும் நல்ல டியூன்தான். நிறுத்தி நிறுத்திப்பாடி முழுப்பாடலையும் கேட்க முடியாததால் உங்களுக்கு அப்படித் தோன்றுகிறது" என்றேன்.

அதோடு, "இந்தப்பாடலை வேறு ஒருவரைக்கொண்டு பாடச் சொல்லலாம்" என்றும் சொன்னேன்.

"வேறு யாரை பாட வைக்க நினைக்கிறீர்கள்?" கேட்டார் ஸ்ரீதர்.

"மலேசியா வாசுதேவனை பாட வைக்கிறேன்" என்றேன்.

"உங்கள் விருப்பம்" என்றார், ஸ்ரீதர்.

சொன்னபடி மலேசியாவை பாட அழைத்தேன். ஜி.கே.வி.யும் கூட இருந்தார். மலேசியா வாசுதேவன் பாடி முடித்த நேரத்தில் ஜி.கே.வி. என்னிடம், "இவ்வளவு வித்தியாசமான பாடல் என்று எனக்கு ஏன் அன்றைக்கு தெரியாமல் போயிற்று?" என்று கேட்டார்.

இந்தப் பாடல் உள்பட இளமை ஊஞ்சலாடுகிறது படத்தின் எல்லாப் பாடல்களுமே 'ஹிட்' ஆனது.

"என்னடி மீனாட்சி" என்பது இந்தப் படத்தில் இடம் பெற்ற இன்னொரு பாடல்.

வேடிக்கை

இந்தப்பாடல் பதிவின்போது ஒரு வேடிக்கை நடந்தது.

வெளியூரில் இருந்து நிறைய கல்லூரி மாணவ–மாணவிகள் ஸ்டூடியோவுக்கு ஷூட்டிங் பார்க்க வந்திருந்தார்கள். அப்படியே என்னுடைய ரெக்கார்டிங் நடக்கிறது என்று கேள்விப்பட்டு அனுமதியுடன் ரெக்கார்டிங் தியேட்டருக்கு வந்தார்கள்.

நான் கண்டக்ட் செய்து கொண்டிருந்தேன். அனைவரும் அமைதியாக நின்று வேடிக்கை பார்த்தார்கள்.

திடீரென்று கமலஹாசன் வந்துவிட்டார். ரிகர்சல் முடிந்ததும் எல்லாரும் அமைதியாய் நிற்க, நான் ஒரு சிறு தமாஷ் செய்ய விரும்பினேன்.

மியூசிக் எழுதிய பேப்பரை கையில் எடுத்துக்கொண்டு கமலை நோக்கிப் போனேன். அவருடைய கையில் மியூசிக் பேப்பரை கொடுத்து, கொஞ்சம் சத்தமாக "கமல் சார்! எல்லாம் நீங்க சொன்னது போல் எழுதி ரிகர்சல் செய்துவிட்டேன். சரியா இருக்கா? இல்லே ஏதாவது மாற்றணுமா? பார்த்திட்டு சொல்லுங்க" என்றேன்.

உடனே அவரும் சிரிக்காமல் சீரியசாக "எல்லாம் சரியாத்தான் இருக்கு. ஆனால்..." என்று இழுத்து, அதில் ஒரு இடத்தைக்காட்டி "இந்த இடத்தில்தான் நான் எழுதியது போல் வரவில்லை. அதை மட்டும் சரி செய்து விட்டால் நூறு சதவீதம் 'பெர்பெக்ட்' ஆகிவிடும்"

என்றார்.ஆர்க்கெஸ்ட்ரா குழுவினருக்கு எங்கள் நாடகம் புரிந்தது. தங்களுக்குள்ளாக சிரித்துக்கொண்டார்கள்.

மாணவ—மாணவிகள் தான் எங்கள் நாடகம் புரியாமல் அப்படியே அதை உண்மை என்று நம்பிவிட்டார்கள்.

"அய்யே! இவ்வளவுதானா? கமலஹாசன் சொல்வதைத்தான் இந்த இளையராஜா செய்கிறாராக்கும்!" என்று அவர்களுக்குள் மெல்லிய குரலில் பேசிக்கொண்டே கலைந்து போனார்கள்.

அவர்கள் வெளியே போகும்வரை அமைதியாக இருந்துவிட்டு, அதற்கப்புறம் நானும் கமலும் சிரித்தோம். பாருங்கள்.... அப்படியொரு சிரிப்பு. எங்களுடன் இசைக் குழுவினரும் சேர்ந்து சிரித்தார்கள்.

கண்டிப்பு

இசை விஷயத்தில் நான் ரொம்பவே கண்டிப்பானவன். இசையில் மட்டும் ஏதாவது தவறு வந்தால் கோபம் பொத்துக்கொண்டு வந்துவிடும். பெரியவர், சிறியவர் என்ற தராதரம் இல்லாது கோபப்பட்டு விடுவேன்.

அண்ணன் பாஸ்கர் மீது கூட இப்படி என் கோபம் பாய்ந்திருக்கிறது. ரெக்கார்டிங்கின்போது பாஸ்கர் "காங்கோ" போன்ற கருவிகளை வாசிப்பார். சில சமயம் இஷ்டப்படி வாசிப்பார். அதை வேண்டாமென்று சொல்வேன். உடனே என்னை வெறுப்பேற்றவோ, அல்லது தம்பிதானே என்ற எண்ணத்திலோ மீண்டும் தவறாக வாசிப்பார்.

எனக்கு தலைக்கேறிவிடும். சத்தம் போட்டு வெளியே அனுப்பி விடுவேன்.

இசைக்குழுவினர் பார்க்க இது நடக்கும். என் இசையில் 'காம்ப்ரமைஸ்' என்ற பேச்சுக்கே இடம் இருக்காது. கூடப் பிறந்த அண்ணனே ஆனாலும் தவறாக வாசித்தால் வெளியே போய்விட வேண்டியதுதான் என்பதை அவர்கள் தெரிந்து வைத்திருந்தார்கள். இதனால் சரியாக வாசிக்க வேண்டும் என்ற எண்ணத்தை அவர்களுக்குள் ஏற்படுத்தி ஒரு 'டிசிப்ளினை' கொண்டு வந்திருந்தது.

'ஓபோ' என்ற இசைக் கருவியை வாசிக்கும் இசைக் கலைஞர் ஒருவர் விஷயத்திலும் இப்படியொரு சம்பவம் நடந்து விட்டது. அவர் பெயர் கணேசன். இசைக் குழுவினர் அவரை 'கணேசண்ணா' என்றுதான் அன்புடன் அழைப்பார்கள். அன்றைய தினம் ஒரு பாடலுக்கு இவர் வாசித்துக் கொண்டிருந்தார்.

அந்த ‘பிட் மியூசிக்’ நான் எதிர்பார்த்தபடி அவருக்கு வாசிக்க அமையவில்லை.

இத்தனைக்கும் நான் இசையமைப்பாளர் என்ற நிலைக்கு முன்னாக கிடார் வாசித்த காலத்தில், அவரோடு எத்தனையோ ரெக்கார்டிங்குகளில் வாசித்திருக்கிறேன். ஒரே டாக்சியில் போய் வந்திருக்கிறோம்.

இருந்தாலும் இந்த இடத்தில் பிடிவாதமாக நான் எதிர்பார்த்தபடி வரவேண்டும் என்று பல முறை கேட்டும், ரிகர்சல் கொடுத்தும் வரவில்லை.

கோவர்த்தன் மாஸ்டரும் சில ரிகர்சல் கொடுத்து, “இது எப்படியிருக்கு என்று கேளு” என்றார்.

ஊஹூம். எனக்கு நூற்றில் இருபத்தைந்து சதவீதம் கூட சரிப்படவில்லை.

கடைசியில், “அவர் வாசிக்கவேண்டாம். போகட்டும்” என்று சொல்லிவிட்டேன்.

எத்தனையோ கால அனுபவம் உள்ளவர். எவ்வளவோ இசையமைப்பாளர்களை பார்த்தவர். இதெல்லாம் எனக்கு பெரிதாகப்படவில்லை.

இதில் நான் நினைத்தபடி அந்த வாத்தியம் வரவில்லையென்றால் எதற்கு அந்த வாத்தியம்? வேண்டாம். இதுதான் என்பக்க நியாயம்.

அவர் கொஞ்ச நேரம் அமைதியாக வாடிய முகத்துடன் இருந்துவிட்டு, டாக்சி வந்தவுடன் வாத்தியத்தை எடுத்துக்கொண்டு கிளம்பிவிட்டார்.

அப்போது வருத்தப்படாத என் மனம், பல நாட்களுக்குப் பிறகு நினைத்து நினைத்து வருந்தியது. என் உள்ளேயே குமைந்து குறுகும் உணர்வை இன்றும் எனக்கு தந்து கொண்டிருக்கிறது.

கிழக்கே போகும் ரெயில்

பாரதிராஜா “கிழக்கே போகும் ரெயில்” என்று ஒரு கதையை தயார் செய்து, பூஜை பாடல், ரெக்கார்டிங் வைத்தார். அன்றைக்கென்று பார்த்து மூன்று பூஜைகள். அந்த பரபரப்பிலும் ஒரே நாளில் மூன்று பாடல்களை கிழக்கே போகும் ரெயில் படத்திற்காக பதிவு செய்தோம். இரண்டாவது பாடல் முடிய மதியம் 3 மணி ஆகிவிட்டது. மூன்றாவது பாடலை 4 மணிக்கு தொடங்கினோம். “கோவில் மணி ஓசை தன்னை கேட்டதாரோ” என்ற அந்த பாடல் முடிய இரவு 10 மணி ஆகிவிட்டது.

அப்போதெல்லாம் ‘சினி மியூசிசியன்ஸ் யூனியன்’ இருந்தது. இரவு 9 மணிக்குள் ரெக்கார்டிங் முடிக்கப்பட வேண்டும் என்பது அவர்களின் விதிமுறையில் இருந்தது. இருந்தாலும் அவ்வப்போது இது மாதிரியான சந்தர்ப்பங்களில் அட்ஜஸ்ட் செய்து கொள்வது வழக்கமாக இருந்தது.

படம் நன்றாக வந்தது.

“மாஞ்சோலைக் கிளிதானோ” பாடலை கவிஞர் முத்துலிங்கமும், “பூவரசம்பூ பூத்தாச்சு” பாடலை அமரும் எழுதியிருந்தார்கள்.

கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம் எழுதிய ஒரே திரைப்படப்பாடல் என்ற பெருமையை பெற்றது எனது இசையமைப்பில் இந்தப் படத்துக்காக உருவான "மலர்களே நாதஸ்வரங்கள்" என்ற பாடல். ஆனால் பாரதிராஜா ஏனோ படத்தில் அந்தப் பாடலை வைக்கவில்லை.

"கிழக்கே போகும் ரெயில்" ரிலீஸ் ஆன அன்றே படக்கம்பெனி பணியாளர்கள் தியேட்டர்களில் ரசிகர்களிடம் கருத்து கேட்கப் போயிருக்கிறார்கள். அவர்களிடம் சில ரசிகர்கள் "ராஜ்கண்ணு (படத்தின் தயாரிப்பாளர்) ரெயில் ஏறிட வேண்டியதுதான்" என்று கிண்டல் அடித்திருக்கிறார்கள்.

ஒரு வாரத்திற்கு அப்புறம் படம் நன்றாக இருப்பதாக ரசிகர்களிடையே பேச்சு பரவி, படம் சூப்பர் ஹிட் ஆயிற்று. "16 வயதினிலே" படத்தில் கிடைத்த புகழை பாரதிராஜா தக்க வைத்துக்கொண்டார்.

**சிவாஜிகணேசன் படத்துக்கு இளையராஜா இசை**
**பாடல் பதிவின்போது நடந்த சுவையான நிகழ்ச்சிகள்**

சிவாஜிகணேசன் – கே.ஆர்.விஜயா நடித்த 'ரிஷிமூலம்' படத்துக்கு, இளையராஜா இசை அமைத்தார். இந்தப் படத்தின் பாடல் பதிவின்போது ருசிகரமான நிகழ்ச்சிகள் நடந்தன.

தனது இசை வாழ்வு அனுபவங்கள் குறித்து, இளையராஜா கூறியதாவது:–

"சென்னை கமலா தியேட்டரில் 'கிழக்கே போகும் ரெயில்' படத்தின் வெற்றி விழா. விழாவில் நடிகர் திலகம் சிவாஜி கலந்துகொண்டு எங்கள் எல்லாருக்கும் பரிசு வழங்கினார்.

அவர் பேசும்போது, படத்தில் இடம் பெற்ற "மாஞ்சோலைக் கிளிதானோ" என்ற பாடலை வாய்விட்டுப் பாடி, "அடடா! என்ன பாடல்! என்ன பாடல்!" என்று புகழ்ந்து பேசினார். நடிகர் திலகத்திடம் இருந்து கிடைத்த இந்தப் பாராட்டு, எங்களை நெகிழ்ச்சி அடையச் செய்தது.

பாரதிராஜா

சிவாஜி பேசும்போது, பாரதிராஜாவை வானளாவ உயர்த்திப்பேசினார். அப்போது, விழாவுக்கு வந்திருந்தவர்களில் ஒருவராக, பாரதிராஜாவின் அம்மாவும் அமர்ந்து, அதைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

விழா முடிந்ததும், தனது தாயாரை சந்தித்த பாரதிராஜா, "எப்படி இருந்தது?" என்று கேட்க, அந்தத் தாயாரோ சர்வ சாதாரணமாக, "அது என்னமோப்பா! அவங்க என்னென்னமோ பேசுறாங்க! ஆனா என் காதுல பாரதிராசா, பாரதிராசாங்கற உன் பேர் மட்டும்தான் கேட்டுதுப்பா" என்று சொன்னார்.

உயர்ந்த தாயுள்ளத்தின் உணர்வுக்கு எடுத்துக்காட்டாகத்தான் என்னால் இதை உணர முடிந்தது.

இதற்கிடையில் தயாரிப்பாளர் ராஜ்கண்ணுவின் ஆபீசிற்கு ஒருநாள் போய் வரலாம் என்று போனேன். அப்போது ராஜ்கண்ணுவுடன் சிலர் இருந்தனர். என்னைப் பார்த்ததும், "படத்தின் பாடல்கள் சரியில்லை. பதினாறு வயதினிலே படப்பாடல்கள் மாதிரி அமைந்திருந்தால் படம் இன்னும் நன்றாகப் போகும்" என்றார்கள்.

என் முகத்திற்கு எதிரேயே அவர்கள் இப்படிச் சொன்னதில், எனக்கு வருத்தமாகி விட்டது. எல்லா படப் பாட்டுக்களும் ஒரே மாதிரிதான் இருக்க வேண்டுமா? என்ன இவர்களின் பேச்சு? ஒரு அடிப்படை கலை உணர்வு கூடவா இல்லாமல் இருப்பார்கள்? மனம் வருந்தினேன். அந்த மாதிரியான வருத்தங்கள், மனதில் வடுவாகத் தங்கி விட்டன.

ரிஷிமூலம்

நடிகர் திலகம் சிவாஜி நடிக்க "ரிஷிமூலம்" என்ற படத்தை எஸ்.எஸ்.கருப்பசாமி தயாரித்தார். நான் இசை. மகேந்திரன் வசனம், எஸ்.பி.முத்துராமன் டைரக்ஷன்.

எஸ்.எஸ்.கருப்பசாமி அப்போது அருப்புக்கோட்டை தொகுதியில் எம்.எல்.ஏ. வாக தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். மிகவும் கண்டிப்பானவர். கண்ணியமானவரும் கூட.

பாடல்கள் கம்போசிங்கிற்கு டைரக்டர் எஸ்.பி.முத்துராமன், மகேந்திரன், தயாரிப்பாளர் எஸ்.எஸ்.கருப்பசாமி ஆகியோருடன் மகாபலிபுரம் போனேன். அங்குள்ள தமிழ்நாடு தங்கும் விடுதியில் தங்கினோம்.

மூன்று நாட்கள் தொடர்ந்து கம்போசிங் நடந்தது. “நேரமிது” என்ற பாடலுக்கான சூழ்நிலை புதிது. சிவாஜி – கே.ஆர்.விஜயா பாடுவதாக வரும் இந்த டூயட் எங்கே ஆரம்பிக்கிறது தெரியுமா? அவர்கள் பெட்ரூமில்! அதுவும் குழந்தை அருகில் படுத்திருக்கும்போது!

அதாவது தூங்கும் குழந்தை விழித்து விடாதபடி, மிக மெல்லியதாக அவர்களின் டூயட் அமைய வேண்டும். டியூன் அமைத்து, பாடிக்காட்டினேன். எல்லாருக்கும் பிடித்திருந்தது.

வெளிநாட்டுப் பெண்மணி

இந்த டியூனை நான் கம்போஸ் செய்து கொண்டிருந்தபோது, எதிர்பாராத ஒரு சம்பவம் நடந்தது.

அந்த மாலை நேரத்தில் பிரான்சில் இருந்து சுற்றுலா வந்திருந்த தம்பதியரில் பெண் மட்டும் எங்கள் அறையை கடந்து போயிருக்கிறார். பாடலைக் கேட்டவர் அப்படியே நின்று விட்டார். பிறகு “நான் உள்ளே வரலாமா?” என்று வெளியில் இருந்தவாறே சைகை மூலம் கேட்டார். “ப்ளீஸ் கம் இன்” என்று டைரக்டர் சொல்ல, உள்ளே வந்தார்.

நாங்களெல்லாம் கீழே தரையில் விரிப்பை விரித்து அமர்ந்திருந்தோம். எங்களோடு அவரும் கீழே உட்கார்ந்தார். என் முகம் பார்த்தவர், “நீங்கள் பாடிய பாடலை மறுபடியும் ஒருமுறை பாட முடியுமா?” என்று கேட்டார்.

“ஓ” என்றேன். மெதுவாக பாடவும் செய்தேன்.

அந்தப் பெண்ணின் கண்களில் இருந்து ‘பொலபொல’ வென்று கண்ணீர் கொட்டியது.

பாடல் முடிந்ததும் எல்லாரும் அமைதியானோம்.

இப்போது அந்தப் பெண்மணி பேசினார். “இந்த இசைக்கும் எனக்கும் பல ஜென்மங்களாக தொடர்பு இருப்பது போல் உணர்கிறேன்” என்றார். அதோடு, “இந்த இசையை எனக்காக எழுதித்தர முடியுமா?” என்று கேட்டவர், தனக்கு பியானோ வாசிக்கத் தெரியும் என்றும்

சொன்னார்.என்னிடம் மியூசிக் எழுதும் பேப்பர் இல்லை. எனவே என் லெட்டர்பேடில் இருந்து ஒரு பேப்பரை எடுத்து அதில், கோடுகள் போட்டு அந்த இசையை பியோனோவில் வாசிப்பதற்கு தகுந்தாற்போல் எழுதிக் கொடுத்தேன்.

வாங்கிக் கொண்ட அந்தப் பெண் நன்றி ததும்ப, “இந்த இசையை வாங்குவதற்குத்தான் இந்த சுற்றுலா நடந்ததோ என்னவோ?” என்று சொல்லியபடி

விடை பெற்றுச் சென்றார்.

டி.எம்.எஸ். பாட்டு

இந்தப் பாடல் பதிவு செய்யப்பட்டபோது, இன்னொரு சம்பவம்.

டி.எம்.சவுந்தர்ராஜனும், பி.சுசிலாவும் பாடிக் கொண்டிருந்தார்கள். "மேகத்திலே வெள்ளி நிலா, காதலிலே பிள்ளை நிலா" என்ற சரணம் போய்க் கொண்டிருந்தது.

அப்போது எஸ்.பி.முத்துராமன் என்னை அழைத்தார். "ராஜா சார்! நீங்கள் கம்போசிங்கில் வெறும் ஆர்மோனியத்துடன் பாடும்போது காதருகில் மிகவும் மெல்லிய குரலில் பாடுவது போல இருந்ததே! இப்போது இவர்கள் பாடும்போது பலமான குரலில் வருவது போலல்லவா இருக்கிறது" என்றார்.

மகேந்திரனோ அவர் பங்குக்கு, "ராஜா! இவ்வளவு சத்தமாக பாட்டைக் கேட்டால், கட்டிலில் தூங்கும் பையன் எழுந்து விடமாட்டானா?" என்றார்.

நான் டி.எம்.எஸ். – சுசிலா பாடிக் கொண்டிருந்த அறைக்குப் போனேன்.

டி.எம்.எஸ்.சிடம், "அண்ணா! குழந்தை தூங்கிக் கொண்டிருக்கும்போது கணவனும், மனைவியும் பாடும் ரொமாண்டிக் பாடல் இது. மெதுவாகக் கேட்க வேண்டும். இதுவோ பெரிய மலைச்சாரலில் நின்று கொண்டு "மேகத்திலே வெள்ளி நிலா" என்று பாடுவது போல் வருகிறது. உங்களுக்கு தெரியாததல்ல. மெதுவாகப் பாடினால் நன்றாக இருக்கும்" என்றேன்.

அவர், "ராஜா! நான் மெதுவாகத்தான் பாடுகிறேன். இப்போ கேளு"என்றவர் பாடினார். மிகவும் சன்னமாக குரல் ஒலிக்க, மெதுவாகத்தான் கேட்டது.

"பிறகு எப்படி ரிக்கார்டிங்கில் அவ்வளவு பெரிய சத்தமாக கேட்கிறது?" என்று கேட்டேன்.

"நான் என்னப்பா பண்றது? என் குரல் அமைப்பு அப்படி! நேரில் கேட்டால் மென்மையாகவும் மைக்கில் கேட்டால் கம்பீரமாகவும் ஒலிக்கிற குரலாக ஆண்டவன் கொடுத்து விட்டான்" என்றார், டி.எம்.எஸ்.

உள்ளே போய் இருவருடைய குரலையும் குறைத்து பாடலைப் பதிவு செய்தோம்.

ஆனாலும், அது ஒருவருக்கொருவர் காதில் ரகசியமாக பாடுகிற மாதிரி வரவில்லை.

முள்ளும் மலரும்

மகேந்திரன் கதை வசனம் எழுதிய படங்கள் எல்லாம் நன்றாக ஓடியதால் அவருக்கு டைரக்டு செய்யும் வாய்ப்பு வந்தது. ஆனந்தி பிலிம்ஸ் வேணு செட்டியார் அப்படியொரு வாய்ப்பை வழங்கினார்.

இதைத் தொடர்ந்து வார இதழ் ஒன்றில் தொடர் கதையாக வந்திருந்த "முள்ளும் மலரும்" கதையை படமாக்க மகேந்திரன் முடிவு செய்தார். திரைக்கதை அமைத்து டைரக்ட் செய்யும் ஏற்பாடுகளை தொடர்ந்தார்.

ரஜினி, ஷோபா, படாபட் ஜெயலட்சுமி, சரத்பாபு என நட்சத்திரங்கள் முடிவானார்கள்.

கம்போசிங் நடந்தது. அப்போது "16 வயதினிலே" படத்தைப் பற்றியும், பாரதிராஜாவின் திறமையைப் பற்றியும் மட்டுமே மகேந்திரன் திரும்பத் திரும்ப பேசிக் கொண்டிருந்தார். அதே நேரம், "தரத்தில் உயர்ந்த நல்ல படமாக இதைக் கொண்டு வந்து விட வேண்டும்" என்றும் சொன்னார்.

"செந்தாழம்பூவில் வந்தாடும் தென்றல்", "அடி பெண்ணே பொன்னூஞ்சல் ஆடும் இளமை", "ராமன் ஆண்டாலும் ராவணன் ஆண்டாலும்..." "நித்தம் நித்தம் நெல்லுச் சோறு" போன்ற பாடல்கள் உருவாயின. பாலு மகேந்திராதான் கேமரா. மகேந்திரனும், பாலு மகேந்திராவும் நல்ல நண்பர்கள்.

ரஜினியின் நல்ல நடிப்பு, படத்தின் இயக்கம், கேமரா, கதை, திரைக்கதை எல்லாம் கச்சிதமாக அமைந்து படத்துக்கு வெற்றியை தேடித்தந்தன.

ஒரு படத்தின் வெற்றிக்காகவே ஒட்டுமொத்த யூனிட்டும் உழைத்தாலும், வெற்றியைத் தருவது நமக்கும் மேலே உள்ள ஒருசக்தி.

தியேட்டரில் ஏற்பட்ட அதிர்ச்சி

இதை உறுதிப்படுத்தும் விதமாக ஒரு சம்பவம் நடந்தது. நானும் மகேந்திரனும், சேலத்தில் "முள்ளும் மலரும்" ஓடிய ஒரு தியேட்டருக்கு போன போது அது நடந்தது.

தியேட்டர் முதலாளி எங்களை வரவேற்று அழைத்துச் சென்று படம் பார்க்க வைத்தார்.

படத்தின் ஆறாவது ரீலில், ரஜினி மீது லாரி ஏறியது போல் ஒரு சீன் வரும். அங்கே இடைவேளை என்று போட்டு விட்டார்கள். எனக்கு அதிர்ச்சி. நான் பார்த்தவரை படத்தின் இடைவேளை அது இல்லை.என்னைவிட மகேந்திரன் இன்னும் அதிர்ச்சியாகி இருந்தார்.

**“பிரியா” படத்தில் இளையராஜா இசை அமைப்பு**
**இந்தி இசை அமைப்பாளர் சலீல் சவுத்ரி பாராட்டு**
**“இதுபோன்ற இசையை இதுவரை கேட்டதில்லை”**

“பிரியா” படத்துக்கு முதன் முதலாக “ஸ்டீரியோ” முறையில் பாடல்களை பதிவு செய்தார், இளையராஜா. அந்தப் பாட்டைக் கேட்ட பிரபல இந்தி இசை அமைப்பாளர் சலீல் சவுத்ரி, “இதுபோன்ற திரை இசையை இதுவரை நான் கேட்டது இல்லை” என்று பாராட்டினார்.

திலீப்குமார் — வைஜயந்திமாலா நடித்த “மதுமதி” உள்பட ஏராளமான இந்திப் படங்களுக்கு இசை அமைத்தவர் சலீல் சவுத்ரி. தென்னாட்டில் இருந்து முதன் முதலாக ஜனாதிபதியின் தங்கப்பதக்கம் பரிசு பெற்ற “செம்மீன்” மலையாளப் படத்துக்கு இசை அமைத்தவரும் அவர்தான்.

தனது இசைப்பயணம் குறித்து இளையராஜா தொடர்ந்து கூறியதாவது:—

“முள்ளும் மலரும்” படத்தில் டைரக்டர் மகேந்திரன் முடிவு செய்த இடைவேளை வேறு. இப்போது தியேட்டரில் பார்த்த இடைவேளை வேறு.

இதனால் என்னைவிட, டைரக்டர் மகேந்திரன் அதிகம் அதிர்ந்து போனார். அதற்கப்புறம் படம் பார்க்கப் பிடிக்காமல் நாங்கள் தங்கியிருந்த ஓட்டலுக்குத் திரும்பிவிட்டோம்.

தியேட்டர் அதிபர் சொன்ன விளக்கம்

தியேட்டர் முதலாளி தன் வீட்டில் சமைத்த சாப்பாட்டுடன் எங்களைப் பார்க்க வந்திருந்தார்.

அவரைப் பார்த்ததும் மகேந்திரன் கோபமாக, “என்ன சார் இது! இடைவேளை இந்த இடத்தில் இல்லையே! எப்படி மாறியது?” என்று கேட்டார்.

தியேட்டர் அதிபரோ எங்கள் டென்ஷனை கண்டுகொள்ளாமல் “ஓ! அதுவா... சார்! உங்களுக்கு ஒரு விஷயம் சொல்கிறேன். நம்ம தியேட்டர் ஆபரேட்டர் இருக்கிறானே, அவன் ஒரு டைரக்டருக்கு மேல சார்! சொன்னா நம்பமாட்டீங்க. இந்த படத்துல இடைவேளை போடற இடம் சரியில்லை. ரஜினி மேல லாரி ஏறுகிற மாதிரி ஒரு சீன். அப்ப இடைவேளை போட்டாத்தான் “ரஜினிக்கு என்னாச்சு?” என்ற பதட்டத்தோடு படத்தைப் பார்ப்பார்கள். அப்படிப் பார்க்கும்போது “கை மட்டும்தான் போய்விட்டது” என்று காட்டினால் ஒரு ‘பஞ்ச்’ இருக்கும் என்றான் சார்! சொன்னது சொன்னபடி சீனை கட் பண்ணி முன்னே பின்னே போட்டு எப்படி சூப்பரா பண்ணியிருக்கான் பார்த்தீங்களா? அதனாலதான் நான் அவன் விஷயத்திலே தலையிடறதே இல்லை சார்!” என்று சர்வ சாதாரணமாக சொன்னார்.

அதோடு, டைரக்டர் மகேந்திரனை பார்த்து, “இப்ப படம் எப்படியிருக்கு சார்?” என்றும் கேட்டார்.

மகேந்திரன் பதில் சொல்லவில்லை. ஆனால் நான் மகேந்திரனைப் பார்த்து, “நமக்கும் மேலே ஒருவனடா! அவன் நாலும் தெரிந்த தலைவனடா” என்று பாடினேன்.

பிரியா

பஞ்சு அருணாசலம் சார் அடுத்து "பிரியா" படத்தை தயாரிக்க முடிவு செய்தார்.

பஞ்சு சார் கதை வசனம் எழுத, சுஜாதா திரைக்கதை அமைக்க எஸ்.பி.முத்துராமன் டைரக்ட் செய்வதாக ஏற்பாடு. ரஜினி, ஸ்ரீதேவி இந்தப் படத்தில் நடிக்க ஒப்பந்தமானார்கள்.

இந்தப் படத்துக்கான பாடல்கள் வித்தியாசமாக இருக்கவேண்டும் என்று பஞ்சு சார் விரும்பினார். அவர் விருப்பத்தில் எனக்கும் உடன்பாடுதான். எனவே யோசித்தேன். அப்போது ஜேசுதாஸ் தனது தரங்கிணி ஸ்டுடியோவிற்காக, "ஸ்டீரியோ" முறையில் பாடல் பதிவு செய்வதற்கான கருவிகளை புதிதாக வாங்கியிருந்தார்.

அவருடைய மெல்லிசை நிகழ்ச்சிகளில் இந்த புதிய கருவிகளைப் பயன்படுத்தி ரசிகர்களை மெய்மறக்கச் செய்யும் விதத்தில் 'சவுண்ட் சிஸ்டம்' அமைத்தார்.

"பிரியா" படத்தின் பாடல்களை இந்த 'ஸ்டீரியோ' முறையில் பதிவு செய்ய முயன்று பார்த்தால் என்ன என்று தோன்றியது. "கம்போசிங்கிற்கு, பெங்களூர் போகலாம்" என்றார், பஞ்சு அருணாசலம். போனோம்.

முதல் நாள் ஓட்டலில் உட்கார்ந்தோம். கம்போசிங்கில் திருப்தி வரவில்லை. நான் பஞ்சு சாரிடம் "அண்ணே! பெங்களூர் வந்து ரூமிற்குள் அடைந்து கிடப்பதா? லால்பாக், கம்பன்பாக் போன்ற இடங்களுக்கே போய் கம்போஸ் செய்வோம்" என்றேன்.

பஞ்சு சாரும் சிரித்துக்கொண்டே, "சரி, அங்கேயே போவோம்" என்றார்.

காரில் வாத்தியங்களை ஏற்றிக்கொண்டு கிளம்பினோம்.

லால்பாக்கில் ஆள் நடமாட்டம் இல்லாத பகுதியை தேர்ந்தெடுத்து அங்கே ஒரு பெட்ஷீட் விரித்து உட்கார்ந்து கம்போஸ் செய்ய ஆரம்பித்தோம். கூட்டம் நாங்கள் இருந்த பக்கமாக வரவில்லை என்பதால் 'இசை'க்கு இடையூறு இல்லாதிருந்தது.

இப்படியே ஒவ்வொரு நாளும் ஒவ்வோர் இடத்தில் கம்போசிங் நடந்ததில் 6 பாடல்களும் முடிந்தன.

சென்னைக்கு திரும்பியதும், ஜேசுதாசிடம் எங்கள் புதிய இசை முயற்சி பற்றி தெரிவித்தேன். இது விஷயத்தில் எங்கள் ஆர்வத்துக்கு இணையாக ஜேசுதாஸ் உற்சாகமாகி விட்டார். "இன்னும் சில புதிய மெஷின்கள் வாங்கி விடுகிறேன்" என்று சொன்னவர் கையோடு அப்போதே ஆர்டர் கொடுத்துவிடடார். புதிய மெஷின்களும் வந்து சேர்ந்தன.

என்னுயிர் நீதானே

பரணி ஸ்டுடியோவில் அத்தனை மெஷின்களையும் செட்டப் செய்து, மைக், வயரிங், ஹெட்போன்ஸ் எல்லாம் அமைத்து முதன் முதலாக "என்னுயிர் நீதானே" என்ற பாடலை பதிவு செய்தோம்.

நம்பவே முடியவில்லை. இசை மிகத் தெளிவாக இருந்தது. தனியாகக் கேட்டபோதும் சரி, மொத்தமாக கேட்டபோதும் சரி துல்லியமாக ஒலித்தது பாட்டு. அளவு கடந்த மகிழ்ச்சியைத் தரும் இசையாக அது இருந்தது.

தமிழ்த்திரை உலகில், உலகத் தரத்துக்கு ஒப்பாக ஒரு இசையைக் கேட்பது அதுதான் முதல் தடவை.

சலீல் சவுத்ரி

இசைக் கலைஞர்கள் எல்லா ரெக்கார்டிங்குகளிலும் இதுபற்றியே பேசினார்கள். அப்போது ஒரு மலையாளப் படத்துக்கு இசையமைக்க சென்னை வந்திருந்த பிரபல இந்தி இசை அமைப்பாளர் சலீல் சவுத்ரி காதுக்கும் இந்த செய்தி சென்று விட்டது. அவர் ரெக்கார்டிங்கை பார்க்க பரணி ஸ்டூடியோவுக்கு வந்துவிட்டார். அவருடன் அவரது மகள், உதவியாளர் நேபு ஆகியோரும் வந்திருந்தார்கள்.

அன்றைக்கு, பி.சுசீலா பாடிய "டார்லிங் டார்லிங்" பாடல் பதிவாகியிருந்தது.

சலீல் சவுத்ரி வந்தவுடன், அந்தப் பாடலைப் போட்டுக் காட்டினோம். அவர் முகம் பிரகாசம் அடைந்தது. பாடல் முழுவதையும் கேட்டுவிட்டு, "இதுபோன்ற சினிமா இசையை இதுவரை கேட்டதில்லை" என்றார், பரவசக் குரலில். ஒரு உண்மைக் கலைஞரின் உயர்ந்த மனோபாவத்தை அது எடுத்துக்காட்டியது.

இந்த வகையில் முதல் "ஸ்டீரியோ" இந்தப் படத்தின் பாடல்கள்தான். ஜேசுதாஸ் அவர்களின் ஒத்துழைப்பால்தான் இதை சாதிக்க முடிந்தது.

இந்த ரெக்கார்டிங் முடிவதற்குள், ரெக்கார்டு செய்த பாடல்களைக் கேட்கும் உற்சாகத்தில் சவுண்டு என்ஜினீயர் வால்யூமை ஏற்ற, ஒரு 'ஸ்பீக்கர்' போய்விட்டது.

ஜேசுதாஸ் அதையும் பொருட்படுத்தாமல், உடனடியாக வேறு ஸ்பீக்கருக்கு ஏற்பாடு செய்தார்.

"பிரியா" படம் முழுக்க முழுக்க மலேசியாவிலும், சிங்கப்பூரிலும் படமானது. சண்டைக் காட்சிகளும், சேஸிங் காட்சிகளும் பாடல்களுமாக "பிரியா" ஜனரஞ்சகமான படமாக வெளிவந்தது.

இந்தப் படத்தின் ஒரு ரீலில் தொடர்ந்து 10 நிமிடம் வசனம் எதுவும் வராது. 'சைலன்ட் மூவி' போல இருக்கும் இந்த இடத்தில் மியூசிக் 10 நிமிடமும் வந்தாக வேண்டும்.

ரஜினியும், ஸ்ரீதேவியும் சிங்கப்பூரில் உள்ள டூரிஸ இடங்களையெல்லாம் ஜாலியாக பார்த்துத் திரிவது போன்ற காட்சிகள், டால்பின் ஷோ, கிளிகள் விளையாட்டு இதுபோல பலப்பல காட்சிகள் இடம் பெற்ற இந்த ரீலுக்கு இசையமைப்பது என்பது ஒரு சவாலாகவே இருந்தது. சரியான தாள கதியில் மியூசிக்கை கண்டக்ட் செய்யாவிட்டால் கிளி விளையாட்டுக்கு வரவேண்டிய மியூசிக் வேறு இடத்துக்கு போய்விடும்! அந்த காலகட்டத்தில் எந்த வசதியும் இல்லாமல் ஒவ்வொரு ஷாட்டுக்கும் ஒவ்வொரு மியூசிக் வரவைப்பதென்பது எவ்வளவு கடினம் என்பது இப்போதுதான் தெரிகிறது. அன்றைக்கு நான் ஏதோ விளையாட்டுப் போல அதை செய்துவிட்டேன். அன்று அரை மணி நேரத்தில் முடிந்த அந்த ரீலுக்கு, இன்று மி யூசிக் செய்தால் மூன்று நாட்களாவது ஆகும். அதிலும் அன்றைக்கு கிடைத்த

அந்த இசை கிடைக்காது என்பது மட்டும் நிச்சயம்.

சிகப்பு ரோஜாக்கள்

தயாரிப்பாளர் கே.ஆர்.ஜி.க்காக "சிகப்பு ரோஜாக்கள்" என்ற படத்தை பாரதிராஜா டைரக்ட் செய்யும் வாய்ப்பு வந்தது.

கமலஹாசன் – ஸ்ரீதேவி நடித்த இந்த படத்தை, ஒரு "மர்டர் மிஸ்ட்ரி" படமாகத்தர பாரதி திட்டமிட்டிருந்தார். படத்தில் இரண்டே பாடல்கள். ஒன்று கவிஞர் கண்ணதாசன் எழுதிய "இந்த மின்மினிக்கு கண்ணில் ஒரு மின்னல் வந்தது." அடுத்தது வாலி எழுதிய "நினைவோ ஒரு பறவை" பாடல்.

ரெக்கார்டிங்கை பார்ப்பதற்காக, கமல் வந்திருந்தார். ரிகர்சல் பார்த்து முடித்த நேரத்தில் "பிரேக்" விடப்பட்டது

அந்த நேரத்தில் கமல் சில ஆங்கிலப் பாடல்களைப் பாடிக்காட்டினார். நன்றாக இருந்தது.

நான் கமலிடம், "படத்திலும் நீங்களே இந்தப் பாட்டை பாடிவிடுங்கள்" என்றேன்.

"ஓ பாடலாமே" என்றார். ஜானகியுடன் சேர்ந்து பாடினார். "சிகப்பு ரோஜாக்கள்" படத்தில் இடம் பெற்ற இரண்டு பாடல்களுமே "ஹிட்" ஆயின. படமும்தான்.

**இளையராஜா வாழ்க்கைப்பாதை**
**தெலுங்கு, மலையாளப் படங்களுக்கு இசை அமைத்தார்**

தமிழ்ப் படங்களுக்கு இசை அமைப்பதில் 'பிசி'யாக இருந்த இளையராஜா, தெலுங்கு, மலை யாளப் படங்களுக்கும் இசை அமைத்தார்.

இசை அனுபவங்கள் குறித்து இளையராஜா கூறியதாவது:–

"பழசை நினைத்துப் பார்ப்பது என்பது எனக்கு எப்போதுமே பிடித்தமான ஒன்று. இன்றைக்கு, ஒரு இசையமைப்பாளராக என்னை ரசிகர்கள் அங்கீகரித்துக் கொண்டால்கூட, ஊரில் இருந்து நான் வரும்போது இந்த நம்பிக்கை இருந்ததா என்றால், "இல்லை" என்பதுதான் என் பதிலாக இருக்கும்.

கடற்கரையில் படம்

"சிகப்பு ரோஜாக்கள்" படத்தின் பாடல்கள் பதிவான நிலையில் ஒரு நாள் அண்ணன் பாஸ்கரிடம் மனம் விட்டுப் பேசினேன். "அண்ணா! நாம் கிராமத்தை விட்டு வரும்போது அம்மா நம்மிடம் 'பட்டணத்தில் வேலை கிடைக்காவிட்டால் என்ன செய்வீர்கள்?' என்று கேட்டார்கள். பதிலுக்கு நாம், "அப்படி ஒருவேளை எதிர்பார்த்தபடி வேலை கிடைக்கவில்லை என்றால், பிளாட்பாரத்தில் – தெருவில் உட்கார்ந்து ஜனங்கள் முன்பு வாசிப்போம். எங்களுக்கென்ன கவலை!" என்று சொன்னோமல்லவா! அப்படி வாசிக்கும் நிலைமை ஏற்படவில்லையென்றாலும், கடற்கரையில் உட்கார்ந்து வாசிப்பது போல ஒரு போட்டோவாவது எடுத்துக் கொள்வோமா?" என்று கேட்டேன்.

பாஸ்கருக்கு என் யோசனை பிடித்தது. "போகலாமே" என்றார்.

பீச்சுக்குப்போனால் அங்கே படப்பிடிப்பு நடக்கிறது. சிகப்பு ரோஜாக்கள் படத்திற்காக கமல் நடிக்க பாரதிராஜா டைரக்ட் செய்து கொண்டிருந்தார்.

தானாகக் கிடைத்த வாய்ப்பை நழுவ விடலாமா?

நாங்கள் பிளாட்பாரத்தில் வாசிப்பது போலவும், கமலும் பாரதியும் எங்கள் பாட்டை கேட்டுக்கொண்டே தரையில் விரித்திருந்த துண்டில் காசு போடுவது போலும் படங்கள் எடுத்துக்கொண்டோம்!

"சிகப்பு ரோஜாக்கள்" படம் பின்னணி இசைக்காக என்னிடம் வந்தது.

கதையின் கதை

பாரதிராஜா தனது தாயாருடன் தேனாம்பேட்டை காமராஜர் சாலையில் இருந்தபோது நானும் பாரதியும் அண்ணா சாலையில் எஸ்.ஐ.இ.டி. காலேஜ் வரை நடந்து போய் வருவோம். சில சமயம் இரவு 9 மணியைக் கடந்து வீட்டுக்குத் திரும்புவோம்.

இப்படி ஒரு நாள் 'வாக்கிங்' போன நேரத்தில், பாரதி ஒரு கதை சொன்னார். அது புகழ் பெற்ற ஆலிவுட் டைரக்டர் ஆல்பிரட் ஹிட்ச்சாக்கின் படம் போல இருந்தது.

நாங்கள் பிளாட்பாரத்தில் நடந்து கொண்டிருந்தபோது, எதிரே பாழடைந்த பங்களா

ஒன்று எங்கள் கண்ணில்படும். அதை பார்த்துத்தான் அந்தக் கதை தன் மனதில் உருவானதாக பாரதி சொன்னார். அந்தக் கதைதான், அவரது டைரக்ஷனில் ‘சிகப்பு ரோஜாக்கள்’ ஆகியிருந்தது. பாரதிராஜா என்றால் கிராமத்துக் கதைகளை மட்டுமே டைரக்ட் செய்வார் என்று அப்போது ஒரு பேச்சு இருந்தது. அதற்குப் பதிலடி தருகிற விதத்தில் இந்தப் படம் வந்திருப்பதை ரெக்கார்டிங்கின் போதே தெரிந்து கொண்டேன்.

பின்னணி இசைக்கு பொதுவாக எல்லாப் படத்துக்கும் 6 கால்ஷீட்டுகள் தேவைப்படும். ஆனால் இந்தப் படத்துக்கோ 4 கால்ஷீட்டுகளே தேவைப்பட்டது. அதாவது மூன்று நாளில் ஐந்தே பேர்தான் இசைக்குழு. நான்காவது கால்ஷீட்டில் 12 வயலின், 2 செல்லோ அவ்வளவுதான்.

சொன்னால் ஆச்சரியமாக இருக்கும். “சிகப்பு ரோஜாக்கள்” படத்தின் பின்னணி இசைக்கு மொத்தப் பில்லும் வெறும் பத்தாயிரம் ரூபாய்தான்.

ஆர்.டி.பர்மன்

இந்தப் படத்தின் வெற்றி, இதை இந்திக்கும் கொண்டு போனது. இந்தி ‘ரீமேக்’கில் ஆர்.டி.பர்மன் இசையமைத்தார்.

எப்படி இந்த பின்னணி இசையை கிரியேட் செய்தேன் என்று என்னிடம் அவரே கேட்டு வியந்தார்.

இந்தப் படத்துக்கு அவர் அமைத்த இசையில் சரியான ‘எபெக்ட்’ வராமல் இருந்திருக்கிறது. இதனால் தமிழில் நான் இசையமைத்த “மியூசிக்” டிராக்குகளை தயாரிப்பாளர் கே.ஆர்.ஜி.யிடம் கேட்டிருக்கிறார், பாரதி.

கே.ஆர்.ஜி. என்னிடம் வந்து “கொடுக்கலாமா?” என்று கேட்டார். நான் கே.ஆர்.ஜி.யிடம், “என்னைவிட நன்றாக இசையமைப்பார் என்றுதானே ஆர்.டி.பர்மனிடம் பாரதி போனார்! அவரே போடட்டும். டிராக்குகளை கொடுக்கவேண்டாம்” என்று கூறிவிட்டேன். டிராக்குகளை கொடுத்திருந்தாலும் டைட்டிலில் என் பெயர் வராதல்லவா!”

தியாகம்

நடிகர் பாலாஜி தயாரிப்பாளராகவும் மாறி, படங்கள் தயாரித்துக் கொண்டிருந்தார். “தியாகம்” என்ற படத்தை அப்போது தயாரித்தார். சிவாஜி நடித்த இந்தப் படத்தில், “வசந்த காலக் கோலங்கள், வானில் விழுந்த கோடுகள், கலைந்திடும் கனவுகள்’ கண்ணீர் சிந்தும் உறவுகள்” என்ற கவியரசு கண்ணதாசனின் அற்புதமான சிந்தனையுடன் கூடிய பாடல் இடம் பெற்றது.

இதே படத்தில் சிவாஜி பாடுவதாக வரும் “நல்லவர்க்கெல்லாம் சாட்சிகள் ரெண்டு” என்ற பாடலும் காலத்தில் அழியாதது.

“நதி வெள்ளம் காய்ந்து விட்டால்

நதி செய்த குற்றம் இல்லை!

விதி செய்த குற்றம் அன்றி வேறே யாரம்மா!

மனிதனம்மா மயங்குகிறேன்"

— இப்படி போகும் பாடலில் வாழ்க்கைத் தத்துவத்தை இயல்பாக சொல்லியிருந்தார் கவியரசர்.

தெலுங்குப்படம்

தமிழில் சிவாஜி நடித்த "வாழ நினைத்தால் வாழலாம்", "வட்டத்துக்குள் சதுரம்" என்று போய்க்கொண்டிருந்த நேரத்தில், 'வயசு பிடிசிந்தி' என்ற தெலுங்குப் பட வாய்ப்பும் வந்தது. இந்த வகையில் என் முதல் தெலுங்குப்படம் இது.

இதே சமயத்தில் 'வ்யா மோஹம்' என்ற மலையாள படத்துக்கும் இசை அமைக்கும் வாய்ப்பு வந்தது. எனது இசையில் வந்த இந்த முதல் மலையாளப்படம் தமிழில் ஸ்ரீதர் டைரக்ட் செய்த "போலீஸ்காரன் மகள்" என்ற படத்தின் ரீமேக்.

திருப்பதி அனுபவம்

தேவர் பிலிம்ஸ் "அன்னை ஓர் ஆலயம்" என்றொரு படம் எடுத்தார்கள். ரஜினி முதன் முதலாக தேவர் பிலிம்சில் நடித்த படம்.

இந்தப் படத்துக்கு முன்னால் ஒரு முறை திருப்பதி சென்று சுவாமி தரிசனம் செய்து வரலாம் என்று போயிருந்தேன். பெயர், புகழ் என்று எந்த செல்வாக்கையும் உபயோகிக்காமல் சாதாரண பக்தனாக போய் வந்தேன். என்னுடன் மனைவி, குழந்தைகளும் வந்திருந்தார்கள்.

அப்படிப் போனபோது தரிசனம் செய்யக்கூட விடாமல், பிடித்துத் தள்ளுவதும், ஆட்கள் நெருக்குவதுமாக மிகவும் வருந்தும்படியான தரிசனமாகியது. அப்போது நான் பெருமாளிடம், "சந்நிதியில் சாதாரணமாக வந்தேன். உன்னை தரிசிக்க இயலவில்லை. இனிமேல் உன்னைப் பார்க்க வரமாட்டேன்" என்று சபதம் செய்து விட்டு வந்துவிட்டேன்.

"அன்னை ஓர் ஆலயம்" படத்தின் இசை அமைப்பாளர் என்ற முறையில் என்னை படத்தின் டைரக்டர் தியாகராஜன் சந்தித்தார். "ராஜா சார்! அன்னை ஓர் ஆலயம்" கம்போசிங்கிற்கு திருப்பதி போகலாமா?" என்று கேட்டார்.

மூகாம்பிகை போய் என் வாழ்க்கை முறை முற்றிலுமாய் மாறியிருந்த நேரம் அது. எனவே வேண்டும் என்றோ, வேண்டாம் என்றோ எதுவும் சொல்லாமல் வெறுமனே தலையை மட்டும் அசைத்தேன்.

"அப்படியென்றால் ஞாயிற்றுக்கிழமை போகலாமா?" என்று கேட்டார்.

அதற்கும் தலையசைப்பில் சரி சொன்னேன்.

அப்போது திருப்பதியில் ஒரு பத்து காட்டேஜ்கள் மட்டுமே கட்டப்பட்டிருந்தன.

ஐந்து காட்டேஜ்களில் ஒன்றில் நானும், இன்னொன்றில் கவிஞர் வாலியும், என் உதவியாளர்கள் இன்னொன்றிலுமாக இருந்தோம். டைரக்டர் தியாகராஜன், அவரது யூனிட் ஆட்கள் அடுத்த 2 காட்டேஜ்களில் தங்கினார்கள்.

முதல் நாள் அதிகாலை 4 மணிக்கு ராஜதரிசனம் என்று சொல்லி தேவஸ்தானத்தில் இருந்து அழைத்துப் போனார்கள்.

நானும் போனேன். தரிசனம் நன்றாக நடந்தது. என்னிடம் மட்டும் "என்ன! வரமாட்டேன் என்றாயே... வரவைத்துவிட்டேன் பார்த்தாயா?" என்று சுவாமி கேட்பது போலிருந்தது.

நானும் மானசீகமாய்ப் பேசினேன். "நீ தரிசனம் கொடுத்தாலும் நீதான் பெரும் ஆள்! தரிசனம் கொடுக்காவிட்டாலும் நீதானே பெரும் ஆள்! இதில் என் மனம் போல் தரிசனம் கிடைத்தால் என்னைப்பற்றி நான் பெருமைப்பட என்ன இருக்கிறது? நீ கொடுத்தால்தானே கிடைக்கும். கொடுத்தாலும் நீயே. கொடுக்காவிட்டாலும் நீயே!" என்று மனதுக்குள் கூறிக்கொண்டேன்.

அங்கிருந்த ஒரு வாரமும் விதவிதமான அலங்காரத்தில் சுவாமி இருப்பார். தினசரி காலை 4 மணிக்கு எங்களை அழைப்பார். தரிசனம் கொடுப்பார். எங்களை பெருமைப்பட வைப்பார். அதைப் பார்த்து ரசிப்பார்.

ரெக்கார்டிங் சமயத்தில்தான் இதை வாலியிடம் சொன்னேன். அதிசயப்பட்டார். "யோவ் நீ பெருமாளுக்கு அடியார்யா! அதனால்தான் உன்னை அழைத்து வந்து தரிசனம் கொடுத்திருக்கிறார்" என்றார்.

**‘கடினமான பாடலுக்கு பிரமாதமாக வாயசைத்தார்’**
**சிவாஜிகணேசனுக்கு இளையராஜா புகழாரம்**

“கவரிமான்” படத்தில், கீர்த்தனை ஒன்றுக்கு புதிய முறையில் இசை அமைத்தார், இளையராஜா. பாடுவதற்கு கடினமான அந்தப்பாடலுக்கு மிகப் பொருத்தமாக வாயசைத்தார், சிவாஜிகணேசன். அதைக்கண்டு இளையராஜா வியந்து போனார்.

இசைப்பயணம் பற்றி இளையராஜா கூறியதாவது:—

“இளமை ஊஞ்சலாடுகிறது” படத்தைத் தொடர்ந்து மீண்டும் டைரக்டர் ஸ்ரீதரின் “அழகே உன்னை ஆராதிக்கிறேன்” படத்துக்கும் இசை வாய்ப்பு வந்தது. இந்தப் படமும் ஹிட்டாகி பாடல்களும் ஹிட்டானதில் மகிழ்ச்சி.

பரிசோதனை முயற்சி

எஸ்.பி.முத்துராமன் இயக்கிய “கடவுள் அமைத்த மேடை”படத்தில்தான், ஒரு பரிசோதனை முயற்சி செய்யவேண்டும் என்று தோன்றியது.

அதாவது கர்நாடக சங்கீத ராகங்களை எடுத்துக்கொண்டு, அதன் ஆழம் குறையாமல் கிராமியப் பாணியின் சந்தங்களை மெட் டாக அமைத்து, பாடும்போது அதன் இரண்டு வேறுபட்ட தனிப்பட்ட தன்மைகளை இணைத்துப் பாடவைக்கலாமே என்று தோன்றியது.

அதை உடனே செய்யலாம் என்ற எண்ணத்தில் டைரக்டர் எஸ்.பி.முத்துராமன் சொன்ன ஒரு டியூட்டிற்கு ஹம்சத்வனி ராகத்தில் கிராமியத்தனமான மெட்டமைத்தேன். பாடலை வாலி எழுதினார். “மயிலே மயிலே உன் தோகை எங்கே?” என்ற அந்தப் பாடல்தான் இந்தப் பரிசோதனை முயற்சியில் உருவான பாடல்.

எஸ்.பி.பாலசுப்பிரமணியமும், ஜென்சியும் இந்தப் பாடலை பாடியிருந்தார்கள்.

இதே படத்தில்தான், பி.பி.சீனிவாசும் முதன் முதலாக என் இசைக்கு பாடினார். அதுவும் ஒரு சிறிய கஜல் போன்ற பாடல். “தென்றலே நீ பேசு” என்பது அதன் பல்லவி.

பஞ்சு சார் கமல், ரஜினி இரண்டு பேரையும் தனித்தனியாக போட்டு படம் எடுக்க முடிவு செய்தார். அப்போது கமல் — ரஜினி இருவரும் சேர்ந்து நடிப்பதில்லை என்று முடிவெடுத்திருந்த நேரம்.

கமலை வைத்து “கல்யாணராமன்”, ரஜினியை வைத்து “ஆறில் இருந்து அறுபதுவரை” ஆகிய படங்களை எடுத்தார்.

இரண்டுமே வெற்றி பெற்றன.

கல்யாணராமன் படத்தில் ‘ஆஹா வந்துருச்சு’ பாடலும், அதற்கு கமல் ஆடிய வித்தியாசமான நடனமும் ரசிகர்களை பெருமளவில் கவர்ந்தன.

கவரிமான்

பஞ்சு சார் அடுத்து "கவரிமான்" என்ற படத்தில் நடிக்க சிவாஜியை ஒப்பந்தம் செய்தார். நடிகர் திலகத்தின் பாத்திரப் படைப்பை ரசிகர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. (மனைவி சோரம் போகிற காட்சியை பார்க்கும் கணவனின் கேரக்டர்)

என் இசையில் முதன் முதலில் ஒரு தியாகராஜ கீர்த்தனை இடம் பெற்றது இந்தப் படத்தில்தான். "ப்ரோவ பாரமா?" என்ற கீர்த்தனையை ஜேசுதாஸ் பாட, டி.வி.கிருஷ்ணன் அவர்களின் வயலினும், டி.வி.கோபாலகிருஷ்ணனின் மிருதங்கமும் இணைந்தன.

சிவாஜி இந்தப் பாட்டுக்கு வாயசைத்ததை கண்டு வியந்து போனேன்.

ஆரம்பத்தில் ஜேசுதாஸ் ராகம்பாடி, தாளம் ஏதும் இல்லாமல் திடீரென்று 'ப்ரோவபாரமா' என்று தொடங்குமாறு பதிவு ஆகியிருந்தது.

சிவாஜி சாதனை

ராகம்பாடி, 'ப்ரோவ பாரமா' தொடங்குவதற்கு இடையில் தாளத்தில் ஏதாவது வாசித்திருந்தால் நடிப்பவர்களுக்கு பாடல் தொடங்கும் இடம் சரியாகத் தெரிந்து வாயசைக்கலாம்.

ராகம்பாட, வெறும் தம்புரா மட்டும் போய்க்கொண்டிருக்க, அது எவ்வளவு நேரம் போகிறது என்று கண்டுபிடித்து, பாடல் ஜேசுதாஸ் குரலில் வரும் அந்த நொடியை எப்படியோ கண்டுபிடித்து சரியாக வாயசைத்தார்.

இதைப் பாராட்டி, அண்ணன் சிவாஜியிடம், "எப்படிச் செய்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"என்னை என்னடா நினைச்சிட்டே? சும்மா ஏனோதானோன்னு சினிமாவுக்கு வந்தவன்னு நினைச்சியா? இதெல்லாம் முடியாட்டா ஏண்டா ஒருத்தன் நடிகனா இருக்கணும்?" என்று கேட்டார் சிவாஜி.

"நடிகர் திலகம்" என்று சும்மாவா பட்டம் கொடுத்தார்கள்?

சுசீலாவுடன் முதல் பாடல்

"லட்சுமி" படத்தில் கிராமிய சந்தத்தை வேகமாக அமைத்துப் பாடிய பாடல் "தென்ன மரத்துல தென்றலடிக்குது நந்தவனக் கிளியே."

நானும் பி.சுசீலாவும் பாடினோம். இந்த வகையில் இது சுசீலா அவர்களுடன் நான் சேர்ந்து பாடிய முதல் பாடல்.

பண்ணைபுரத்தில் உள்ள எங்கள் வீட்டில், தம்புராவுடன் சுசீலா இருக்கும் படத்தை பிரேம் போட்டு நான் மாட்டி வைத்திருந்தது, இந்தப் பாடலை அவருடன் பாடும்போது நினைவுக்கு வந்தது.

கோவை செழியன் தயாரிப்பில் வந்த "முதல் இரவு" படத்தில், "மஞ்சள் நிலாவுக்கு இன்று முதல் இரவு" என்ற பாடல் பிரபலமானது. டைரக்டர் ஸ்ரீதர் இந்தப் பாடலை கேட்டு என்னை மிகவும் பாராட்டினார்.

கதை சொன்னார் பாக்யராஜ்

பாரதிராஜா டைரக்ஷனில் "நிறம் மாறாத பூக்கள்" படத்துக்கு பாடல் பதிவுடன் பூஜை.

ஒரு ஓட்டலில் கதையை பாக்யராஜை சொல்லச் சொன்னார், பாரதி. கோர்வையாக,அதே நேரம் நகைச்சுவை கலந்து நன்றா கவே கதை சொன்ன பாக்யராஜை பாராட்டினேன். பாரதியும், "அதனால்தான் அவனையே சொல்லச்சொன் னேன். நல்ல திறமைசாலி" என்று பாராட்டினார்.

இடைவேளைக்குப்பிறகு சில மாற்றங்கள் இருக்கலாம்.

பூஜைக்கு இரு நாயகியரும் கதாநாயகனும் பாடுகிற மாதிரி ஒரு பாடலை எடுத்துக் கொள்ளலாம் என்பதை சொல்லிவிட்டார்கள்.

தயாரிப்பாளர் வீட்டிலேயே கம்போசிங் நடந்தது. அப்போது அவர் தயாரிப்பில் வெளிவந்த "வருவான் வடிவேலன்" படம் நன்றாக ஓடிக்கொண்டிருந்தது.

கவியரசர் கண்ணதாசன் அதுவரை காலை 10 மணிக்கு முன்னதாக பாட்டெழுத வந்தது கிடையாது. எனக்கு 9 மணிக்கு பின்னணி இசை வேலை இருந்ததால் கவியரசர் முதன் முதலாக எனக்காக காலை 71/2 மணிக்கு பாட்டெழுத வந்துவிட்டார்.

கதையைச் சொல்லி டியூனை வாசித்த உடனே,

"ஆயிரம் மலர்களே மலருங்கள்!

அமுத கீதம் பாடுங்கள் பாடுங்கள்"

என்று எழுதினார். பாரதி உள்பட அனைவருக்கும் பிடித்திருந்தது. பாரதிராஜா இயக்கிய இந்த நான்காவது படமும் நன்றாக ஓடியது.

இரு மொழிப்படம்

"ஊர்வசி நீனே நன்ன ப்ரேயசி" என்ற கன்னடப்படம் தெலுங்கிலுமாக இரு மொழிப்படமாக வந்தது. இதன் மலையாளம் டைரக்டர் ஐ.வி.சசி இயக்கிய "பகலில் ஓர் இரவு" படம். ஸ்ரீதேவி நடித்திருந்தார்.

பாம்குரோவ் ஓட்டலில் கம்போசிங் நடந்தது கவியரசர் "இளமையெனும் பூங்காற்று" என்று எழுதினார்.

இங்கே ஒன்றைச் சொல்லவேண்டும். கவியரசர் – எம்.எஸ்.விஸ்வநாதன் இணைந்து செய்த பாடல்கள் எல்லாம் மிகவும் நல்ல லட்சண அமைப்புடன் இருக்கும்.

முதல் வரி தொடங்க, அதே சந்தத்தில் குறைந்தது நான்கு அடிகளாவது வரும்.

உதாரணமாக,

“எட்டடுக்கு மாளிகையில்

ஏற்றி வைத்த என் தலைவன்

விட்டு விட்டுச் சென்றானடி

வேறு பட்டு நின்றானடி”

“கண்ணன் என்னும் மன்னன்

பேரைச் சொல்லச் சொல்ல

கல்லும் முள்ளும் பூவாய்

மாறும் மெல்ல மெல்ல”

– இப்படி எந்தப் பாடலை எடுத்தாலும் ஒரு ஒத்த அழகுடன் இருக்கும்.

மாற்றம்

இதை நான் மாற்ற எண்ணினேன்

ஒரு அடிபோல் இன்னொரு அடி வராமல் போனாலும், அழகு கெடாமல் இருக்க வேண்டும் என்றும், ‘இங்கே நான் நிறுத்த வேண்டும் – இங்கே நீட்ட வேண்டும்’ என்ற வரைமுறைகளைத் தாண்ட வேண்டுமென்றும் என்னுடைய மெட்டுக்களை அமைத்தேன். அதிலும் ஒரு அழகு இழையோடும் விதமாக கவியரசர் எழுதிவிட்டார்.

“இளமை எனும் பூங்காற்று பாடியது ஓர் பாட்டு

ஒரு பொழுதில் ஓர் ஆசை சுகம் சுகம் அதிலே ஒரே சுகம்

ஒரே வீணை ஒரே நாதம்”

இசையோடு இந்த வரிகள் கொஞ்சிக் குழையும் என்பது அவருக்கும் தெரிந்தே இருந்தது.

இதில் இன்னும் ஒரு பாடல் பரிசோதனை முயற்சியாக, “தாம்த தீம்த” என்று தொடங்கும் பாடலில், ஆண் – பெண் கோரசை வைத்தே, இசைக்குழு இல்லாமல், பாடலுக்கு இடையில் வரும் இசையை கோரசே இசைப்பது போல அமைத்திருந்தேன்.

நன்றாக இருந்தாலும் வெளியே தெரியாமல் போன காரணம் தெரியவில்லை.

பட்டாக்கத்தி பைரவன்

‘பஞ்ச பூதாலு’ என்ற தெலுங்குப்படம் தமிழில் சிவாஜி நடிக்க “பட்டாக்கத்தி பைரவன்’ ஆனது. இந்தப் படத்தை நினைத்தாலே “எங்கெங்கோ செல்லும் என் எண்ணங்கள் பாடல்தான் மனதில் ஓடிவரும்.

என் முதல் படமான “அன்னக்கிளி”யின் கதையை எழுதிய செல்வராஜ், முதன் முதலில் “பொண்ணு ஊருக்குப் புதுசு” என்ற படத்தை டைரக்ட் செய்தார். இதில் எல்லாப் பாடல்களுமே என்றைக்கும் கேட்க சுகமானவை.

“ஓரம்போ”

“சாமக்கோழி கூவுதம்மா”

“ஒனக்கெனத்தானே இந்நேரமா”

– போன்ற படத்தின் எல்லாப் பாடல்களையும் அமர்தான் எழுதினான்.

**"புதிய வார்ப்புகள்" படத்துக்கு**
**புதிய உத்திகளில் இளையராஜா இசை அமைப்பு**

பாரதிராஜா இயக்கத்தில் கே.பாக்யராஜ் – ரதி நடித்த "புதிய வார்ப்புகள்" படத்துக்கு, புதுப்புது உத்திகளில் இளையராஜா இசை அமைத்தார்.

தனது இசைப்பயணம் பற்றி இளையராஜா கூறியதாவது:–

"தேவராஜ் – மோகன் இயக்கிய "பூந்தளிர்" படத்தில் ஒரு மலையாளப்பாடல் இடம் பெற்றது.

"ஞான் ஞான் பாடணும் ஊஞ்ஞால் ஆடணும்"

– என்ற இந்தப்பாடலை எம்.ஜி.வல்லபன் எழுதியிருந்தார். இந்த பாடலில், ஒரு புதிய பாடகி பாடியிருப்பதும் எதிர்பாராமல் நடந்த விஷயம்.

ஜென்சி அறிமுகம்

முந்தின நாள் எனது இசையில் ஒரு பாட்டுக்கு பாட வந்த ஜேசுதாஸ், அவருடன் ஒரு பெண்ணையும் அழைத்து வந்திருந்தார். 'இந்தப் பெண்ணை பாட வைத்து கேட்டுப் பாருங்கள்' என்று கேட்டுக்கொண்டார். கேட்டேன். குரல் பிடித்துப் போயிற்று. அடுத்த நாளே ரெக்கார்டிங்கில், அந்தப் பெண்ணை இந்த மலையாளப்பாடலை பாட வைத்தேன். அந்தப் பாடகிதான் ஜென்சி.

தேவராஜ் – மோகனின் "ரோசாப்பூ ரவிக்கைக்காரி" நல்ல கதையம்சம், பாடல்களுடன்அமைந்த படம். கவிஞர் புலமைப்பித்தனின் அருமையான தமிழும் அழகும் கிராமியப் பாடலிலும் கொஞ்சி வந்து மெட்டுக்களில் விளையாடிய படம்.

"உச்சி வகுந்தெடுத்து பிச்சிப்பூ வெச்ச கிளி", "என்ன பாட்டுப்பாட", "வெத்தல வெத்தல வெத்தலயோ கொழுந்து வெத்தலயோ", "என்னுள்ளில் எங்கோ" முதலான பாடல்கள் ரசிகர்களின் விருப்பப்பாடல்களாக அமைந்தன.

புதிய வார்ப்புகள்

பாரதிராஜா "புதிய வார்ப்புகள்" என்று ஒரு படத்துக்கு பெயர் சூட்டினார். நான், பாரதி எல்லாம் ஜெயகாந்தனின் ரசிகர்கள் என்பதால் அவரது ஒரு கதைத் தலைப்பை இந்த படத்துக்கு வைத்து, படத்தின் கடைசி பிரேமில் தலைப்பிற்கு ஒரு அழுத்தம் கொடுக்கும் வகையில் கதையை உருவாக்கிருந்தார்.

இந்தப் படத்தின் கம்போசிங் பிரசிடெண்ட் ஓட்டலில் நடந்தது. ஒரே மூச்சில் படத்தை முடிக்கத் திட்டமிட்டிருப்பதாகவும், பாடல்கள் எல்லாவற்றையும் முதலிலேயே பதிவு செய்து எடுத்துப்போனால்தான் அது சாத்தியம் என்றும் பாரதி சொன்னார்.

முதலில் பூஜைக்கு ஒரு பாடலை மட்டும் ரெக்கார்டு செய்வதற்காக இரவு பின்னணி இசை வேலை முடிந்து 9 மணிக்கு "ட்யூன்" கம்போஸ் செய்தேன். கவியரசர் வந்து பாடலை எழுதிக்கொடுத்துவிட்டுப் போய்விட்டார். 10ஷி மணிக்கு வீட்டுக்குப் போய்விட்டேன்.

அப்போது பாரதியிடம் இருந்து போன் வந்தது. “இந்தப் பாட்டை நாளைக்கு பதிவு செய்யவேண்டாம். ஒரு நல்ல டூயட் பாட்டுக்கு டியூன் போட்டு, அதை பதிவு செய்தால் நல்லாயிருக்கும்னு நினைக்கிறேன்” என்றார்.

நான் பாரதியிடம், “யோவ்! என்ன விளையாடறியா? கவிஞர் வந்து பாட்டெல்லாம் எழுதிட்டுப் போயிட்டார். அவருகிட்ட புதுசா பாட்டு வேணாம்னு எப்படிய்யா கேட்கமுடியும்?” என்றேன்.

பாரதியும் விடவில்லை. “அதெல்லாம் நான் சொல்லிக்கிறேன். வேறு பாட்டை நாளைக்கு காலையில் பூஜை ரெக்கார்டிங்கில் எடுக்கிறோம். சரியா?” என்று கேட்டார்.

“சரி காலையில் பார்க்கலாம்” என்று சொல்லி போனை வைத்தேன்.

புதிய மெட்டு – புதிய பாட்டு

மறுநாள் காலையில் ஜேசுதாசின் தரங்கிணி ஸ்டூடியோவில் காலை 7 மணிக்கு ஒரு டியூனை பாடினேன். அது நன்றாக இருக்கிறது என்று பாரதி ‘ஓ.கே’ சொல்ல, அப்படியே இசைக்குழுவுக்கு அதற்கான இசையை கம்போஸ்செய்து எழுதிக்கொடுத்து விட்டேன்.

டிபன் முடித்துவிட்டு 9 மணிக்கு இசைக்குழுவுடன் பாடலுக்கான ஒத்திகையும் முடித்தேன்.

கவியரசர் கண்ணதாசன் சரியாக 10 மணிக்கு வந்தார். ஒரு ஹாலில் அமர்ந்தோம். சுற்றிலும் இசைக்குழுவினர் ஆங்காங்கே நின்று வேடிக்கை பார்க்கத் தொடங்கினார்கள். அவர்கள் கண்ணதாசன் பாடல் எழுதுவதை பார்த்திருக்க வாய்ப்பு இல்லை அல்லவா? அதனால்தான் அத்தனை ஆர்வம்.

கவியரசர் முதல் நாளே கதையை கேட்டுவிட்டதால் “டூயட்தானே?” என்று மட்டும் என்னிடம் கேட்டார்.

“ஆமாண்ணே” என்றேன்.

“டியூனை பாடு” என்றார்.

பாடினேன்.

“இன்னொரு முறை பாடு” என்றார்.

மீண்டும் பாடினேன்.

உடனே கவியரசரிடம் இருந்து டியூனுக்கேற்ற வார்த்தைகள் வந்து விழுந்தன.

“வான் மேகங்களே! வாழ்த்துங்கள்! பாடுங்கள்! நான் இன்று கண்டுகொண்டேன் ராமனை” என்று அவர் உடனே சொல்ல சுற்றி நின்ற இசைக்குழுவினர் ஆச்சரியத்தில் திறந்த வாய் மூடாமல் கேட்டுக்கொண்டிருந்தனர்.

அவர் சொன்னதை நான் டியூனோடு பாடிக்காட்டினேன். “கண்டுகொண்டேன்

ராமனை" என்று நான் பாடி முடித்தவுடன், இசையில் இருந்து இம்மியும் பிசகாது வார்த்தைகள் கவியரசரிடம் இருந்து விழுவதைக் கண்டு கைதட்டினார்கள்.

கவிஞருக்கோ ரசிகர்களை மொத்தமாக கூட்டி வைத்து அவர்கள் முன் பாடல் எழுதுவது போன்ற உணர்வு ஏற்பட்டது போலும். உற்சாகமாக அடுத்தடுத்த வார்த்தைகள் வெளிவந்தன.

மொத்தப்பாடலும் 20 நிமிடத்தில் முடிய அதை ஒரு 10 நிமிடத்தில் நகல் எடுத்துக்காட்ட, கவியரசர் சரி பார்த்தார். பாரதி "ஓ.கே" சொன்னார்.

ஜானகியும், மலேசியா வாசுதேவனும் வந்தார்கள். பாடலை எழுதி, டியூனை கற்றுக்கொண்டு ஒத்திகை முடிந்து பாடல் பதிவானது.

அங்கேயே அப்போதே சுடச்சுட எடுத்த பாடல்தான். ஆனால் 'பாஸ்ட் புட்' ரகம் அல்ல.

கடற்கரையில் உதயமான கற்பனை

மற்ற பாடல்களை கம்போஸ் செய்ய ஓட்டலில் உட்கார்ந்தோம்.

ஊருக்குப் புதிதாய் வந்த ஆசிரியருக்கும், நாயகிக்கும் காதல் அரும்புகிறது. இப்போது பாடல் காட்சி. இந்தப்பாடல் எனக்கு வித்தியாசமாக வேண்டும் என பாரதி கேட்டார்.

பல மெட்டுக்கள் போட்டேன். ஒன்றும் பிடிக்கவில்லை. எனக்கே புதிதாக ஏதாவது செய்யவேண்டும் என்று தோன்றிக்கொண்டிருந்தது. அந்த நேரத்தில் வந்த மெட்டுக்களை எல்லாம் வாசித்தபடி பாடிக்கொண்டிருந்தேன். எனக்கும் எதுவும் புதிதாகத் தெரியவில்லை.

ஆர்மோனியத்தை மூடிவிட்டு "சரி வாய்யா! அப்படி பீச் பக்கம் போய் வரலாம்" என்றார் பாரதி. பிரசிடென்ட் ஓட்டலில் இருந்து கொஞ்ச தூர நடையில் கடற்கரையை அடைந்தோம்.

கூட்டம் அவ்வளவாக இல்லை. வழக்கமாக நாங்கள் மாலை நேரங்களில் பொழுது போக்கிய அதே கடற்கரை.

சுண்டல் வாங்கி கொறித்தபடி கடற்கரையில் நடந்தோம். கடல் அலைகளில் கால்கள் நனைய நனைய நின்றோம். இப்படியே சிறிது நேரம் பீச்சில் பொழுது போக்கிவிட்டு திரும்பவும் ரூமுக்கு வந்தோம். அதுவரை பாடலைப் பற்றி பேசவும் இல்லை. அதுபற்றி சிந்திக்கவும் இல்லை.

இந்த இடைவெளியில் என்ன நடந்ததோ தெரியவில்லை. வந்து ஆர்மோனியத்தை தொட்டேன். அவ்வளவுதான். ஆரம்பம் முதல் கடைசி வரை 'தம் தனனம்' என்று தொடங்கி முடியும் வரை அதே 'தம்தனன'வில் பாடலின் முழு டியூனும் வந்துவிட்டது.

பாரதியைப் பார்க்கணுமே "சூப்பர்! பிரமாதம்" என்றவர், ஆடாத குறைதான். அத்தனை உற்சாகம் அவருக்கு!

பாக்யராஜ் ஹீரோ ஆனது எப்படி?

"புதிய வார்ப்புகள்" படத்திற்கு சரியான ஹீரோ கிடைக்கவில்லை. படப்பிடிப்புக்கான நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. பாடல்கள் முடிந்ததும் ஷூட்டிங் போக ஏற்பாடாகி இருந்தது.

"ஹீரோ கிடைக்காவிட்டால் ஷூட்டிங் கிடையாதா?" கேட்டேன், பாரதியிடம்.

"நாளை ஒருநாள் கடைசி. எப்படியாவது யாரையாவது நடிக்க வைப்பேன். படப்பிடிப்பு ஏற்கனவே முடிவு செய்த தேதியில் தொடங்கும்" உறுதியாகவே சொன்னார், பாரதி.

மறுநாள் என்னைப் பார்த்தவர், "என் உதவி டைரக்டர் பாக்யராஜ்தான் இந்தப் படத்தில் ஹீரோவாக நடிக்கப்போகிறார்" என்றார்.

கொஞ்ச நேரத்தில் பாக்யராஜ் வந்தார். நான் அவரிடம், "என்ன பாக்யராஜ்! நீங்கள் நடித்தால் நாங்கள் என்ன செய்வோம்? எங்களைப் பார்த்தால் உங்களுக்கு பாவமாக இல்லையா?" என்று கிண்டல் செய்தேன்.

அவரோ, "இல்லே சார்! டைரக்டர் சொல்லிவிட்டார். அதுக்கு மேல பேச முடியாது சார்" என்று யதார்த்தமாக சொன்னார்.

அந்தப்படம் வெற்றி பெற்று பாக்யராஜும் ஹீரோ – இயக்குனர் என்று வளர்ந்து விட்டார். பிற்காலத்தில் பாக்யராஜின் திறமை கண்டு, அன்றைக்கு நான் சொன்ன முட்டாள்தனமான கிண்டல் பேச்சை எண்ணி பலமுறை வருந்தியிருக்கிறேன். "ஒருவரின் தகுதியை எடைபோட நீ யார்? உனக்கென்ன தகுதி இருக்கிறது?" என்று பலமுறை எனக்கு நானே கேட்டுக்கொண்டேன்.

**இளையராஜா 3 முறை தேசிய விருது பெற்றார்**

சிறந்த இசை அமைப்பாளருக்கான மத்திய அரசின் தேசிய விருதை, இளையராஜா பெற்றார்.

அவருக்கு இந்த விருதைப் பெற்றுத்தந்த படங்கள்:–

1. சிந்து பைரவி

2. சாகர சங்கமம் ("சலங்கை ஒலி")

3. ருத்ரவீணை.

இதில், "சிந்து பைரவி" 11–11–1985–ல் வெளியானது. கே.பாலசந்தர் இயக்கியிருந்தார். சங்கீதத்தையே உயிர் மூச்சாகக் கொண்ட ஒரு இசைக்கலைஞனின் வாழ்க்கையில் ஏற்படும் காதல் திருப்பம் அவன் வாழ்வையே புரட்டிப்போட்டு விடுகிறது. 'இசை' பற்றி பாலபாடம் கூட தெரியாத அன்பே வடிவான மனைவி, இசை மூலம் ஈர்க்கப்பட்டு, இசைக் கலைஞராலும் ஈர்க்கப்படும் இளம் பெண் என இந்த மூவர் பின்னணியில் பாலசந்தர் காட்சிகளை உருவாக்கியிருந்தார். 25 வாரம் ஓடி 'இசை'க்கு மரியாதை ஏற்படுத்திக் கொடுத்த படம்.

இதில் "ஜே.கே.பி" என்ற இசைக் கலைஞராக சிவகுமார் வாழ்ந்து காட்டியிருந்தார். பாசத்தைக் கொட்டும் அப்பாவி மனைவியாக வந்து, கணவரின் இன்னொரு காதலில் வெந்து, அப்புறமாய் தன்னைத்தானே ஜீரணித்துக் கொள்ளும் அப்பாவிப் பெண் கேரக்டரில் சுலக்ஷனா வெளுத்துக் கட்டியிருந்தார்.

ஜே.கே.பி.யின் இசையை நேசித்து பிறகு அவரையும் நேசிக்கும் கேரக்டரில் சுஹாசினி நடிப்பில் சிகரம் தொட்டிருந்தார். இந்த நடிப்புக்காக சிறந்த நடிகைக்கான தேசிய விருது அவரைத் தேடிவந்தது என்பது படத்துக்கு கிடைத்த இன்னொரு சிறப்பு.

சித்ரா அறிமுகம்

இந்தப் படத்தில்தான் பின்னணி பாடகியாக சித்ராவை இளையராஜா அறிமுகம் செய்தார்.

சித்ரா பாடிய "பாடறியேன், படிப்பறியேன், பள்ளிக்கூடம் தானறியேன்" பாடல் அவருக்கு பெரும் புகழ் தேடிக்கொடுத்து, மத்திய அரசின் தேசிய விருதையும் பெற்றுத்தந்தது. அதோடு தமிழில் நிலையான பாடகியாகவும் நிலை நிறுத்தியது.

சாகர சங்கமம்

தெலுங்கில் புகழ் பெற்ற இயக்குனர் கே.விஸ்வநாத், பரத நாட்டிய கலைஞரின் வாழ்க்கைப் பின்னணியை மையமாக வைத்து உருவாக்கிய படம் "சாகர சங்கமம்." "சங்கராபரணம்" என்ற தெலுங்குப்படம் மூலம் மிகப்பிரபலமான இந்த இயக்குனரின் சாகர சங்கமமும் வெற்றிப்படமே. நடனக் கலைஞராக, நடிப்பின் சிகரத்தைத் தொட்டார், கமலஹாசன். அவருடன் இணைந்து நடித்தார், ஜெயப்பிரதா.

தெலுங்கில் பெற்ற வெற்றியைத் தொடர்ந்து தமிழிலும் இந்தப்படம் "சலங்கை ஒலி" என்ற பெயரில் மொழி மாற்று செய்து வெளியிடப்பட்டது. 'மவுனமான நேரம்', 'ஓம் நமச்சிவாய', 'ததித ததித தந்தானா' போன்றவை, இளையராஜா இசையில் மிகவும் பிரபலமான பாடல்கள்.

"ருத்ரவீணை" இளையராஜாவின் இசைக்கு தேசிய விருது பெற்றுத்தந்த மூன்றாவது படம். கே.பாலசந்தர் இயக்கினார்.

தேசிய விருது பெற்றது குறித்து இளையராஜா கூறியதாவது:–

"ஒரு படத்துக்கு எந்த மாதிரி தேவையோ அதை சரியாக கொடுப்பது ஒரு இசையமைப்பாளரின் கடமை. நானும் அதைத்தான் செய்தேன். சில பாடல்கள் ரெக்கார்டிங்கின்போதே அதன் தனித்தன்மை தெரிந்து விடும். "சிந்து பைரவி" படத்தில் "பாடறியேன் படிப்பறியேன்" பாடல் பதிவாகும்போது, என்னுடன் இருந்த டைரக்டர் கே.பாலசந்தரிடம், "இந்தப் பாடல் மட்டும் உரிய வரவேற்பைப் பெறாவிட்டால் நான் இசையமைப்பாளரே அல்ல" என்றேன். விருது கொடுத்தது, இசை மீதான என் நம்பிக்கையை உறுதிப்படுத்திக் கொண்டார்கள்."

இவ்வாறு இளையராஜா கூறினார்.

**எம்.எஸ்.விஸ்வநாதனுடன் சேர்ந்து இசை அமைத்தார்**
**ஏவி.எம். தயாரித்த "மெல்லத் திறந்தது கதவு"**

இரண்டு இசை மேதைகள் சேர்ந்து இசை அமைப்பது என்பது ஆச்சரியமான விஷயம். ஏவி.எம். தயாரித்த "மெல்லத் திறந்தது கதவு" படத்துக்கு எம்.எஸ்.விஸ்வநாதனும், இளையராஜாவும் சேர்ந்து இசை அமைத்தார்கள்.

"மெல்லத் திறந்தது கதவு" படம் 1986 செப்டம்பர் 12–ந்தேதி வெளியாயிற்று. இதை ஆர்.சுந்தரராஜன் இயக்கினார். மோகன், ராதா, அமலா ஆகியோர் நடித்தனர்.

இதில் இடம் பெற்ற முக்கிய பாடல்கள்:–

1. "ஊரு சனம் தூங்கிருச்சு... ஊதக்காத்தும் அடிச்சிருச்சு!"

2. "குழலூதும் கண்ணனுக்கு குயில் பாடும் பாட்டு கேக்குதா?"

3. "தேடும் கண் பார்வை தவிக்க..."

4. "வா வெண்ணிலா... உன்னைத்தானே வானம் தேடுது!"

5. "தில் தில் தில்... மனதில் ஒரு தல் தல் தல் காதல்"

சரவணன் தகவல்

"மெல்லத் திறந்தது கதவு" படத்தை ஏவி.எம். தயாரிக்க நேர்ந்ததே ஒரு சுவையான கதை.

அதுபற்றி ஏவி.எம். சரவணன் ஒரு கட்டுரையில் கூறியிருப்பதாவது:–

"1985–ம் ஆண்டு ஒரு நாள் எனக்கு திடீரென்று பாரதிராஜா டெலிபோன் செய்தார். "சார்... நானும் இளையராஜாவும் உங்களைப் பார்க்க வீட்டுக்கு வரலாம் என்றிருக்கிறோம்" என்றார்.

இருவரும் வந்தார்கள்.

"எம்.எஸ்.விஸ்வநாதன் இப்போது கொஞ்சம் சிரமத்தில் இருக்கிறார். அவருக்கு ஒரு படம் எடுத்து உதவி செய்தால் நன்றாக இருக்கும்" என்று யோசனை சொன்னார்கள். அப்போது நாங்கள் நிறையப் படங்கள் எடுத்துக் கொண்டிருந்தோம். அந்த யோசனையை நான் உடனே ஏற்றுக்கொண்டேன்.

என் தந்தையாருக்கு மெல்லிசை மன்னரின் பாட்டுகள் மட்டுமல்ல, அவரது பண்புகளும் மிகவும் பிடிக்கும். அவரது மனதில் நிறைந்திருந்த மனிதர்களில் எம்.எஸ்.வியும் ஒருவர்.

ஒருமுறை அப்பச்சி (ஏவி.எம்) என்னை அழைத்து "விஸ்வநாதனை மட்டும் என்றைக்கும் விட்டு விடாதே. அவருக்கு எப்போது எந்தச் சிரமம் ஏற்பட்டு அது உனக்குத் தெரிய வந்தாலும் அவருக்கு உதவி செய்யத் தயங்காதே" என்று சொன்னார். மெல்லிசை மன்னரை எனக்கும் பிடிக்கும். அவர் மீது எனக்கு என்றும்

மரியாதை உண்டு.

பாரதிராஜாவும், இளையராஜாவும் சொன்னதும், எம்.எஸ்.வி.க்கு உதவ வேண்டும் என்பதற்காக எடுக்கப்பட்ட படம்தான் "மெல்லத்திறந்தது கதவு."

இளையராஜா யோசனை

இளையராஜாதான் அந்தப் படத்துக்கு இசையமைப்பதாக இருந்தது. "நானும் எம்.எஸ்.வி.யும் சேர்ந்து இப்படத்துக்கு மியூசிக் பண்றோமே" என்று ராஜா கேட்டபோது எனக்கு அந்த ஐடியா பிடித்திருந்தது. இரண்டு இசை மேதைகளும் இணைந்து அந்தப் படத்தில் பணியாற்றினார்கள் என்பது ஒரு தனிச்சிறப்பாக அமைந்தது.

பாடல்களுக்கான டியூனை எம்.எஸ்.வி. அவர்கள் போட்டார். ஆர்க்கெஸ்ட்ராவை இளையராஜா நடத்தினார்.

பாடல்கள் மிக இனிமையாக அமைந்தன. அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் மதித்துப் பணியாற்றிய விதமும் இனிமையாக இருந்தது.

படம் வெளியானதும் முதலில் சுமாராகத்தான் போயிற்று. நாட்கள் ஆக ஆகத்தான் பிக் அப் ஆயிற்று.

தமாஷ்

நடுவில் ஒரு தமாஷ் நடந்தது.

மதுரையில் எங்கள் வினியோகஸ்தர் நாகராஜ ராஜா என்பவர் அங்கே சினிப்ரியா தியேட்டரில் அந்தப் படத்தை, இடைவேளைக்கு பிந்தைய பகுதியை முன்னதாகவும், முந்தைய பகுதியை பின்னாலும் போட்டால் நன்றாக இருக்கும் போலிருக்கிறதே என்று கருதி அப்படியே மாற்றிப்போட ஏற்பாடு செய்தார். ஆனால் இப்படி மாற்றிப் போட்டது ரசிகர்கள் யாருக்கும் தெரியாது. அப்படிப்போட்டபோது அது ஒரிஜினல் படத்தைவிட அதிகமாக ரசிக்கப்பட்டதாகத் தெரிந்தது. எங்களுக்கே இது ஆச்சரியமாக இருந்தது.

மதுரையில் இப்படி படத்தை முன்னும் பின்னுமாக மாற்றிப்போட்டு அது வரவேற்பைப் பெற்றது என்ற விவரம் தியேட்டர் வட்டாரங்களில் வேகமாக கசிந்து, மற்ற தியேட்டர்காரர்களும் அப்படியே செய்யத் தொடங்கி விட்டார்கள்.

இதனால் பின்னர் பிரச்சினை ஏதும் வந்துவிடக்கூடாது என்ற எண்ணத்தில் தியேட்டரில் காண்பித்துக் கொண்டிருந்த மாதிரியே மாற்றிப்போட்டு படத்தை மறு தணிக்கைக்கு அனுப்பினோம்.

"இது தேவைதானா" என்று அதிகாரிகளே கேட்டார்கள்.

"படத்துக்குத்தான் சர்டிபிகேட் ஏற்கனவே கொடுத்தாயிற்றே. எப்படிக் காட்டினால் என்ன?" என்று அவர்கள் அபிப்பிராயப்பட்டார்கள்.

நாங்கள்தான் வற்புறுத்தி மீண்டும் ஒரு சர்டிபிகேட் வாங்கினோம்.

அப்போது குறும்புக்கார அதிகாரி ஒருவர், "தலைப்பு எப்படி? 'மெல்லத் திறந்தது கதவு' என்றுதான் இருக்கப் போகிறதா? இல்லை, 'கதவு திறந்தது மெல்ல' என்று மாற்றப் போகிறீர்களா?" என்று கிண்டலடித்தார்."

இவ்வாறு சரவணன் குறிப்பிட்டுள்ளார்.

**இளையராஜா**
**இசை அமைக்க மறுத்த படங்கள்!**

இளையராஜா சில படங்களுக்கு இசை அமைக்க மறுத்தார்.

அதுபற்றி அவர் கூறியிருப்பதாவது:—

"எனக்கொரு கெட்ட குணம். என்னிடம் யாராவது வந்து, "நீங்கள் இசை அமைக்கவில்லை என்றால், இந்தப் படத்தை எடுக்கமாட்டேன், இப்படியே விட்டு விடுவேன்" என்று சொன்னால், கண்டிப்பாக இசை அமைக்க ஒத்துக்கொள்ள மாட்டேன்! காரணம், "இவர்கள் எப்படி படம் எடுக்காமல் இருக்கிறார்கள், பார்ப்போமே!" என்ற எண்ணம்தான்.

இரண்டு மூன்று மாதம் காத்திருப்பார்கள். நான் இறங்கி வரமாட்டேன்.

அப்புறம், வேறு ஒருவரின் இசையில் படம் வெளிவந்து விடும்!

அப்படி வந்ததுதான் கே.பாக்யராஜின் முதல் படம் "ஒரு கை ஓசை" (இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்)

இப்படி, "நீங்கள் இசை அமைக்கவில்லை என்றால் இந்தப் படத்தை நான் எடுக்கப்போவதில்லை" என்று சொல்லி, நான் இசை அமைக்க மாட்டேன் என்று மறுத்து, வேறு ஒருவர் இசை அமைப்பில் படத்தை தயாரித்து வெளியிட்ட இருவர்:— நடிகர் பார்த்திபன் (படம் "புதிய பாதை"); அனந்த் (கே.பாலசந்தரின் உதவியாளர்). படம்: "சிகரம்."

தீஸ்ரி மஞ்சில்

சாருசித்ரா சீனுவாசன், "தீஸ்ரி மஞ்ஜில்" என்ற இந்திப்படத்தை தமிழில் எடுக்க முடிவு செய்து, கமல் — ஸ்ரீதேவியை ஒப்பந்தம் செய்துவிட்டு என்னிடம் வந்தார். எனக்குப் படத்தைப் போட்டுக்காட்டினார்.

எஸ்.பி.பாலசுப்பிரமணியத்துடன் நான் கச்சேரி நடத்திய காலத்திலேயே, இந்தப் படத்தின் பாடல்கள் அத்தனையும் மனப்பாடம். ஆர்.டி.பர்மன் அற்புதமாக இசை அமைத்திருந்தார்.

படம் முடிந்ததும், "இந்தப் பாடல்களைப்போல் என்னால் கம்போஸ் செய்ய முடியாது. வேறு யாரையாவது ஏற்பாடு செய்து கொள்ளுங்கள்" என்று சொல்லிவிட்டேன்.

சில பாடல்களுக்கு இணை கிடையாது. அதுபோல் இசை அமைக்க முயற்சி செய்யக்கூடாது. ஆர்.டி.பர்மன் இசை அமைத்த அந்தப் படத்தின் பாடல்களும் அந்த வகையைச் சேர்ந்தவை.

டைரக்டர்கள்

சினிமாவுக்கு கதை சொல்வது ஒரு தனி கலை. சிலர், கதையை சொல்லத் தெரியாமல் மூன்று — நான்கு மணி நேரம் சொல்வார்கள். சிலர், கதையைப் பிரமாதமாகச் சொல்லிவிட்டு, உப்புச் சப்பு இல்லாமல் படமாக்குவார்கள்.

என்னிடம், சொல்லியதை சொல்லியவாறே படம் எடுத்த டைரக்டர்கள் இரண்டே பேர்: பாலுமகேந்திரா, மணிரத்னம்.

கதையை மிகவும் சுருக்கமாகச் சொல்லும் இயக்குனர்களில் ஸ்ரீதர் அவர்களும், கே.எஸ்.கோபாலகிருஷ்ணன் அவர்களும் தனி ரகம். இருவரும் 15 நிமி டங்களுக்குள் கதை சொல்லிவிடுவார்கள்.

காதல் ஓவியம்

பாரதிராஜா அவரது "காதல் ஓவியம்" படத்தின் மீது ரொம்ப நம்பிக்கை வைத்திருந்தார்.

நான் மூகாம்பிகையின் தீவிர பக்தன் என்பதால், "படத்தின் நாயகன் அம்பாளின் பக்தன் என்று சொன்னால், இளையராஜா நல்ல டியூன்களை எலலாம் போட்டுத்தருவார்" என்று பாரதியிடம் உதவியாளர்களாக இருந்த மணிவண்ணனும், கலைமணியும் சொல்லியிருப்பார்கள் போலும்.

நான் அப்படத்துக்கு இசை அமைத்தேன். ஒருநாள் மாலை நேரத்தில் ஆரம்பித்த பாடல் 'கம்போசிங்' அன்றே முடிந்துவிட்டது. படத்துக்கான எட்டுப்பாடல்களும் தயாராகிவிட்டன.

படம், பின்னணி இசை சேர்ப்புக்காக வந்தபோது, அந்த படத்தின் மீது எனக்கு நம்பிக்கை வரவில்லை. பாரதியிடம், "படம் ரிலீஸ் ஆவதற்குள் நாம் இருவரும் குருவாயூர் போய் வரலாம்" என்றேன். "சரி" என்றார். வேலை சரியாக இருந்ததால், நகர முடியவில்லை.

திடீரென்று ஒருநாள் கலைமணியை பாரதி கூப்பிட்டு, "ஏய்யா! படத்திலே ஏதோ ஒன்னு குறையுதே. உனக்குத் தெரியாதா? தெரிந்தா சொல்லு!" என்றார்.

"அது ஒன்றும் இல்லே சார். கதைதான் குறையுது!" என்று கலைமணி கூற, எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தோம். கலைமணியை பாரதி அடிக்கப்போக, அவர் தப்பி ஓடிவிட்டார்.

படம் ரிலீஸ் ஆகியது. ஒரு வாரத்தில், படப்பெட்டிகள் எல்லாம் திரும்பி வந்துவிட்டன.

பாரதி என்னிடம் வந்து, "வா, குருவாயூர் போய் வரலாம்" என்றார். "படம் ரிலீஸ் ஆவதற்கு முன்பல்லவா போயிருக்க வேண்டும். இப்போது வேண்டாமே!" என்று கூறிவிட்டேன்.

"காதல் ஓவியம்" படம் சரியாகப் போகாததால், பாரதி மனம் சங்கடப்பட்டார். ரசிகர்கள் மீது கோபப்பட்டார்.

"பாரதி! ரசிகர்களை குறை கூறவேண்டாம். அவர்கள் எப்போதும் சரியாகவே இருப்பார்கள்" என்றேன்.

"உனக்குத் தெரியாது. இவர்களுக்கு எது வேணும் என்று எனக்குத் தெரியாதா? இவர்களுக்காக ஒரு மூன்று படி கீழே இறங்கி வந்து ஒரு படம் எடுத்துக்

காட்டுகிறேன் பார்!" என்றார்.

அதற்கு நான், "யோசித்துப் பாருங்கள். 16 வயதினிலே படம் நன்றாக ஓடிக்கொண்டிருந்த அதே நேரத்தில், அதற்கு இணையாக விட்டலாச்சாரியாவின் "ஜெகன்மோகினி" படம் ஓடியதல்லவா? அதற்காக, பாரதிராஜா, ஜெகன்மோகினி போல படம் எடுக்கவேண்டும் என்று அர்த்தம் இல்லை. உங்களிடம் மக்கள் எதிர்பார்ப்பது வேறு. அதைவிட்டு எங்கும் போகவேண்டாம்" என்றேன்.

ஆனால் பாரதி தன் கருத்தில் உறுதியாக இருந்தார்.

ரசிகர்களுக்காகவே கீழே இறங்கி வந்து அவர் எடுத்த "வாலிபமே வா வா." படம் ஓடவில்லை.

டைரக்டர் கங்கை அமரன்

"அலைகள் ஓய்வதில்லை" படத்தின் மூலம் தயாரிப்பாளர் ஆன பாஸ்கர், அடுத்து ஏதாவது படம் தயாரிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் என்னிடம் வந்தார். பஞ்சு சாரின் வீட்டில் இருதேன். அப்போது, அங்கே அமர் (கங்கை அமரன்) இருந்ததைப் பார்த்து, "அமர் டைரக்ஷனில் படத்தை எடு. படத்தின் பெயர் கோழி கூவுது" என்றேன். மதுரையில் நாங்கள் நடத்திய நாடகத்தின் பெயர் அது.

நான் சொன்னதை அமர் ஏற்றுக்கொண்டு, ஒரு கதையை உருவாக்கி, பிரபுவை ஹீரோவாகப் போட்டு படம் எடுத்தான். அவன் எனக்குப் போட்டியாக இசை அமைப்பாளராக வந்துவிடக்கூடாது என்பதற்காக டைரக்ட் செய்யச் சொன்னேன் என்று டெலிவிஷன் பேட்டிகளில் அமர் சொல்வது வழக்கம்.

அவன் எனக்குப் போட்டியா, இல்லையா என்பது அவனுக்கே தெரியும்!"

இவ்வாறு இளையராஜா கூறியுள்ளார்.

**இளையராஜா**
**லண்டனுக்குச் சென்று பதிவு செய்த ‘சிம்பொனி’ இசை**

இளையராஜா லண்டனுக்குச் சென்று, தான் உருவாக்கிய இசையை (“சிம்பொனி”), ராணி எலிசபெத்தின் ஆதரவில் இயங்கும் இசைக் குழுவினரைக் கொண்டு பதிவு செய்தார்.

இந்த நிகழ்ச்சி, 1993 ஜூலை மாதத்தில் நடந்தது.

“சிம்பொனி” என்றால் என்ன?

வெளிநாடுகளில், அந்தந்த காலத்திய இசைக் குழுவினர் வாசிப்பதற்காக, இசை அமைப்பாளர்கள் பலவிதமான இசைத் தொகுப்புகளை உருவாக்கினார்கள். இந்த இசைத் தொகுப்புகளுக்கு “சிம்பொனி” என்று பெயர்.

சாஸ்திரிய முறைப்படி பழுதற்ற உயர்ந்த இசை வடிவங்களை, 15–ம் நூற்றாண்டில் இருந்தே விவால்டி, கேன்டல், பீதோவான் போன்ற இசை மேதைகள் உருவாக்கித் தந்தார்கள்.

இளையராஜாவின் இசைத் திறமை பற்றி, லண்டனில் உள்ள “ராயல் பில் ஹார்மனி” என்ற இசைக்குழுவுக்கு தகவல் கிடைத்தது. இந்த இசைக்குழு, ராணி எலிசபெத்தின் ஆதரவில் இயங்குவதாகும்.

இந்த இசைக்குழுவினர் மைக்கேல் டவுன்எண்ட் என்பவரை சென்னைக்கு அனுப்பி, இளையராஜாவின் இசையைப் பற்றி நேரில் அறிந்துவர ஏற்பாடு செய்தனர்.

சென்னையில் ஒரு படத்துக்கு இளையராஜா இசை அமைத்துக் கொண்டிருந்ததை டவுன்எண்ட் பார்த்தார். இளையராஜாவின் இசைத் திறமையை வெகுவாகப் புகழ்ந்து, லண்டனுக்கு தகவல் அனுப்பினார்.

ஆசியாவிலேயே முதல் முறை
இதைத்தொடர்ந்து, இளையராஜாவுக்கு “ராயல் பில் ஹார்மனி” இசைக்குழு அழைப்பு அனுப்பியது.

“1993 ஜூலை 6–ந்தேதி அவர்கள் இளையராஜாவுக்கு எழுதிய கடிதத்தில், “வருகிற 19 முதல் 21–ந்தேதி வரை தங்கள் இசையை (சிம்பொனி) பதிவு செய்ய ஏற்பாடு செய்திருக்கிறோம். எலிசபெத் ராணி அவர்களின் ஆதரவில், இது உலகப்புகழ் பெற்ற இசைக்குழுவாக இருந்தபோதிலும், ஆசியாவின் எந்த இசை அமைப்பாளரின் இசையையும் இதுவரை பதிவு செய்தது இல்லை. ராயல் பில்ஹார்மோனி இசைக்குழுவில் உள்ள அனைவரும் தங்கள் இசையை பதிவு செய்ய ஆவலோடு காத்திருக்கிறோம்” என்று குறிப்பிட்டு இருந்தனர்.

இதைத்தொடர்ந்து இளையராஜா லண்டனுக்குச் சென்று, தான் உருவாக்கிய இசையைப் பதிவு செய்தார்.

நவுஷாத் பாராட்டு

அகில இந்திய திரை இசையின் பிதாமகன் என்று போற்றப்படுகிறவர் நவுஷாத்.

அகில இந்தியா முழுவதும் வெற்றிக்கொடி நாட்டிய "ரத்தன்", "அன்மோல்கடி", "ஆன்", "மொகல்–ஏ–ஆஜாம்" முதலிய படங்களுக்கு இசை அமைத்தவர்.

அவர் ஒரு சமயத்தில், "இளையராஜாவிடம் நிறைய விஷயங்கள் இருக்கின்றன. எனக்கு உடல் நிலை சரியாக இருந்து நேரமும் இருக்குமானால், இந்த இளைஞனிடம் உட்கார்ந்து கற்றுக் கொள்வதற்கு நான் தயங்கமாட்டேன்" என்று குறிப்பிட்டார்.

இதுபற்றி இளையராஜா கூறுகையில், "இசை என்றால் என்னவென்றே அறியாத இந்தப் படிக்காத பட்டிக்காட்டானிடம் இசையை கற்றுக்கொள்ளலாம் என்று கூறிய – என் முன்னோடிகளில் மூத்தவரான நவுஷாத் அவர்களின் பாராட்டு என்னை மேலும் உற்சாகத்தில் ஆழ்த்துவதற்கு பதிலாக – சிறிய புழுவாக்கிவிட்டது" என்று சொன்னார்.

புகழ்ச்சி, சிலரை கர்வப்பட வைக்கும். இளையராஜாவை நாணப்பட வைத்தது.

நானா செய்தேன்!

இளையராஜா ஒரு கட்டுரையில் எழுதியிருப்பதாவது:–

"நான் படித்தவன் இல்லை. முறையாக சங்கீதம் கற்றவனும் இல்லை. எனக்குள் இருப்பது, என்னில் இருந்து மாறுபட்ட ஒன்றாகத் தோன்றுகிறது.

சில இசை உருவாக்கங்களை, படைப்புகளைச் செய்துவிட்டு, பிறகு நிதானமாக ஆராயும்போது, 'இதைச் செய்தது நான்தானா?' என்று தோன்றுகிறது. 'இதைப் படைத்தது நானில்லையோ' என்று தோன்றுகிறது. இதுபோல் அடிக்கடி ஏற்படுவதுண்டு.

இந்தப் பிறவியில் உருவான ஒன்றாகவும் இது தோன்றவில்லை. இது என்னுடையது இல்லையோ, இதை என்னால் சிந்திக்க முடியுமா என்றும் தோன்றுகிறது."

இவ்வாறு இளையராஜா குறிப்பிட்டுள்ளார்.

**கார்த்திக்ராஜா, பவதாரிணி, யுவன்சங்கர்ராஜா**
**இளையராஜாவின் இசை வாரிசுகள்**

இசை உலகில், இளையராஜாவின் வாரிசுகளாக கார்த்திக்ராஜா, பவதாரிணி, யுவன்சங்கர்ராஜா ஆகியோர் திகழ்கிறார்கள்.

இளையராஜாவின் குடும்பத்தில் அவரது தம்பி கங்கை அமரனும் புகழ் பெற்ற இசை அமைப்பாளராக இருக்கிறார்.

இளையராஜாவின் வாரிசுகள் கார்த்திக்ராஜா, பவதாரிணி, யுவன்சங்கர்ராஜா மூவருமே அப்பா வழியில் இசையமைப்பாளர்களாகி விட்டார்கள்.

பவதாரிணி பாடகியாகவும், புகழ் பெற்றுள்ளார். "பாரதி" திரைப்படத்தில் "மயில் போல பொண்ணு ஒண்ணு" என்ற பாடலைப் பாடி தேசிய விருது பெற்றார். இந்தப் பாடலுக்கு இசை அமைத்தவர் இளையராஜா. பாடலை எழுதியவர் மு.மேத்தா.

ஏ.ஆர்.ரகுமான்

இளையராஜாவின் இசைக்குழுவில், 11 வயதில் கீ போர்டு வாசிப்பவராக சேர்ந்த ஏ.ஆர்.ரகுமான், இன்று உலகப்புகழ் பெற்ற இசை அமைப்பாளராக விளங்குகிறார்.

தன் இசைக்குழுவில், ஏ.ஆர்.ரகுமான் எப்படி சேர்ந்தார் என்பது பற்றி இளையராஜா கூறியதாவது:–

"மூடுபனி படத்துக்கு நான் இசை அமைத்துக் கொண்டிருந்த நேரத்தில், கீபோர்டு வாசிப்பவர், குடிபோதையில் வந்திருப்பது தெரிந்தது. உடனே அவரை வெளியே அனுப்பி விட்டேன். 'கீபோர்டு' வாசிக்கத் தெரிந்த வேறொருவர் தேவைப்பட்டபோது உடனடியாக யாரும் கிடைக்கவில்லை. அப்போது என் குழுவில் இருந்த ஒருவர் என்னிடம் வந்து, "எனக்குத் தெரிந்த ஒரு பையன் இருக்கிறான். அவன் ஓரளவு கீ போர்டு வாசிப்பான். அழைத்து வரட்டுமா?" என்று கேட்டார். "இதென்ன கேள்வி? உடனே அழைத்து வாருங்கள்" என்றேன்.

அடுத்த அரை மணி நேரத்தில் அந்த சிறுவனை அழைத்து வந்தார்கள். நான் அந்தச் சிறுவனிடம் கீபோர்டில் வாசிக்க வேண்டிய இசைக் குறிப்பை கொடுத்தேன். அதை வாசிப்பதில் அவனுக்கு கொஞ்சம் சிரமம் ஏற்பட்டபோது நானே அவன் கையைப் பிடித்து வாசிக்கச் சொல்லிக் கொடுத்தேன். அந்தச் சிறுவனும் புரிந்து கொண்டு நான் எதிர்பார்த்த மாதிரி வாசித்து விட்டான். பாடலும் நன்றாக அமைந்தது.

அந்த சிறுவன் வேறு யாருமல்ல, இசையமைப்பாளர் சேகரின் மகன் திலீப்தான் அவர். இந்த திலீப்தான் பின்னாளில் ஏ.ஆர்.ரகுமானாக இசை உலகுக்கு வந்தார்."

இவ்வாறு இளையராஜா கூறினார்.

சித்ரா, ஜென்சி, சுஜாதா, மகதி உள்பட பல பின்னணி பாடகிகளை அறிமுகப்படுத்திய பெருமை இளையராஜாவுக்கு உண்டு.

இளையராஜா இசை அமைத்த "நிழல்கள்" படத்தில், "பொன்மாலைப் பொழுது"

பாட்டை எழுதி, திரை உலகில் அடியெடுத்து வைத்தார், கவிஞர் வைரமுத்து. பாரதிராஜா இயக்கிய இந்தப்படம் **1980**–ல் வெளிவந்தது.

இலக்கியம்

இசையமைத்துப் பாடுவதோடு மட்டுமின்றி இலக்கியத்திலும் ஆர்வம் கொண்டவர், இளையராஜா.

"சங்கீதக் கனவுகள்", "வெட்ட வெளிதனில் கொட்டிக் கிடக்குது", "பால் நிலா பாதை", "துளிக்கடல்", "ஞான கங்கா", "வெண்பா நன்னூல் மாலை", "பள்ளியெழுச்சி பாவை பாடல்கள்" முதலான புத்தகங்களை எழுதியுள்ளார்.

ஆதிசங்கரரின் ஞான நூலை சமஸ்கிருதத்தில் ரமண மகரிஷி எழுதினார். தமிழில் அதை "விவேக சூடாமணி" என்ற பெயரில் இளையராஜா எழுதியிருக்கிறார்.

இலக்கிய ஆர்வம் பற்றி அவர் குறிப்பிடுகையில், "அவ்வப்போது கவிஞர் பொன்னடியான் எனக்கு தமிழ் இலக்கிய – இலக்கணம் கற்பிக்க வருவார். பிற்காலத்தில் பாடல்கள் எழுதவும், வெண்பா, கவிதைகள் போன்ற பலவற்றை எழுதும்போதும், அவர் முன்பு கூறிய விஷயங்கள் பெரிதும் உதவியிருக்கின்றன" என்று கூறியுள்ளார்.

பட்டங்கள்

இசைக்காக **3** முறை டாக்டர் பட்டம் பெற்றவர் இளையராஜா.

**1994**–ல் அரிசோனா பல்கலைக்கழகம் அவருக்கு டாக்டர் பட்டம் வழங்கியது. அதே ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக்கழகமும், அடுத்த ஆண்டில் மதுரை காமராஜர் பல்கலைக்கழகமும் "டாக்டர்" பட்டங்களை வழங்கின.

இளையராஜாவின் இசை பற்றி ஆய்வு மேற்கொண்டு, பாடகி அனுராதா ஸ்ரீராம் உள்பட பலர் முனைவர் பட்டம் பெற்றுள்ளனர்.

இசை ஞானி

"டாக்டர்" பட்டம் கிடைப்பதற்கு முன்பே, இளையராஜா பெற்ற பட்டம் "இசை ஞானி." இதை வழங்கியவர் முதல்–அமைச்சர்

கருணாநிதி.காரைக்குடியில் பட அதிபர் பழ.கருப்பையா நடத்திய விழாவில், இந்த விருது வழங்கப்பட்டது.

தமிழக அரசின் "கலைமாமணி" விருது, கேரள அரசின் "சிறந்த இசையமைப்பாள"ருக்கான விருது, ஆந்திர அரசின் "நந்தி" விருது உள்பட பல விருதுகளை இளையராஜா பெற்றுள்ளார்.

"ஹவ் டு நேம் இட்?", "நத்திங் பட் வின்ட்", "இன்டியா **24** ஹவர்ஸ்" ஆகிய பெயர்களில் இசை ஆல்பங்கள் வெளியிட்டுள்ளார்.

**855**–வது படம்

இளையராஜா பல்வேறு இந்திய மொழிகளிலும் 854 படங்களுக்கு இசை அமைத்துள்ளார். இசை அமைத்த பாடல்கள் எண்ணிக்கை 5 ஆயிரத்துக்கும் மேல்.

இளையராஜா இப்போது இசையமைத்துக் கொண்டிருக்கும் 855–வது படம் 'ஆ தினகளு' (அந்த நாட்கள்) என்ற கன்னடப்படம். தனது இசைப்பணிகளை சென்னை பிரசாத் ஸ்டூடியோவில் உள்ள தனக்கான நிரந்தர அறையில் இருந்து கவனிக்கிறார்.

இளையராஜாவை "அன்னக்கிளி" படத்தின் மூலம் இசை உலகுக்கு அறிமுகப்படுத்தியவரும், ராஜா என்ற பெயரை மாற்றி "இளையராஜா" என்ற பெயரை சூட்டியவருமான பஞ்சு அருணாசலம் கூறியதாவது:–

"தமிழ்நாட்டில் இந்தி எதிர்ப்பு இருந்த போதிலும், இந்தி சினிமாப் படங்கள் பாடலுக்காகவே இங்கே வெற்றிகரமாக ஓடின.

இந்திப் படங்கள் செலுத்தி வந்த ஆதிக்கத்தை தடுக்கக்கூடிய விதத்தில், இசையில் புதுமையைப் புகுத்தியவர் இளையராஜா. அதனால், இசையில் இளையராஜாவின் கொடி, வெகு உயரத்தில் பறந்தது; இன்னும் பறந்து கொண்டிருக்கிறது.

இசை உள்ளவரை இளையராஜாவின் புகழும் வாழ்ந்து கொண்டிருக்கும்."

இவ்வாறு பஞ்சு அருணாசலம் கூறினார்.

இறைவன் கருணை

இளையராஜா கூறியதாவது:–

"இசை தானாக வராது. யாரும் அழைத்து வந்துவிட முடியாது. அதுவாக என்னிடம் வந்தது. போட்டியும், பொறாமையும், குரோதமும் நிறைந்த இந்த உலகில் அன்பும், பாசமும் நேசமும் உள்ள மனித உறவுகளை காண்பதரிது.

இவ்வளவுக்கும் மத்தியில், என்னை தவிக்க விட்டு விடாமல், சப்த சுரமும், நற்றமிழும், பாடலும், நாதாமிர்தமாக – நதியாக – கடலாக இருக்கும் இசையிலே ஒரு துளியாக என்னை இறைவன் உட்கார வைத்தானே! இது, தகுதியற்ற என் மீது இறைவன் கொண்ட கருணையே அல்லாமல் வேறு என்னவாக இருக்கும்!

ஆலமரம்

மனித வாழ்க்கையில் சில மனிதர்கள் மட்டுமே ஆலமரம் போல் நின்று, வருகிறவர்களுக்கு நிழல் தருவதுடன் தங்கும் பறவைகளுக்கு இடம் கொடுப்பது போல, மற்றவர்களுக்கு உபயோகமாக தங்கள் வாழ்க்கையை கழிப்பார்கள்.

சாதாரணமான ஒரு இசை அமைப்பாளனான என்னிடம் வந்து தங்கிப்போனவர்களும் தாளாது போனவர்களும் இருந்தாலும், எத்தனையோ தயாரிப்பாளர்கள், நடிகர்கள், இயக்குனர்கள், இசைத்தட்டு – கேசட் விற்பனையாளர்கள் உயர்வதற்கு என் இசை ஒரு காரணமாக இருந்திருக்கிறது.

எனினும், இந்தப் பிறவியில் இவை எல்லாம் எனக்கு பெரிதல்ல. என் இசை, என் அன்னை மூகாம்பிகை, என் பிறவிப்பிணி ஒழித்த பகவான் ஸ்ரீரமணர் அருள் – இதையெல்லாம் அடைந்ததை மட்டுமே முக்கியமாக கருதுகிறேன்.

திருவண்ணாமலை என்ற ஒரு ஸ்தலம் இல்லாது போயிருந்தால், என் கதி என்னவாகியிருக்கும்? அதைச்சுற்றிச் சுற்றி இந்த உடம்பைத் தேய்ப்பதைத் தவிர எனக்கு ஏதும் உயர்வாகத் தோன்றவில்லை!"

இவ்வாறு இளையராஜா கூறினார்.

(இளையராஜா பற்றிய தொடர் இத்துடன் நிறைவடைந்தது.